# கபிலர் 14135

இது

திருச்சிராப்பள்ளி, எஸ். பி. ஜி. கல்லூரி,

தமிழ்ப் பெருங் கணக்காயர்

நடுக்காவேரி

மு. வேங்கடசாமி நாட்டார்

எழுதியது.



கரந்தைத் தமிழ்ச் சங்கத்தாரால்
வெளியிடப் பெற்றது.

TRICHINOPOLY.
Jegam & Co., Dodson Press.

1921

# பதிப்புரை

**உலகத்தில்** ஒவ்வொரு நாட்டினரும் தத்தம் முன்னோர்களின் வரலாறுகளைத் தெரிந்துகொள்ள அவாவுகின்றனர். தமது முன்னேற்றத்திற்குத் தம் முன்னோர்களைப்பற்றிய உணர்ச்சி ஒருதலையாக வேண்டற்பால தொன்றேயாம். நம் முன்னோராகிய தமிழ் மக்கள், பழைய நாளில், பல துறைகளிலும், எத்துணை மேன்மையுற்று விளங்கினார்கள் என்பதனை, அக்காலத் தெழுந்த தமிழ் நூல்களினின்றும், தமிழ் மொழியின் திருந்திய நிலையினின்றும் அறிந்துகொள்ளலாகும். பழைய தமிழ்ப் புலவர்களின் வரலாறுகளோடு, அவர்களியற்றிய நூல்களின் பொருணுட்பங்களையும் நம்மனோர் அறிந்துகொள்ளுமாறு செய்யின், அது பொதுவாகத் தமிழகத்தின் நிலைமையையே அறிவிக்கதாகும். மொழி வளர்ச்சிக்கும் அஃது ஏற்ற வழியாகும். இக்கருத்துப் பற்றியே, நல்லிசைப் புலவர்களின் வரலாறுகளைத், தக்க புலவர்களைக் கொண்டு, ஆராய்ச்சி முறையில், செவ்விபெற எழுதுவித்து வெளியிடுதலை யாம் ஓர் சிறந்த கடனாக மேற்கொண்டுள்ளோம்.

ஆனல், இவ்வரும் பணியை யியற்றுவதில் பல இடையூறுகள் தலைப்படுகின்றன. தமிழ்ப் பெரும் புலவர்களைப்பற்றிய சான்றுகள் பழைய நூல்களில் அருகிக் கிடைக்கின்றன. அவர்களைப் புரந்த அரசர்களைப் பற்றிய செய்திகள் கல்வெட்டுகளிலும், பட்டயங்களிலும் காணப்படுகின்றன. இவ்வாதாரவுகளைத் துருவி ஆய்ந்து, தமிழ்ப் பெரும் புலவர்களின் உண்மை வரலாறுகளையும், அவர்களின் அறிவு,

செயல், ஒழுக்கங்களையும், அவர்களின் கால இயல்பு, நிகழ்ச்சி முதலியவற்றையும் வரன்முறையாக எழுதித் தரும் ஆற்றலுடைய பெரும் புலவர்களும் மிகச் சிலர். இத்துணை முட்டுப்பாடுகளையும் கடந்து வெளி வரும் நூல்களைக் கற்கும் தகுதியுடையாரும், வாங்கி ஆதரிப்பாரும் அதனினும் சிலர். என்றாலும், இத் தடைகளால் பின்னிடாது, தக்க புலவர்களின் உதவியால், ஆராய்ச்சி முறையில் எழுதத் துணிந்து, கிடைத்த சில சான்றுகளைக்கொண்டு இயற்றிமுடித்த நூல்களைப் பெரியார் போற்றி, எம்மை இம்முயற்சியில் ஊக்குவார்கள் என்று துணிவுடையேம்.

**ஆங்கிலப்** புலவர்களின் வரலாறு பற்றிய ஆராய்ச்சி நூல்கள்போல் விரிவாக எழுத விருப்புடையே மெனினும், போதுமான ஆதாரங்கள் இன்மையானும், தமிழ்ப் புலவர்களிற் பெரும்பாலர் ஆங்கிலத் துறையின் பயிலுதலை அவாவி நிற்றலானும், அப்பெற்றியுடைய நூல்களை வெளியிடுதற்கு அடிப்படையான முயற்சியில் இதுபோது நிற்கின்றேம்.

யாம் மேற்கொண்ட இக்கொள்கையை நிறைவேற்றுதற்கு முன்வந்து உதவியவர், எம் துணைவரும், திருச்சிராப்பள்ளி, எஸ்.பி.ஜி. கல்லூரித் தலைமைத் தமிழ்ப் பெருங் கணக்காயருமாகிய திருவாளர் **பண்டிதர் ந. மு. வேங்கடசாமி நாட்டார்** அவர்கள் ஆவர். அவர்கள், முன்பு '**நக்கீரர்**' என்ற நூலை இயற்றித் தந்தாங்கு, இப்பொழுது '**கபிலர்**' என்னும் புலவர் வரலாற்றையும் எழுதித் தந்தார்கள்.

'**நக்கீரர்**' வெளிவந்தவுடன் அறிஞர் அனைவரும் அதனை ஏற்றுப் பாராட்டினர். அதன் சிறப்புணர்ந்து

சென்னைப் பல்கலைக் கழகத்தாரும், அதைப் பி.ஏ. வகுப்பிற்கு ஆராய்ச்சிப் பாடமாகத் தக்கதெனக் கொண்டனர். யாம் இது பற்றிப் பெரிதும் மகிழ்ந்து, அவர்க்கு நன்றி பாராட்டுகின்றேம்.

**இப்பொழுது** வெளிவரும் '**கபிலர்**', 'தமிழ்ப் புலவர் ஒன்றும் அறியாதார்' என்னும் அகந்தையாளரின் வெற்றுரையைப் பொய்யாக்கி, 'தமிழ்ப் புலவரே புலவர்' என்பதையே மெய்யாக்கித், திருவாளர் **நாட்டார்** அவர்களின் விரிந்த கல்வியையும், நுணுகிய ஆராய்ச்சியையும், திருந்த எழுதும் திறனையும் வெளியாக்கும் என்னும் பெருந்துணிபுடையேம்.

'**நக்கீரரை**' வெளியிடப் பல அன்பர்கள் முன்வந்தது போலவே, '**கபிலரை**' வெளியிடக், கோயமுத்தூரை யடுத்த ஒப்பிலிபாளையத்தில் தமிழ்ப் பணியாற்றி வரும் திருவாளர் **ஆர். வி. இலக்குமண நாயுடு** அவர்கள் வலிய வந்து, பொறுப்பைத் தனிமையில் ஏற்றுக்கொண்டனர். இஃது அவர்கள் கடமைதானெனினும், கடமையின்னதென் றுணரலாகா இக் காலத்தில் இவ் வரிய செயல் வியப்புடைத்தன்றே! இவர்களது இத்தகைய செயல் மேன்மேலும் பெருகுவதாகவென வாழ்த்துவதல்லது, வேறென் செய வல்லேம்?

**பிற** புலவர்களின் வரலாறுகளையும் இயலும் வரை வெளியிட நினைக்கின்றேம். இத்தகைய ஆராய்ச்சியுரைகளை எழுதித் தருமாறு ஏனைப் புலவர்களையும் பின்னும் வேண்டுகின்றேம்.

கரந்தைத் தமிழ்ச் சங்கம்,
துன்மதி ௵ சித்திரை௴ கஉ

**த. வே. உமாமகேசுவரன்.**
பி.ஏ., பி.எல்.,
சங்கத்தலைவர்.

# முகவுரை.

---

எக்காலத்தும் செவ்வி புலராது. நிலையுதலுற்று, மலர்ந்து, தேன் பிலிற்றும் சீர்மையால், செந்தளிர்க் கற்பகத்தின் திருமலரே போலும், நம் தெய்வச் செந்தமிழ் மொழியினைப் பண்டைநாளிலே ஆராய்ந்து, புலமை முற்றிய, நல்லிசைப் புலவர் பெருமக்களுள்ளே, **கபிலர்** என்னும் சான்றோரைப் பற்றி ஆராய்ந்து எழுதிய இந்நூல், புலவர் வரலாற்றுக் கோவையுள் இரண்டாவதாகும். இதிலே, தமிழ்ச்சங்க வரலாறும், கபிலரது காலமும், குறிஞ்சிப்பாட்டு ஆராய்ச்சியும் பொருந்திய வளவு விரிவாகவே எழுதப்பட்டுள்ளன. கபிலரது வாழ்க்கை வரலாறு, பெரும்பாலும் பழைய பாட்டுக்களின் உதவிகொண்டு ஒருவாறு தொடர்புபடுத் தெழுதியிருக்கின்றது. பழைய பாட்டுக்களின் பொருள்களை உரை நடையில் எழுதுங்கால், அவற்றிலுள்ள அடைமொழிகளைப் பெரிதும் அகற்றிவிட் டெழுதினன்றி, நடைபழகு செவ்விபெறாது என அறியப்படினும், முன்னாளில் எவ்வெப் பொருள் எப்படி யெப்படிக் கூறப்பட்டன வென்பது புலப்பட வேண்டுமெனக் கருதியே, புறப் பாட்டுக்களையும், குறிஞ்சிப்பாட்டையும் உரைநடைப் படுத்தும்வழி, அடைகள் பெரிதுந்தழுவிக் கொள்ளப் பட்டன. நல்லிசைப் புலவர்கள் உலகியற் பொருள்களை எங்ஙனம் கூர்ந்தறிந்து; பொருந்துமாறு உவமை கூறியுள்ளார்கள் என்பதனை யாவரும் அறிய வேண்டு

மெனக் கருதி, இந்நூலிலே உவமைகள் பெரும் பாலன தொகுத்துக் காட்டப் பட்டுள்ளன. அறிஞர் கள் இதிற் காணப்படும் பிழைகளை எனக்கு அறிவித் து, இதனை ஆதரிக்குமாறு வேண்டுகிறேன்.

பலவான்குடி, மணிவாசக சங்கத்தின் தலைவரும், இருபெருஞ் செல்வமும் ஒருங்கு வாய்ந்த உத்தமரும் ஆகிய, திருவாளர் ராம. கு. ராம. இராமசாமிச் செட்டி யார் அவர்களின் நல்விருப்பின்படி, அச்சங்கத்தின் ஒன்பதாம் ஆண்டுத் திருவிழாக் காலத்தில், திருக் கோவலூர் ஆதீனம், திருப்பாதிரிப்புலியூர் ஞானி யார் மடத்தின் தலைவரும், கல்விக் கடலின் நிலைகண் டுணர்ந்த பெரியாருமாகிய உயர் திரு. சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள் தலைவர்களாக வீற்றிருக்க நடைபெற்ற பேரவையில், இந்நூற் பொருள் சுருக்கமாக வுரைக்கப் பெற்று, மதிப் பெய்தியது.

இதனை அச்சியற்ற வேண்டும் பொருளுதவி புரிந் தார், கோயமுத்தூரை யடுத்த ஒப்பிலிபாளையத்தி லுள்ள செல்வக் குரிசிலும், அவ்வூர்க் கம்பர் கழகத் தின் தலைவரும் ஆகிய, என் அருமை நண்பர், திரு வாளர் R. V. இலக்குமண நாயுடுகோர் ஆவர். அவர் மேன் மேலும் எல்லாச் செல்வமும் ஓங்கப்பெற்று நீடுவாழ வேண்டுமெனத் திருவருளை வழுத்துவ தன்றி, யான் புரியும் கைம்மாறு யாதுளது.?

இதனைக் கரந்தைத் தமிழ்ச் சங்க வாயிலாக வெளிப்படுத்த அன்புடன் ஏற்றுக் கொண்ட, அதன்

தலைவரான, திருவாளர் த. வே. உமாமகேசுவரம் பிள்ளை, B.A.,B.L., அவர்களுக்கு நன்றி பாராட்டும் கடப்பாடுடையேன்.

ஒன்றுக்கும் பற்றாத என்னை இம் முயற்சியுட் புகுத்தி இயக்குவித்தருளும் இறைவன் றிருவருளில் பாதினை யறிந்து பாங்கலாம் வழுத்துகேன்!

மு. வே.

# கபிலர்.

## ஒன்றாம் அதிகாரம்.

## தமிழ்ச்சங்க வரலாறு.

### காப்பு.

*அகனும் புறனு மானாய பொருளாய்த்*
*திகழு மறிவின் றெளிவாய்—நிகரிலின்பச்*
*செந்தமிழே யென்னவுயர் செம்பொருளை யெப்பொழுதுஞ்*
*சிந்தித்து நெஞ்சேநீ சேர்.*

### தோடக்கம்.

உலகத்தில் மக்களாய்த் தோன்றினோர் கல்வியறிவு கைவரப் பெற்றவரேல் விண்ணவரே போல்வ ரென்பது இருவர்க்கும் ஒப்ப வழங்கும் ‘புலவர்’ என்னும் பெயரானே தெளியப்படும். *‘தேவரனையர் புலவரும்’, † ‘தேவரே கற்றவர்’ என்னும் ஆன்றோர் கூற்றுக்களும் காண்க. கற்றோருள்ளும் நல்லிசைப் புலமை வாய்ந்த சான்றோர் பெருமை அளப்பரிய தொன்றாகும். ‡ நான்முகக் கடவுளானவர் கலைமகளை நாவிலே

* நான்மணிக்கடிகை. † சிறுபஞ்ச மூலம்.

‡ ‘கலைமகள் வாழ்க்கை முகத்த தெனினு—மலரவன் வண்டமிழோர்க் கொவ்வான்’—நீதிநெறி விளக்கம்.

வைத்துளரேனும் மேன்மை பொருந்திய தமிழ்ப் புலவர்க் கொல்வார் என்று ஓர் புலவர் பெருந்தகை கூறுமாறு புகழுடம்பால் நிலைபெற்று விளங்கும் பண்டைத் தண்டமிழ்ப் புலவர்களின் அறிவு மாட்சி யாரால் எடுத்தியம்பலாகும்? அன்னவர் பலர் ஒருங் கிருந்து தமிழாராய்ச்சி செய்ய, மன்னவர்கள் உட னிருந்து கேட்டு இன்புற்று வேண்டுவன நல்கிப் போற்ற, வரம்பிலறிவனாகிய முதல்வனும் அகத்தும் புறத்தும் தோன்றி அருள் வழங்கப் பல்லாண்டு பல் லாண்டு நிகழப் பெற்ற பெருமையுடையது நம் தமிழ்ச்சங்கம். சங்கப் புலவருள்ளே பொங்கொளி வாய்ந்த செம்மணி விளக்குப்போல மெய்ம்மையின் மேம்பட்டு விளங்கினார் **கபிலர்** என்னும் புலவர் பெருந் தகை.

இனித், தமிழ்ச்சங்க உண்மையினை இக்காலத்துச் சிலர் ஐயுற்றுத் திரிபுற எழுதி வருகின்றனர் ஆக லின் முதற்கண் அதனை ஆராய்ந்து உண்மை நிலை நாட்டுதல் கடனாகின்றது.

## தமிழ்ச் சங்க நிகழ்ச்சி.

### திருவிளையாடற் புராணம் கூறுமாறு.

'எல்லார்க்கு மெளிய நெல்லும் நீரும் முதலியன தோன்றும் பிறநாடு போலன்றி, வரைய சாந்தமும் திரைய முத்தமும் தோன்றும் சிறப்புடைய செந்த மிழ்ப் பாண்டி நாட்டில் மதுரை யென்னுந் தலைநகர மர்ந்து திங்களின் வழித்தோன்றலான பாண்டியன் வங்கியசேகரன் செங்கோலோச்சி வருவானாயினன்.

அந்நாளில் நான்முகப் புத்தேளானவர் காசித்திருப் பதியின்கண் ஒருபது பரிமா வேள்வி செய்து முடித்து, நீராடற்பொருட்டு நாவின்செல்வி, சாவித்திரி, காயத்திரி என்னும் நங்கையர் மூவருடனும் கங்கையை நோக்கிச் செல்வாராயினர். செல்லும் நெறிக்கண் நாவின் செல்வியானவள் விண்ணிடை யியங்கும் விஞ்சைமாதொருத்தி பாடும் இசையினில் உள்ளம் போக்கிநின்று வரவுபாணித்தாளாக, நதியை யடைந்த மலர்மிசைக் கடவுள் ஏனை நங்கைய ரிருவரோடும் நீராடிக் கரையேறினர். அப்பொழுது பாமகள் அங்குவந்து, 'என்னையன்றி நீர் நீராடியவாறென்னை?' என வெகுளாநிற்ப, அது கண்ட தாமரைக்கிழவர், 'குற்றம் நின்மேலதாகவும் நம்மை நீ சினவலுற்றமையின் பெருந்தீங்குடையை யாயினை. இனைய தீங்கினை எண்ணறுமாக்களாகத் தோற்றமுற்று ஒழிக்கற்பாலை.' எனச்சபித்தனர். சபிக்க, அப்பொற்றொடி மடந்தை அஞ்சிப் புலம்பி அவலமுற்று, 'எம்பெருமானே! நுமது ஆருயிர்த் துணையாகிய யானும் மக்களுடம்பெடுத்து மயங்குவேனோ!' என்று பரிந்து கூறினள். அவரும், அன்னவள் இடரகலக் கருதிப், 'பூங்கொம்பனையாய்! நினக்கு உடம்பா யமைந்த ஐம்பத்தொரு முதலெழுத்துக்களில் ஆகாரம் முதல் ஹகாரம் இறுதியாகவுள்ள நாற்பத்தெட்டும் புவியிடை நாற்பத்தெண் புலவராய்த் தோன்றுவவாக. அவ் வெழுத்துக்கள் எல்லாவற்றினும் கலந்துநின்று, அவற்றை வேறுவேறாக இயக்குவிக்கும் தலைமையுடைய அகரத்திற்கு, அதுபோன்று உயிர்ப்பொருளும் அல்பொருளுமாகிய யாவற்றினுங் கலந்துநின்று அவற்றை இயக்

குளிக்கும் தலைமையுடைய ஆலவாயடிகளை முதல்வராகலின், அம்முறையானே அவர் ஒரு புலவராய்த் திருவுருத் தரித்துப் புலவர் நாற்பத் தொன்பதின்மரென்னுமாறு சங்கமமர்ந்து, அவரவர்க்கு உண்ணின்று, அறிவினை விளங்கச்செய்து புலமை புரந்தருள்வர்.' என்றனர். அவ்வாறே நாற்பத்தெட்டெழுத்துக்களும் புவியின்கண் வேறு வேறு மக்களாய்த் தோற்றஞ் செய்ய, அவரெல்லாம் ஆரியத்தொடு பதினெண் மொழிகளும் ஆராய்ந்து, செவ்விய மதுரஞ் சேர்ந்த நற்றமிழாம் சீரிய மொழியினையும் நன்காராய்ந்து, பன்மாண் கலையுந் தேர்ந்து, புலமையிற் றலைமை சார்ந்தனர். அவர்கள் வயிரமணி முதலியன இழைக்கப் பெற்ற கலன்களையன்றிக் கண்டியென்னும் கொழுமணிக்கலனும் பூண்பவர்; தண்ணிலாப் போலும் வெண்ணீறு அணிபவர்; வழுவற ஆராய்ந்த செஞ்சொற்களாற் றொடுத்த பாமாலையும், பூமாலையுஞ் சூட்டிச் சிவனை வழிபடும் இயல்பினர். அவரெல்லாம் நாடுகடோறும் சென்று சென்று, ஆங்காங்குள்ள புலவர்களையெல்லாம் புலமையால் வென்று வென்று, பாண்டி நாட்டு மதுரை நோக்கி நண்ணுவாராயினர். அப்பொழுது ஆலவாயமர்ந்த அவிர்சடைக் கடவுளானவர் மறைமுடியுந் தொடற்கரிய திருவடி நிலந் தோயப் போந்து, ஆண்டு வருகின்றாரை நோக்கி, 'நீவிர் யாவிரோ? எங்கு நின்று போதுகின்றனிர்?' என்ன, அன்னவர், 'யாங்கள் வித்தை வல்லேம்; ஈண்டுப் பெருளை நாட்டின் வருகின்றேம்.' என்று கூறினர். கூற, அவரும், 'நீவிர் அருட்பெருங் கடலாய ஆலவாய்ப் பெருமான் றிருவடிகளை இறைஞ்சு

தல் வேண்டும்.' என்று கூறி, அழைத்துச் சென்று, நஞ்சக்கறை பொலிந்த திருமிடற் றிறையைப் பணியுமாறு புரிந்து, மறைந்தருளினர். புலவர்கள் விம்மித மெய்தி, விண்ணிழி விமானத்து மேவிய கண்ணுதலைப் பலப்பல செய்யுட்களாற் பாவி வணங்கி, மீண்டு, பாண்டியனைச் சென்று கண்டார்கள். மன்னவனும் அன்னவர்தம் அறிவும், செறிவும், ஒழுக்கமும், விழுப்பமும் நோக்கி, இப் பெரியோர்கள் இவண் எய்தப் பெற்றேம் என்று உவகை பூத்த உள்ளத்தனய்த், திங்களங்கண்ணி வேய்ந்த செஞ்சடைப் பரமர் கோயிலின் வடமேற்கில் ஓர் புடைச் சங்க மண்டபம் உண்டாக்கி, அவர்களை அங்கிருக்கச் செய்து, வரிசை பல நல்கா நின்றனன். அது கண்ட முன்னைப் புலவரெல்லாம் உளம் புழுங்கி, அவர்களை நெருங்கி வாது புரிந்து, தோற்றுத் துயருழந் தேகினர்கள். இங்ஙனமே வேறு புலத்திருக்கும் கேள்வி வல்லோரும் வந்து வந்து, தருக்கினற் பற்பல வினைக்களை யெழுப்பிப், பட்டிமை புரிந்து, தோல்வியுற் றேகினர். இன்னணம் யாவரையும் சொற்போரில் வென்று வைகும் அன்னவர், மலைமகளொருபால் நீங்காத் தலைவரை யடைந்து, வணங்கி, 'எந்தாய்! யாவரும் அடுத்தடுத் திங்கு வந்து எம்மொடு பட்டிமை புரிகின்றனர்; ஆகலின், அவரவர் புலமையை ஆராய்ந்து அளந்து அறிவிப்பதாய சங்கப் பலகை யொன்று தந்தருள வேண்டும்.' என்று குறையிரந்து நின்றனர். வேண்டுவார் வேண்டுவதை யீந்தருளும் கருணை வள்ளலான கடவுளும், ஆண்டு ஓர் பலகையுடன் புலவராய்த் தோன்றிச், 'சதா

மாய் இருசாண் அளவுள்ளதாகும் இப் பலகை மதியினும் வாலிது; மந்திர வலியது; புலத்துறை முற்றிய நம்மனோர்க் கெல்லாம் முழம் வளர்ந்து இருக்கை நல்குவது; இது நமக்கு அளவுகோலா யிருக்கும்,' என்றியம்பி அதனை யீந்தனர். நாமகளுருவாய் வந்த நாவல ரெல்லாம் வெள்ளைத் தாமரை யனைய அப்பலகையைப் பெற்றுக், கோயிலை வலம் வந்து, கழகத்தை யடைந்தனர். அடைந்த பின், நறுமலர் தூவி, நறும்புகை யெடுத்துப், பலகையை வழிபட்டு, நக்கீரர் அதன் கண் ஏறினர். கபிலரும், பரணரும் ஏறினர். இருங்கலை வல்லோரெல்லாம் இம்முறை யேறி யேறி ஒருங்கு இனிதிருந்தனர். பலகையும், சுருங்கி நின்று உரை செய்வார்க்கு விரிந்து தோன்றும் நூல் போல, யாவர்க்கும் வளர்ந்து இடங்கொடுத்தது.

'மேதகு சான்றோர் நூலின் வினைபொருள் விளக்கத் தம்மில்
ஏதுவு மெடுத்துக் காட்டும் எழுவகை மதமுங் கூறும்
போதனை தெளிந்த கிள்ளை பூவையே புறம்பு போந்து
வாதுசெய் வார்கள் வந்தால்மறுத்துமேற் கிறுத்தும் மன்னோ!'

'இங்ஙனம் புலவர் நாற்பத்தெண்மரும் தாம ஆராய்ந்தறிந்த கல்வியின் பயன் விளங்குமாறு தூய்மை மிக்க பாட்டுக்கள் பல பாடிக் கொண்டிருந்தனர். பாட்டுக்களும் பலவாயின. அவை ஒன்று ஒன்றனோடு சொல் வளனும் பொருள் வளனும் ஒத்துத் தோன்றலின், அவற்றின் வேறுபாடறியாமல், 'நமது பாட்டு அது; எமது பாட்டு இது' என்று கூறிச் சங்கப் புலவரும் மாறுபாடுற்றனர். சொல்லும்பொருளுமாய் விளங்கும் சொக்கப் பெருமானும் அவரது

மாறு பாட்டினை யகற்றக் கருதி, ஓர் நாவலராய்த் தோன்றி, அவரவர் பாட்டுக்களை அவரவர்க்கு எடுத்தளித்தனர். அவை பெற்ற புலவர்கள், 'நீரும் எம்முடனொருவராய் உயர்வுற வாழ்வீராக!' எனவேண்டிக் கொள்ள, நாவலராய் வந்த இறைவரும், அக்கனமாப் பலகையென்னும் பொன்னாரத்திற் சூழப் பதித்த மணிகள்போல் ஏனைப்புலவர்கள் விளங்காநிற்க, நடுவிற் பதித்த குருமணி போன்று நண்ணி வீற்றிருந்தருளினார். புலவரெல்லாரும் தம் மதி நலம் தோன்றப் பின்னரும் பற்பல பாட்டுக்கள் பாடி வாழ்ந்து வந்தனர்' என்பது. *

களவியலுரை கூறுமாறு.

'தலைச்சங்கம், இடைச்சங்கம், கடைச்சங்கமென மூவகைப் பட்ட சங்கம் இரீஇயினார் பாண்டியர்கள். அவருள், தலைச்சங்கமிருந்தார், அகத்தியனாரும், திரிபுரமெரித்த விரிசடைக் கடவுளும், குன்றெறிந்த முருக வேளும், முரஞ்சியூர் முடி நாகராயரும், நிதியின் கிழவனும் என இத்தொடக்கத்தார் ஐஞ்ஞூற்று நாற்பத்தொன்பதின்மர் என்ப. அவருள்ளிட்டு நாலாயிரத்து நானூற்று நாற்பத்தொன்பதின்மர் பாடினாரென்ப. அவர்களாற் பாடப்பட்டன, எத்துணையோ பரிபாடலும், முதுநாரையும், முதுகுருகும், களரியாவிரையும் என இத்தொடக்கத்தன. அவர் நாலாயிரத்து நானூற்று நாற்பதிற் றியாண்டு சங்க மிருந்தா

* இதனை யடுத்துப் புராணத்திற் கூறப்பட்ட 'தருமிக்குப் பொற்கிழி யளித்தது' முதலிய வரலாறுகள் 'நக்கீரர்' என்னும் புத்தகத்திற் காண்க.

ரென்ப. அவர்களைச் சங்கம் இரீஇயினார் காய்சின வழுதி முதலாகக் கடுங்கோன் ஈறாக எண்பத்தொன்பதின்மர் என்ப. அவருட் கவியரங் கேறினார் எழுவர் பாண்டிய ரென்ப. அவர் சங்கமிருந்து தமிழாராய்ந்தது கடல் கொள்ளப்பட்ட மதுரை யென்ப. அவர்க்கு நூல் அகத்தியம்.

'இனி, இடைச் சங்கமிருந்தார் அகத்தியனாரும், தொல்காப்பியனாரும், † இருந்தையூர்க்கருங் கோழியும், மோசியும், வெள்ளூர்க் காப்பியனும், சிறுபாண்டரங்கனும், ‡ திரையன் மாறனும், துவரைக் கோமானும், கீரந்தையும் என இத் தொடக்கத்தார் ஐம்பத் தொன்பதின்மர் என்ப. அவருள்ளிட்டு மூவாயிரத் தெழுநூற்றுவர் பாடினா ரென்ப. அவர்களாற் பாடப்பட்டன கலியும், குருகும், வெண்டாளியும், வியாழமாலை யகவலும் என இத்தொடக்கத்தன என்ப. அவர்க்கு நூல் அகத்தியமும், தொல்காப்பியமும், மாபுராணமும், இசை நுணுக்கமும், பூத புராணமும் என இவை யென்ப. அவர் மூவாயிரத் தெழுநூற் றியாண்டு சங்கமிருந்தா ரென்ப. அவரைச் சங்கம் இரீஇயினார் ‡ வெண்டேர்ச் செழியன் முதலாக முடத்திருமாறன் ஈறாக ஐம்பத் தொன்பதின்மர் என்ப. அவருட் கவியரங் கேறினார் ஐவர் பாண்டிய ரென்ப. அவர் சங்கமிருந்து தமிழாராய்க்

† 'இருந்தையூர்க் கருங்கோழி மோசியாரும்' என்பது சிலப்பதிகார வுரைப்பாயிரம்.

‡ 'மதுரை யாசிரியன் மாறனாரும்' என்பது சிலப்பதிகார வுரைப்பாயிரம்.

‡ 'விண்டேர்ச் செழியன்' என்றுங் கூறுவர்.

தது கபாடபுரத்தென்ப. அக் காலத்துப் போலும் பாண்டிய நாட்டைக் கடல் கொண்டது.

'இனிக், கடைச்சங்கமிருந்து தமிழாராய்ந்தார் சிறுமேதாவியாரும், சேந்தம் பூதனாரும், அறிவுடையனாரும், பெருங்குன்றூர் கிழாரும், இளந்திருமாறனும், மதுரை யாசிரியர் நல்லந்துவனாரும், மருதனிளநாகனாரும், கணக்காயனார் மகனார் நக்கீரனாரும் என இத்தொடக்கத்தார் நாற்பத் தொன்பதின்மர் என்ப. அவருள்ளிட்டு நானூற்று நாற்பத் தொன்பதின்மர் பாடினா ரென்ப. அவர்களாற் பாடப்பட்டன நெடுந்தொகை நானூறும், குறுந்தொகை நானூறும், நற்றிணை நானூறும், புறநானூறும், ஐங்குறு நூறும், பதிற்றுப் பத்தும், நூற்றைம்பது கலியும், எழுபது பரிபாடலும், கூத்தும், வரியும், சிற்றிசையும், பேரிசையும் என்று இத் தொடக்கத்தன. அவர்க்கு நூல் அகத்தியமும், தொல்காப்பியமும் என்ப. அவர் சங்கமிருந்து தமிழாராய்ந்தது ஆயிரத் தெண்ணூற்றைம்பதிற்றி யாண்டு என்ப. அவர்களைச் சங்கம் இரீஇயினார் கடல் கொள்ளப்பட்டுப் போந்திருந்த முடத்திருமாறன் முதலாக உக்கிரப் பெருவழுதியீறாக நாற்பத் தொன்பதின்மர் என்ப. அவருட் கவியரங்கேறினார் மூவர் பாண்டிய ரென்ப. அவர் சங்க மிருந்து தமிழாராய்ந்தது உத்தர மதுரையென்ப.' என்பது.

இவற்றுள் புராண கதையானது இற்றை நாள் ஆராய்ச்சியாளர்க்குப் புதுமையுடைத்தாய்த்தோன்றும். எனினும், உலகத்து வழங்கும் கதைகள் ஒவ்வொன்றும் யாதானும் ஓர் உண்மையை அடிப்படை

பாகக்கொண்டே யெழுந்தனவாம் என்பது ஆராய்ச்சியாற் பெறப்படுதலின், இதனினின்று அறியலாகும் உண்மையினை அறிந்து கொள்ளுதல் கடனாம். பன்னூறாண்டுகளின் முன்னர் மதுரையில் தமிழ்ச்சங்கம் நடைபெற்றது எவராலும் மறுக்கவொண்ணாததோ ருண்மையாகும். இதனை அடிப்படையாக் கொண்டே இக்கதை யெழுந்தது. வடமொழியிற் புராண மெழுதினோர், அக்காலத்துத் தமிழ்ச்சங்க நிகழ்ச்சி எவராலும் ஐயுறவின்றித் துணியப் பட்டிருந்தமையின், அதனை முதலாகக் கொண்டு, செவி வழக்காக வந்த சில செய்திகளோடு தாம் புதுத்தக் கருதியவற்றை உருவகப் படுத்துக் கூறியுள்ளாரென்பது தோற்றம். கங்கைக் கரையிலிருந்த வடமொழி யெழுத்துக்களில் ஆகாரம் முதலிய நாற்பத்தெட்டும் நாற்பத்தெண் புலவராக, அப்புலவர்கள் பாண்டி நாட்டு மதுரையை அடைந்து தமிழாராய்ந்தனர் என்று கூறியவர் கருத்து, வடமொழியின் றொடர்பு தமிழுக்கு உண்டென்றேனும், வடமொழி வாணர்கள் தென்னாடு போந்து தமிழை வளம் படுத்தினரென்றேனும் காட்டுவதாகல் வேண்டும். அவர் கருத்து யாதாயினும் ஆக. வட நாட்டிற்கு ஆரியம் போன்று, தென்னாட்டிற் குரிய தொன் மொழி தமிழென்றும், தமிழானது வட நாட்டவரும் விரும்பிக் கற்குமாறு அத்துணை அழகும், திருத்தமு முடையதாய் விளங்கிற் றென்றும், இக் கதையிலிருந்து புலனாகின்றது. இங்ஙனம் தமிழ் பயின்ற வடமொழி வாணர்கள் தமது மொழியில் அபிமானமுடையவர்களாயின், தமிழிலுள்ள நலங்களைத் தம் மொழியில்

பெயர்த்துக் கொண்டிருக்கவே வேண்டும். பிறமொழி பயின்றவர் அப்பயிற்சியின் பயனாகத் தமது மொழிக்கு யாதேனும் நலம் புரியாவிடின், அன்னாரைத் தாய்மொழியினும் மிக்க பற்றுடையரென யாங்ஙனம் கூறுவது? இனிக், களவியலுரையானது, கடைச்சங்கமிருந்து தமிழாராய்ந்தார் நாற்பத்தொன்பதின்மர் என்றதற் கேற்பவே, புராணமும், இறையனாருடன் சங்கப் புலவரை நாற்பத் தொன்பதின்மராகக் கூறிற்று. இத் தொகை பெறுதற் பொருட்டே வடமொழி யெழுத்துக்களில் ஈற்றிலுள்ள சில எழுத்துக்கள் கழிக்கப் பட்டன போலும்? இனி, வடவெழுத்துக்கள் ஐம்பத்து மூன்று எனச் சில நூல்கள் கூறாநிற்கும். நன்னூலாரும் அங்ஙனமே கூறினார். ஐம்பத்தொன்று எனச் சில நூல்கள் கூறுகின்றன. இந்நூல் ஐம்பத்தொன்று கொண்டு, அவற்றுள் இரண்டினைக் கழித்துவிட்டது. மாகேச்சுர சூத்திரங்கள் நாற்பத்திரண்டு எழுத்துக்களை யெடுத்துக்கூறுகின்றன கூட்டெழுத்து முதலியவைகளைச் சேர்த்தும் சேர்க்காதும் கணக்கிடுதலின் இவ்வேறுபாடுகள் நிகழ்கின்றன. நக்கீரர், கபிலர், பரணர் என்னும் மூவர் பெயரையும் புராணம் சிறந்தெடுத்துக் கூறுவது, அவர்களது பெருமைக்குச் சான்றாகும். நம்பியாண்டார் நம்பிகளும் இம் மூவர் பெயரையே விளந்தோதினமை காண்க. புராணங் கூறுகிற வேறு சில தெய்விக நிகழ்ச்சிகள் நம் ஆராய்ச்சிக்கு எட்டுவனவல்ல. அவை வேறு நூல், உரைகளாலும் ஆதரிக்கப்படுகின்றன. நம் ஆராய்ச்சியின் முடிபு யாதாயினும், பரஞ்சோதி முனிவ ரியற்றிய திருவிளையாடற்

புராணம் கற்பவர்க்கு அன்பினைப் பெருகச் செய்து இன்பம் விளைக்குமென்பது ஒருதலை.

இனி, இறையனார் களவியலுரையானது பெரிதும் மதிப்பிற்குரிய தொன்று. இவ்வுரை கூறும் முச்சங்க நிகழ்ச்சியெல்லாம் வரலாற்று முறையான் அறியப்பட்டனவாதல் வேண்டும். இன்றேல், மூன்று சங்கத்திலுமிருந்த புலவர்களிற் சிலர் பெயரையும், அவர்களாற் பாடப்பட்ட பனுவல்களிற் சிலவற்றின் பெயரையும், சங்கமிரீஇய அரசர்களிற் சிலர் பெயரையும் எடுத்தோதுதலும், ஒவ்வொரு சங்கத்தும் விளங்கிய புலவர்களும், அரசர்களும் இத்துணையரென்றும், சங்கம் நிலவிய ஆண்டுகள் இத்துணையவென்றும் வரையறுத்துக் கூறுதலும் அமையாவன்றே? அன்றியும், இவ்வுரை கூறும் சங்க வரலாற்றின் அறியலான நூல்களிற் சிற்சில நமக்குக் கிடைத்திருத்தலும், இதனில் இடைச்சங்கமிருந்த இடமாகக் கூறியுள்ள கபாடபுரமானது இராமாயண காலத்தில் பாண்டி நாட்டிலிருந்ததாக * வான்மீக விராமாயணங் கூறுதலும், பாண்டி நாட்டைக் கடல் கொண்டதாக இதனிற் கூறப்படுஞ் செய்தி, † கலித்தொகை, ‡ சிலப்பதிகாரம் என்ற சிறந்த

* 'ததோ ஹேமமயம் திவ்யம் முக்தாமணி விபூஷிதம்
யுக்தம் கவாடம் பாண்டியானாம் கதா த்ரக்ஷ்யத வாநரா:'
—வான்மீக விராமாயணம். கிஷ்கிந்தா காண்டம்.

† 'மலிதிரை யூர்ந்துதன் மண்கடல் வௌவலின்
மெலிவின்றி மேற்சென்று மேவார்நா டிடம்படப்
புலியொடு வின்னீக்கிப் புகழ்பொறித்த கிளர்கெண்டை
வலியினான் வணக்கிய வாடாசீர்த் தென்னவன்'
—கலித்தொகை, முல்லைக்கலி.

‡ 'வடிவே லெறிந்த வான்பகை பொறாது

பழைய தமிழ் நூல்களிலும், பழைய உரைகளிலும் கூறப்பட்டிருத்தலும், கடல்கோட் செய்தி பிற நாட்டுப் புலவர்களின் அரிய ஆராய்ச்சிகளானும் ஆதரிக்கப்படுதலும். இவ்வுரையின் மெய்ம்மையை விளக்குவனவாகும். இவ்வுரையின் மெய்ம்மை தெளிந்தன்றே பின் வந்த உரையாளர் பலரும் இதனைப் பொன்னேபோற் போற்றி மேற்கொள்வாராயினர்? எனினும், காலத்தாற் பெரிதும் சேய்மைப்பட்ட முச்சங்க வரலாறுகள் கூறுவாரானும், எழுதுவாரானும் சிறுபான்மையாகத் திரிந்து சிதைந் திருத்தலும் இயல்பே.

* இவ்வுரை கண்டார் நக்கீரனாரென்பதனை ஐயுறத்தக்க சில குறிப்புக்கள் உளவேனும், அவரேயென வலியுறுத்தும் சான்றுகள் பல உளவாகலின், அவ்வையம் நிலைபெறு தொழிகின்றது. 'வினையினீங்கி' என்னும் மரபியற் சூத்திர உரையில், 'கடைச் சங்கத்தாருட் களவியற் பொருள் கண்ட கணக்காயனார் மகனார் நக்கீரனார்' எனப் பேராசிரியர் கூறினர். 'திணைமயக் குறுதலும்' என்னும் அகத்திணையியற் சூத்திர உரையில்' 'இக் கருத்தானே நக்கீரரும் ஐந்திணையுள்ளும் களவு நிகழுமென்று கொண்டவாறுணர்க' என நச்சினார்க்கினியர் கூறினர். சிலப்பதிகாரத்து வேனிற் காதை முதற்கண், 'கணக்காயனார் மகனார் நக்கீரனார் நடத்த இறையனார் பொருளுரை' என அடியார்க்

பஃறுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக்
குமரிக் கோடு கொடுங்கடல் கொள்ள'

—சிலப்பதிகாரம், காடுகாண் காதை.

* 'நக்கீரர்' பக்கம் 48, 49 காண்க.

கு நல்லார் கூறினர். பலராலும் மதிக்கப்பட்ட பழைய பேருரையாளர் பலரும் இங்ஙனம் ஒரு படித்தாகக் கூறு மிதனினும் சிறந்த சான்று வேறென்ன வேண்டும்?

இனிப், பண்டைநாளிற் சங்கமிருந்து தமிழ் வளர்த்தமையைப் புலப்படக் கூறும தெய்வப் பெற்றியாளர்களின் கூற்றுக்களை யீண்டு எடுத்துக் காட்டுதும்.

'சிறைவான் புனற்றில்லைச் சிற்றம் பலத்து மென் சிந்தையுள்ளும், உறைவா னுயர்மதிற் கூடலி னாய்ந்த வொண்டீந்தமிழின், றுறை' —திருக்கோவையார்.

என மாணிக்கவாசகரும்;

'நன்பாட்டுப் புலவனாய்ச் சங்கமேறி நற்கனகக் கிழிதருமிக் கருளினோன் காண்'—தேவாரம், திருப்புத்தூர்.

எனத் திருநாவுக்கரையரும்;

'ஞானசம் பந்த னுரைசெய் சங்கமலி செந்தமிழ்கள் பத்தும்'—தேவாரம், தேவூர்.

எனத் திருஞானசம்பந்தரும்;

'கோதைசொன்ன சங்கத்தமிழ் மாலைமுப்பதும்' —திருப்பாவை.

என நாய்ச்சியாரும்;

'கலியன் சொன்ன சங்கமுகத் தமிழ்மாலை பத்தும்'; 'கலிகன்றி சொன்ன சங்கமலி தமிழ் மாலை பத்திவை'—பெரிய திருமொழி.

எனத் திருமங்கையாழ்வாரும்;

'சால்பாய மும்மைத் தமிழ்தங்கிய அங்கண் மூதூர், நூல்பா யிடத்தும் முளை......செய்யுண்மிக் கேறு சங்கம்'; 'திருவாலவாயில் எம்மைப் பலவதீர்ப்பவர் சங்க மிருந்தது'—பெரியபுராணம், மூர்த்தி.

'சென்றணைந்து மதுரையினிற் றிருந்திய நூற் சங்கத்துளன்றிருந்து தமிழாராய்ந் தருளிய அங்கணர்' —பெரியபுராணம், திருநாவுக்கரசர்.

எனச் சேக்கிழாரும்;

'சங்கத்தமிழ்மூன்றுந்தா'—நல்வழி.

என * ஔவையாரும்;

அருளிச் செய்துள்ளார்கள். இவற்றுள், அப்பர் தேவாரமும், பெரிய புராணமும் முறையே சிவபிரான் புலவராய்ச் சங்கமேறி வாதியற்றினமையும், அவர் சங்க மமர்ந்து தமிழாராய்ந்ததனையும் கூறுதலுங் காண்க

இறையனாரகப்பொருளுரை கூறும் முச்சங்கவுண்மையை ஆதரித்து நிற்கும் மேற்கோள்கள் வருமாறு:

'தலை, யிடை, கடைச் சங்கத்தாரும், பிற சான்றோரும் நாற் சீரடியான் வரும் ஆசிரியமும், வெண்பாவும், கலியுமே பெரும்பான்மையுஞ் செய்தார்; வஞ்சிப்பா சிறு வரவிற் றெனக்கொள்க.' என்றும், 'இந்நூல் செய்த காலத்துத் தலைச் சங்கத்தாரும், இடைச் சங்கத்தாரும் அவ்வாறு கட்டளையடியாற் பயின்று வரச் செய்யுள் செய்தார்.' என்றும், 'இடைச் சங்கத்தாரும், கடைச் சங்கத்தாரும் இவ் விலக்கணத்தாற் செய்யுள் செய்தார்.' என்றும் செய்யு ளியலுரை

* இவர் கடைச்சங்க நாளில் விளங்கிய ஔவையாரல்லர்.

யினும்; 'அவ் வழக்கு நூல் பற்றி யல்லது மூன்று வகைச் சங்கத்தாரும் செய்யுட் செய்திலர்.' என்று மரபியலுரையினும் பேராசிரியர் கூறினர்.

'அவ் வாசிரிய ராவார் அகத்தியனாரும், மார்க்கண்டேயனாரும், தலைச்சங்கத்தாரும் முதலியோர்' என்று பாயிரவுரையினும்; 'இனித் தமிழ்ச் செய்யுட் கண்ணும், இறையனாரும், அகத்தியனாரும், மார்க்கண்டேயனாரும், வான்மீகனாரும், கௌதமனாரும் போல்வார் செய்தன தலையும், இடைச்சங்கத்தார் செய்தன இடையும், கடைச்சங்கத்தார் செய்தன கடையுமாகக் கொள்க.' என்று புறத்திணையியலுரையினும்; 'தலைச்சங்கத்தாரும் முதனூலாசிரியர் கூறியமுறையே கூறலும் ஒன்றாகச் செய்யுள் செய்தார் என்பதூஉங் கூறியவாறாயிற்று.' என்று கற்பியலுரையினும்; 'அது மூவகைச் சங்கத்தாரும், பிற சான்றோரும் நாற்சீரடியானே மூன்று பாவும் வரப் பெரும்பான்மை செய்யுட் செய்து, வஞ்சிப்பா சிறுவரவிற்றாகச் செய்யுள் செய்தவாற்றா னுணர்க.' என்றும், 'இந்நூல் செய்த காலத்திற் றலைச்சங்கத்தாரும் இடைச்சங்கத்தாரும் கட்டளையடி பயின்று வரச் செய்யுள் செய்தா ரென்பது இச் சூத்திரங்களாற் பெறுதும்; பின்பு கடைச் சங்கத்தார்க்கு அஃதரி தாகலிற் சீர் வகையடி பயிலச் செய்தா ரென்றுணர்க.' என்றும், அது தலைச் சங்கத்தாரை யொழிந்தோர் சிறுபான்மை வழக்கும் பெரும்பான்மை செய்யுட் சொல்லுமாக இவ் விலக்கணத்தாற் செய்தவாறே இக்காலத்துச் செய்யினுமாம்.' என்றும் செய்யு ளியலுரையினும் நச்சினார்க்கினியர் கூறினர்.

‘இரண்டாம் ஊழியதாகிய கபாடபுரத்தினிடைச் சங்கம்’ என்றும், ‘கடைச் சங்கமிரீஇய பாண்டியருட் கவியரங்கேறிய பாண்டியன் மதிவாணனார் செய்த மதிவாணனார் நாடகத் தமிழ் நூல்’ என்றும் சிலப்பதிகார வுரைப்பாயிரத்தும்; ‘முதலூழி யிறுதிக்கண் தென் மதுரை யகத்துத் தலைச் சங்கம்’ என்று வேனிற் காதை யுரையிலும் அடியார்க்கு நல்லார் கூறினர்.

‘சாலு மேன்மையிற் றலைச் சங்கப்புலவனார் தம்முன்’ என்று திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் புராணத்தே சேக்கிழார் கூறினர்

இன்னணம் பேரருட் புலமையாளரான பண்டைப் பெரியார் பலரியற்றிய நூல்களினும், உரைகளினும் தமிழ்ச் சங்க வரலாறு பரக்கக் கூறப்பட்டுக் கிடக்கவும், சென்னை இராசதானிக் கல்லூரியில் வடமொழிப் போதகாசிரியரா யிருந்து காலஞ் சென்ற எம். சேஷகிரி சாஸ்திரி அவர்கள், எம்.ஏ., வழூங்கள் மல்கத் தாமெழுதிய ‘தமிழ்க்கவி சரிதம்’ என்னும் சிறு புத்தகத்தில் பலவிடத்தும் பின் வருமாறு கூறிப் போயினர்.

‘முதலிரண்டு சங்கங்களையும் பற்றி யாம் ஆராயப் புகின், அவை ஏறக்குறையப் பொய்யுரையும் புனைந்துரையும் பொதிந்துளவாதலிற் சிறிதேனும் நம்புதற் பாலன வல்ல.’

‘இவ்வாறு கடைச் சங்கங் கூடிய புலவருட் பல்லோர், வெவ்வேறு காலங்களில் விளங்கினரெனல் காட்டப்படிற் சங்கமென்பது தனது மெய்ச் சரிதவியலிழந்து பொய்க்கதையினியலுடைத்தாய்விடும்.’

'கடைசியிற் பார்க்கப் போனாற் சங்க நிகழ்ச்சியைப் பற்றிய யாவும் கற்பனா சாமர்த்தியங் காரணமாக விளைந்த பொய்க் கதையாய்க் கழியினும் கழியலாம்.'

'போசராசனிருந்த காலமென்று வழக்கமாகக் குறிக்கப்படுங் கால வரையறைக்கு முற்பட்டவரும் தனித்தனி வெவ்வேறு காலங்களி லிருந்தவருமாகிய காளிதாசன், பாரவி, மாகன், பவபூதி, பாணன், தண்டி முதலாயினோ ரெல்லாம் அவ்வரசன தவைக் களத்தினை அலங்காரஞ் செய்தற் பொருட்டும், ஒருவரோ டொருவர் முரணிப் போட்டியிட்டுத் தமது இறைவனை மகிழ் விக்கத் தக்க வடமொழிக் கவிகள் தக்கணமே சொல்லுதற் பொருட்டும் ஒரே காலத்தின ராக்கப்பட்டனர். இத்தகைய பொய்ம் மகிமையோடும் விளங்கா நின்ற இவ்வடநூற் புலவர் குழாம் நமது தமிழ்ச் சங்கத்திற்கு எவ்வாற்றானும் தக்க வினையாம்.'

இவ்வாறு அவர்கூறியதன் காரணம் இன்னது என யாம் கூற விரும்புகின்றிலம். அவரது உளப் பான்மையை யாவரும் தெரிந்து கொள்ளுதற் பொருட்டே அவர் கூற்றுக்கள் இங்கு எடுத்துக் காட்டப் பட்டன. தாம் நடுவுநிலையோடு ஆராய்பவ ரென்று காட்டிக் கொள்ளவே வடமொழிப் புலவர் கூட்ட மொன்றையும் இங்குக் கூறி வைத்தனர் போலும்?

இவர் கூறிய வழுவுரை யெல்லாம் தமிழ்ப் பயிற்சி யுடையார்கண்டு நகையாடற் கேற்றனவேயன்றி எடுத்து மறுத்தற் கேற்றன வல்ல. உதாரணமாகச் சில காட்டுதும்.

இறையனு ரகப்பொருளுரை கூறும் முச் சங்க வரலாறு ஆலாசிய மான்மியத்திற்கு மாறுக இருத்த லின் பொய்யுரையாம் என்று கூறிவிட்டுப், பின் ஆலாசிய மான்மியம் கூறுவதும் பொய் யென்கின்ருர். ஒரு பொய்க்கு மாறுபட விருக்கும் பிறிதொன்றும் பொய் யென்பது இவர் கருத்துப் போலும்!

கரிகாலன் காலமும், சிலப்பதிகார, மணிமேகலை களின் காலமும் கி. பி. இரண்டாம் நூற்ருண்டு எனக் கூறிவிட்டுக், கடைச் சங்கம் தோன்றுதற்கு 760 ஆண்டுகட்கு முன் சிலப்பதிகாரமும், மணிமே கலையும் யாக்கப்பட்டிருத்தல் வேண்டும் என்கிருர். இஃது 9, 10-ஆம் நூற்ருண்டுகளில் இவர் படைத் துக்கொண்ட தமிழ்ச் சங்கம் போலும்! சிலப்பதி கார காலத்தில் பரணர் முதலிய சங்கப் புலவர் பலர் இருந்தமையை ஓர்ந்திலர்.

கரிகாலன் 2-ஆம் நூற்ருண்டினன்* ஆகலானும், தொண்டைமான் இளந்திரையன் என்பான் 11-ஆம் நூற்ருண்டிலிருந்த குலோத்துங்கனது வழியில் வந் தோனுகலானும், இவ் விருவரையும் பாடிய கடியலூர் உருத்திரங் கண்ணனுர் இளந்திரையன் காலத்தில் இருந்திருக்க வேண்டுமே யன்றிக் கரிகாலன் காலத் தில் இருந்திருக்க முடியாது என்கிருர். இளந்திரை யன் பிற்காலத்தவன் என்பதற்கு இவர் கண்ட ஆதா ரம் இன்னதெனக் காட்டினுரில்லை. முதற் குலோத் துங்கன் காலததிருந்த சயங்கொண்டார், பரணியில், கரிகாற் பெருவளவன் உருத்திரங் கண்ணனுர்க்குப் பதினறு நூருயிரம் பொன் பரிசில் கொடுத்துப் பட்டினப் பாலை பெற்ருன் என்பார், 'தழுவு செந்

தமிழ்ப் பரிசில் வாணர் பொன், பத்தொடாறு நூறாயிரம் பெறப், பண்டு பட்டினப் பாலை கொண்டதும்' எனக் கூறியிருத்தலையும் ஓர்ந்திலர்.

இனி, ஆயிரக்கணக்கா யுள்ள ஆண்டுகள் தமிழ்ச் சங்கம் நடைபெற்றதெனின், அக்காலத்து இயற்றப் பட்ட நூல்களும், பாட்டுக்களும் அளவில வாதல் வேண்டுமே. அவை அத்துணை யிருந்தன வென்பதற்குச் சான்று என்னை? இப் பொழுது அவையெல்லாம் யாங்கு ஒழிந்தன? என்னின் கூறுதும். சங்கநாளில் இயற்றப்பட்ட நூல்களும், பாட்டுக்களும் எண்ணிறந்தனவே யாகும். அகத்தியம், தொல்காப்பியம், மாபுராணம், பூதபுராணம், பனம்பாரம், பன்னிருபடலம், அவினயம், காக்கைபாடினியம், சிறுகாக்கைபாடினியம், சங்கயாப்பு, நற்றத்தம், பல்காயம், மயேச்சுரம், வாய்ப்பியம், அணியியல் என்பனவும்; இசை நுணுக்கம், பஞ்சபாரதீயம், பரதம், முறுவல், சயந்தம், குணநூல், செயிற்றியம், பெருங்கலம், நூல், இந்திரகாளியம், பஞ்சமரபு, பாதசேனாபதீயம், மதிவாணர் நாடகத் தமிழ் நூல் என்பனவும்; பிறவுமாக, இயற்றமிழ்க்கும், இசை, நாடகங்கட்கும் இலக்கண நூல்கள் எண்ணிறந்தன வழங்கின வென்பது, பழைய உரையாளர்கள் அந்நூல்களிலிருந்து சூத்திரங்கள் எடுத்துக் காட்டியும், அந் நூல்களைப் பற்றிச் சிற்சில குறிப்புக்கள் வரைந்தும் சென்றமையால் அறியக்கிடக்கின்றது.

இலக்கண நூல்கள் இங்ஙனம் பலவாயின், இலக்கியங்கள் எத்துணைப் பல இருந்திருத்தல் வேண்டும்? இலக்கணம் ஒன்றாயின் இலக்கியம் நூறுதல் பொருத்

தமேயன்றோ? மந்திரமும், கணக்கும், வானநூலும், மருத்துவ நூலும் முதலிய பல் கலைநூல்களும் அக்காலத்து வழங்கின வென்பதற்குப் பழைய நூல்களிற் காணப்படும் குறிப்புக்கள் பல சான்றாக வுள்ளன. † இவ்வாறு சங்கப் புலவர்களா லியற்றப்பட்ட பல்லாயிரக் கணக்கான நூல்கள்,

'எரண முருவம் யோக மிசைகணக் கிரதஞ் சாலம்
தாரண மறமே சந்தந் தம்பநீர் நிலமு லோக
மாரணம் பொருளென் றின்ன மானநூல் பலவும் வாரி
வாரணங் கொண்ட தந்தோ வழிவழிப் பெயரு மான.'

என்றவாறு கொடுங் கடலாற் கொள்ளப்பட்டு மறைந்தொழிந்தன என்பதில் ஐயப்பாடு யாதுளது? கடைச் சங்கப் புலவரும், பிற சான்றோரும் இயற்றிய நூல்களுள்ளும், இறந்து பட்டனவும், இதுகாறும் வெளிவந்தனவு மன்றி, வெளிவரா திருப்பனவும் பல வுள என்பது தேற்றம்.

இனி வெவ்வேறு காலத்து வெவ்வேறிடத் திருந்த பன்னூறு புலவர்களாற் பாடப்பட்ட இரண்டா

† 'மந்திரப் பொருள்வயி னாஅ குநவும்' என எச்சவியலினும்;

'நிறை மொழி மாந்த ராணையிற் கிளந்த
மறைமொழி தானே மந்திர மென்ப' எனவும்,

'மறைமொழி கிளந்த மந்திரத் தான' எனவும் செய்யுளியலினும், ஆசிரியர் தொல்காப்பியனார் கூறுதலின், அக்காலத்து மந்திரம் மிக்கிருந்தமை புலனாம்.

'செஞ்ஞாயிற்றுச் செலவும்', 'ஆடிய லழற்குட்டத்து' என்னும் புறப்பாட்டுக்கள் முதலியவற்றால் கணக்கும், [illegible] நூலும் இருந்தமை புலனாம்.

மருத்துவ நூல் இற்றைக்கும் பலவுள்ளன.

யிரத்து நானூற்று இருபத்தாறு தனிநிலைச் செய்யுட்கள் ஒருவழிக் கொணரப் பட்டுப், பாட்டும், அளவும், பொருளும் பற்றி எட்டுத்தொகையாகத் தொகுக்கப் பட்டிருத்தலை நானுகி யுணரினும், இவற்றுக்கெல்லாம் காரணமாகத் தமிழ்ச் சங்கம் விளங்கிற்றென்னும் உண்மை புலப்படா நிற்கும்.

இனி, 'சங்கம் என்னுஞ் சொல் வட சொல்லாகலானும், இச்சொல் நல்லிசைப் புலவர் செய்யுட்களிற் காணப்படாமையானும், தமிழ்ச் சங்கமென்பது பிற்காலத்தோர் படைத்துக் கொண்டதாகும்.' என்னின், நன்று சொன்னாய்! தமிழகத்துக் குடியேறிய பிறமொழியாளர்கள் தம் பெற்றோர்களை அம்மை, அப்பன் என்னும் தமிழ்ச் சொற்களால் வழங்கிவரின், முற்காலத்து அவர்கட்குப் பெற்றோர் இருந்திலர் என்று கூறலமையுமோ? சங்கம் என்னும் சொல்லால் வழங்குவது பற்றி, வேறு பல சான்றுகளால் நிறுவப்படும் தமிழ்ப் புலவர் கூட்டத்தினை இன்றெனக் கூறுவது எத்துணைப்பேதைமையாகும்! சங்கம் என்னும் பொருளுள்ள தமிழ்ச் சொல் இல்லாமற் போகவில்லை. 'அவை' என்னுஞ் சொல் அத்து முதலிய சாரியை பெற்றும், பெறாதும் தொல்காப்பியத்தும், தொகை நூல்களினும், பலவிடத்துப் பயின்று வருவதுண்டாகலின், அதுவே முன்னர் வழங்கியிருத்தல்வேண்டும். மற்றும், மன்றம், பொதியில், பட்டி, தொகை என்னும் சொற்கள் சான்றோர் செய்யுட்களில் பயின்று வருகின்றன. இச்சொற்களும் சங்கம் என்னும் பொருளுடையனவாகும். இச் சொற்களெல்லாம் இப் பொருளே

யன்றி வேறு கூட்டங்களையும், இடங்களையும் குறிப்பனவுமாயின. ஒரு சொல் நாளடைவிற் பொருள் வேறுபட்டு வருவது மொழிநூலாராய்ச்சியிற் பெறப்படும் உண்மையாகும். சங்கம் என்னும் வடசொற்றானும் நல்லிசைப் புலவர் செய்யுளிற் காணப்படாததன்று. மதுரைக் கூலவாணிகன் சாத்தனு ரியற்றிய மணிமேகலையுள், 'புலம்புரி சங்கம் பொருளொடு முழங்க' என்று கூறியிருத்தல் காண்க. சங்கத்துச் சான்றோராகிய சாத்தனார் தமது காப்பியத்துள் ஆண்டுள்ள சங்கம் என்னுஞ் சொல் அவர்க்குச் சில நூறாண்டுகளின் முன்னரே வழக்கிடைப் பயின்றிருந்ததலும் கூடுவதேயாகும். இவ்வாற்றால், முதலிடைக் காலங்களில் 'அவை' முதலியவற்றுள் யாதானு மொரு தமிழ்ப் பெயரால் வழங்கி வந்த தமிழ்ப் புலவர் கழகம், தென்னாட்டில் பௌத்த மதம் பாவலுற்ற கடைச்சங்க நாளில் பௌத்தராட்சியிலிருந்த சங்கம் என்னுஞ் சொல்லைப் பெயராக ஏற்று வழங்குவதாயிற்று என்பது தேற்றமாம்.

இனி, 'வடவேங்கடந் தென்குமரி' யிடைப் பட்ட நில மெல்லாம் தமிழ் வழங்கு நிலமாகவும், பாண்டி நாட்டையே தமிழ் நாடென்று பண்டைச்சான்றோரெல்லாம் சிறக்தெடுத் தோதுதற் கேது, அந்நாட்டில் தமிழ்ச் சங்கம் நிலை பெற்றுத், தமிழ் வளர்த்தமையே யாகும். சோணாட்டிலும் பண்டு சங்கமிருந்த தென்பது, 'புலம் புரி சங்கம் பொருளொடு முழங்க' என்ற மணிமேகலை யானும்,

'செந்தமிழ் நாடே
மன்ற வாணன் மலர்திரு வருளால்

தென்றமிழ் மகிமை சிவணிய செய்த
அடியவர் கூட்டமும் ஆதிச் சங்கமும்
படியின்மாப் பெருமை பரவுறு சோழனும்
சைவமா தவரும் தழைத்தினி திருந்த
மையறு சோழ வளநாடென்ப.'

என்னும் சூத்திரத்தானும், பிறவற்றானும் அறியலாவது. சோணாட்டிலே தமிழ் பெரிதும் திருத்தமும் வளர்ச்சியும் பெற்றிருந்ததென்பது, தொல்காப்பிய வுரையாளர்கள், 'செந்தமிழ் நிலமாவது, வையையாற்றின் வடக்கும், மருதயாற்றின் றெற்கும், கருவூரின் கிழக்கும், மருவூரின் மேற்குமாம்.' என்று கூறினமையானும், இடைக்காலத்தும், பிற்காலத்து மிருந்த பெரும்புலவர் பலர் சோணாட்டினராகலானும் துணியப்படும். அங்ஙனமாயினும், பாண்டி நாட்டிற் போலத் தமிழ் வளர்ச்சியே கருதி ஆயிரக் கணக்காய ஆண்டுகள் தொடர்ச்சியாய்ச் சோணாட்டிற் சங்க மிருந்த தில்லையாகும். அதனாற்றான் சான்றோர் செய்யுட்களில் சோழநாடு சேரநாடுகள் பொதுவகையால் தமிழ் நாடு எனக் கூறப்படுவதன்றிப், பாண்டி நாடுபோல் சிறப்புவகையாற் கூறப்படவில்லை.

'தமிழ் கெழு கூடற் றண்கோல் வேந்தே'

எனப் புறநானூற்றிலும்,

'தமிழ் வையைத் தண்ணம் புனல்'

எனப் பரிபாடலினும்,

'தமிழ் நிலை பெற்ற தாங்கரு மரபின்
மகிழ் நனை மறுகின் மதுரையும்'

எனச் சிறுபாணாற்றுப் படையினும்,

'தென்றமிழ் நன்னாட்டுத் தீதுதீர் மதுரை'
எனச் சிலப்பதிகாரத்திலும்,
'தென்றமிழ் மதுரைச் செழுங்கலைப் பாவாய்'
என மணிமேகலையிலும்

பாண்டி நாட்டையும், மதுரையையும், வையை யாற்றையும் சிறப்பிக்கும் வழித் தமிழொடு புணர்த்துக்கூறியிருத்தல் காண்க. இவற்றுள் சிலப்பதிகாரத் தொடரானது, சோணாட்டிலிருந்த கவுந்தியடிகள் கோவலனை நோக்கி, 'யானும் மதுரைக்குச் செல்லுங் கருத்துடையேன்' என்னுமிடத்துக் கூறப்பட்டதாகலின், சோணாடு சிறப்பு வகையால் தமிழ் நாடன்மை பெறப்பட்டது.

திருஞானசம்பந்தப் பிள்ளையாரும் 'செய்யனே' என்னும் திருவாலவாய்ப் பண்ணில் பாண்டி வேந்தைக் குறிக்குமிடத்து,

'பட்டிமன் றென்னன் பாண்டியற் காகவே' என்றும்,

'பண்ணியற் றமிழ்ப் பாண்டியற் காகவே' என்றும் அருளிச் செய்திருக்கின்றனர்.

'செழியன் றமிழ் நாடன்' என்று திவாகரம் கூறுகின்றது.

'ஈழமுந்தமிழ்க் கூடலுஞ்சிதைத் திகல்கடந்ததோ ரிசைபரந்ததும்' என்று கலிங்கத்துப் பரணி கூறுகின்றது.

சேரழ நாட்டிலே திருமறைக் காட்டி லெழுந்தருளி யிருந்த திருஞானசம்பந்தர் பாண்டி நாட்டிற்குச் சென்றார் என்று கூறுமிடத்து,

'தாமாதரவாற் றமிழ்நாட்டிற் போனார் ஞானத் தலைவனார்' என்றும்,

பாண்டி நாட்டினின்றும் சோழ நாட்டுக்கு வந்தனர் என்று கூறுமிடத்து,

'தீந்தமிழ்நாட் டிடைநின்று மெழுந்தருளிச் செம்பொன்னி, வாய்ந்தவளந் தருநாட்டு வந்தணைந்தார்' என்றும்,

சோழ நாட்டிலே திருப்பூந்துருத்தியி லெழுந்தருளி யிருந்த திருநாவுக்கரசர் பாண்டி நாட்டுக்குச் செல்ல நினைந்தார் என்னுமிடத்து,

'வாகீசர் மண்குலவு தமிழ்நாடு காண்பதற்கு மனங்கொண்டார்' என்றும்,

அங்கு நின்றும் சோணாட்டுக்கு வந்தனர் என்னுமிடத்து,

'தேம்பொழில்சூழ் செந்தமிழ்நாட் டினிலெங்குஞ் சென்றிறைஞ்சிப், பாம்பணிவார் தமைப்பணிவார் பொன்னிநா டதுவணைந்து'

என்றும் திருநாவுக்கரசு நாயனார் புராணத்திலும்;

சேரமான் பெருமாணயனாருடன் சோழ நாட்டுத் திருப்பதிகளை வணங்கிக் கொண்டிருந்த சுந்தரர் பாண்டி நாட்டுத் திருப்பதிகளை யிறைஞ்ச நினைந்தார் என்னுமிடத்து,

'செய்வார் கன்னித் தமிழ்நாட்டுத் திருமா மதுரை முதலான, மொய்வார் சடையார் மூதூர்க ளிறைஞ்ச முறைமை யானினைந்தார்'

என்று சேரமான் பெருமாணயனார் புராணத்தும், சேக்கிழார் கூறியிருக்கின்றனர்.

கிட்கிந்தா காண்டம் நாடவிட்ட படலத்தில்,

'துறக்க முற்றூர் மனமென்னத் துறைகெழுநீர்ச் சோணாடு கடந்தால்.......பிறக்கமுற்ற மலைநாடு நாடி யகன் றமிழ்நாட்டிற் பெயர்திர் மாதோ' என்றும்,

'தென்றமிழ்நாட் டகன்பொதியிற் றிருமுனிவன் றமிழ்ச்சங்கம் சேரு வீரேல்' என்றும்,

ஆறு செல் படலத்தில்

'அனைய பொன்னி யகன்புன லொடொரீஇ
மனையின் மாட்சி குலாமலை மண்டலம்
வினையி னீங்கிய பண்பினர் மேயினார்
இனிய தென்றமிழ் நாடுசென் றெய்தினார்'

என்றும் கல்வியிற் பெரியராய கம்பர் கூறியுள்ளார்.

வான்மீக விராமாயணத்தில், இடைச் சங்கமிருந்த கபாட புரத்தைச் சுட்டிப், 'பாண்டியனுடைய கபாடத்தைக் காண்பீராக' என்று வானர வீரர்களுக்குக் கூறியதாக வுள்ள பகுதியிற்றானே, கம்பர், 'தென்றமிழ்நாட் டகன்பொதியிற் றிருமுனிவன் றமிழ்ச் சங்கம் சேரு வீரேல்' என்று கூறியது வான்மீகத்தையும், தமிழ்ச் சங்க வுண்மையையும் நன்கு அறிந்த துணிபா லென்க.

யாம் இதுகாறுஞ் செய்த ஆராய்ச்சியால், தமிழ் வளர்ச்சி கருதிப் பாண்டி நாட்டிற் பன்னெடுங்காலம் தமிழ்ச் சங்கம் நிலவிய செய்தி உறுதியுடைய மேற்கோள் பல கொண்டு நிறுவப்படுவதாயிற்று தமிழ்ச் சங்கம் என்பது பாண்டி வேந்தர் ஒவ்வொருவராலும், அரசியல் நடாத்தும் ஏனை அவை போன்று, தமிழ் வளர்ச்சி கருதிப் பேணப்பட்டு வந்ததோர் அவை என்க. தொகை நூல்களுக்கு மிக முற்பட்ட காலத்தது என்று பல்லாற்றானும் நிறுவப்படும் தொல்காப்

பியம், நிலந்தருதிருவிற் பாண்டியன் அவையத்துக் கேட்கப்பட்டது என்னலால், மிகப் பழைய காலந் தொட்டுத் தமிழவை நிலவிற் றென்பது துணிபு. அஃது ஔவையார் காலம் இடையிட்டு நடந்தமை யறிந்த பிற்காலத்து நல்லிசைப் புலவர், அதனை முதற் சங்கம், இடைச் சங்கம், கடைச் சங்கம் எனப் பகுத்திட்டனர் என்க.

தமிழ்ச்சங்கம் பற்றி இங்ஙனம் பொதுவகையால் அறிந்து கொள்வதன்றிக், காலத்தாற் பெரிதும் சேய்மையுற்ற அவற்றின் கோட்பாடு முதலியன நம் மால் விளக்கமுற வறிதல் அருமையாகும். எனினும், இற்றைநாள் வழக்கத்திலிருந்தும், பழம் பாட்டுக் களின் உதவி கொண்டும் ஒருண்மையினை யிங்கெடுத் துக் காட்டுதல் மிகையாகாது. பலர் புகழ் நல்லிசை வாய்ந்த பாண்டித்துரை யென்னும் கோமகனால் பதி னெட்டாண்டுகளின் முன் மதுரையில் நிறுவப்பெற்ற தாகிய மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் இப்பொழுது உறுப்பினராயுள்ளார் ஏறக்குறைய முந்நூற்றைம் பதின்மராவர். இவர்களேனும், அன்றி, இவர்களிற் பண்டிதராயுள்ளாரேனும் எப்பொழுதும் ஒருவழிக் குழீஇ யிருப்பாரல்லர். யாண்டிற் கொருமுறை சிலர் பலர் குழுமுதலே வழக்கமாகும். சங்கத்திற்கு ஆவன சூழ்தற் பொருட்டு வினைப்பொறுப்புடை யோர் சிலர் சிலமுறை கூடுதலுண்டு. இங்ஙனமே, பண்டைநாட் சங்கங்களினும் புலவர்களானோர் வேறு வேறிடங்களிலிருந்து வேளாண்மையும், வாணிகமும் முதலிய தத்தமக்கமைந்த செய்தொழில்களை மேற் கொண்டிருப்பாராவர். அளப்பரும்புலமை சான்ற

ஒவ்வொருவர் ஒவ்வொரு காலத்தில் முதன்மைப் புலவராய் விளங்கச், சில பல புலவர் கூடித் தமிழா ராய்ச்சி செய்து போதருவர். களவியலுரையில் சங்கமிருந்தார் தொகையெல்லாம் ஒன்பது என்னும் எண்ணால் முடிந்திருப்பது கொண்டு, சங்கத்தை நடாத்தும் வினைப்பொறுப்பாளர் ஒவ்வொரு காலத்தும் ஒன்பதின்மர் இருந்திருக்கலாமென்று கருத லாகும். சங்கப் புலவராய கபிலரும் எப்பொழுதும் ஓரிடத்திற்றானே இருந்தாரல்லர். இவரது வரலாறு மேல் ஆராய்ச்சி செய்யப்படும்.



# இரண்டாம் அதிகாரம்.

## கபிலர் வரலாறு.

வடவேங்கடம் தென் குமரி யிடைப்பட்ட தமிழகத்திலிருந்து செங்கோலோச்சி வந்த முடிகெழு வேந்தர் மூவருள்ளே, அறனும், மறனும், ஆற்றலுங் குன்றாத பாண்டிய ராஜேனார் வழி வழியாக ஆட்சி புரியப் பெற்றது, சீர்வளர் செந்தமிழ்ப் பாண்டி நன்னாடாகும். அந்நாட்டின் கண், சான்றோருடைய பாட்டுக்களை யணிந்து, தண்ணென்றொழுகா நின்ற வையை யாற்றின் மருங்குள்ளது, ஒருவாத புகழமைந்த திருவாதவூர் என்னும் திருப்பதி. அத்திருப்பதி யானது அன்பே வடிவாகி, யின்ப வெள்ளத்திற் றிளைத்த ஆளுடைய வடிகள் தோன்றி யருளும் பெரும் பேறுடையதென்றால், அதன் பெருமை யாரால் அளவிட்டுரைக்கலாகும்? அப்பதியிலே, அறு தொழிலின் வழுவாத அந்தண ரொருவர், தம் கற்பிற் சிறந்த பொற்புடை மனைவியோடிருந்து, இல்லறம் இனிது நடாத்தி வாழுநாளில், அன்னவர் தம் நோன்பின் பயனாக அவர்க்கு ஓர் புதல்வர் தோன்றினர். பெற்றோர்கள் தம் அரும் பெறன் மகவைக் **கபிலர்** என்று பெயரிட்டுக், கண்ணுங்கருத்துமாகப் பேணிவளர்த்து உரிய பருவத்தே பள்ளிக்கு வைத்துக் கல்வி பயில்வித்தனர். கபிலரும், சிறிது பயின்றபின்னர், வேளாண் வாழ்க்கையும், தாளாண்மையும் உடைய பன்னருஞ் சிறப்பின் நல்லாசிரியர் ஒருவரைச் சார்ந்து, மடி, தடுமாற்றம், மானம், பொச்சாப்பு முதலியன இல்

லாமையும், ஆசிரியர் பாற் சென்று வழிபடுதலும், ஆசிரியர் குறிப்பறிந் தொழுகுதலும், ஆசிரியரிடத்திற் கேட்டவற்றை நினைத்தலும், பழம்பாடம் போற்றலும், பிறர் பால் வினுதலும், பிறர் வினயவற்றிற்கு விடை கூறலும், அறியார்க்கு அறிவுறுத்திப் பயன் விளைத்தலும், செய்ந் நன்றி யறிதலும், தீச்சார்பின்மையும் முதலியவாக மாணவர்க்கு வேண்டும் குணனெல்லாம் உடையராய், இலக்கண விலக்கியத் துறையெல்லாம் சென்று, கற்று வல்லரானர். ஆனபின், அவர், காவிரி முதலிய மேவியாடுதும் என்றும், தில்லை முதலிய எல்லை காணுதும் என்றும், தாயுமாம் பொருளைப் போய் வழி படுதும் என்றும், ஆங்காங் குள்ள பெரியாரைத் தலைப் பெய்து அறியாதன வெல்லாம் அறியப் பெறுதும் என்றும், குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்னும் நானிலத்து ஐந்திணைக் கருப் பொருள்களின் பெற்றி யெல்லாம் நனித்தறிந்து, கண்டு, மகிழுதும் என்றும், இன்னணம் பற்பல இடங்களினும் சென்று உலகவறிவும், இலகிய குணனும் பெற்று வருவார், ஆசிரியர்க்கு வேண்டும் வாய்மையும், தூய்மையும், ஒழுக்கமும், விழுப்பமும் எல்லாம் ஒருங் கமையப் பெற்றவராயினர். அவரது மலர்ந்த முகமும், குளிர்ந்த வுரையும், அருள் பொழி விழியும், தெருள் பொழி யுணர்வும் யாவர்க்கும் இன்பம் விளைப்ப வாயின. நோக்குடைய வாகப் பாக்க ளியற்றுவதில் இவர்க்கு நிகராவார் இல்லை யென்னுமாறு மேம்பாடுற்றனர். ஒரு நாள் நண்பகலில், அவர் தமக்குத் தமிழ் அறிவுறுத்திய ஆசிரியருடன் ஓர் இருப்பைத் தோப்பை

யடைந்த பொழுது, ஆசிரியர் அங்கே பூத்திருந்த இருப்பையின் நாண்மலரையும், உதிர்ந்து கிடந்த பழம் பூவையும் காட்டி, 'இவற்றுக்குப் பொருந்திய உவமை கூறிச் செய்யுளொன் றியற்றுக' எனப் பணித்தனர். பணிக்கவே, கபிலர், சிறிதும் தாழ்க்காது 'நீண்ட இலைகளை யுடைய இருப்பையின் வட்டமாகிய ஒள்ளிய பூ வாடாதிருப்பின், பெருமை யுடைய பெண்யானையின் கோட்டினை நிகர்க்கும்; வாடினாலோ, கரிய தலையை யுடைய வலைஞரது மனை முன்றில் தொறும் உணங்கும் சிவந்த தலையை யுடைய இறான் மீனை நிகர்க்கும்;' என்ற பொருளமைத்துப் பாடினர். அதனைக் கேட்ட ஆசிரியர் தன்மை, உவமை, முரண் என்னும் அணிகள் புலப்பட, விரைவிற் பாட்டியற்றிய அவரது ஆற்றலுக்கு, மகிழ் பூத்த உள்ளத்தராய்ப், பின்னும் அவரை நோக்கி, 'அன்பனே, உரிப்பொருளின்றேல் பொருட் பயனின்றாம்; ஆதலால் ஒவ்வொரு பாட்டினும் யாதேனும் உரிப் பொருளிருக்கவே வேண்டும்; இப் பாட்டிலே யுள்ள உரிப் பொருள் யாது?' என்று வினவினர். அதற்கு அவர், 'எம்பெருமானே, அடிகள்பாற் கேட்டுணர்ந்த இலக்கணத்தை உளங்கொண்டே இஃதியற்றினேன்; இதில் யான் கருதிய பொருள், 'தலைமகள் தலைவனை யடுத்திருப்பதே அவளது மகிழ்ச்சிக்கும் உலகின் புகழ்ச்சிக்கும் உரிய செயலாகும்; அவ்வாறன்றிப் பிரிந்திருப்பதனால், அவட்கு வாட்டமே யன்றி இகழற்பாடும் உண்டாகும்; ஆகலின், நின்மகள் தன்மனக் கினிய காதலன் பின் சென்றமைக்கு நீ கவலுதல் தக்கதன்று.' என்று உடன்

போக்கின்கட் கண்டோர் செவிலிக்குக் கூறினர் என்பது. இவ்வுரிப்பொருள் இதில் உள்ளுறையாகும். இது பாலையாகலின், பாலை எல்லா நிலத்திடையும் நிகழும் என்னும் விதி பற்றித் தலை நிலமாகிய குறிஞ்சியின் கருப்பொருளும், கடை நிலமாகிய நெய்தலின் கருப்பொருளும் இதில் உவமையாக வைத்துள்ளேன்.' என்று விடை கூறினர். தம்மினும் தம் மாணவர் அறிவு சிறந்து விளங்குதல் கண்ட ஆசிரியர், பெரியதோர் இன்பம் எய்தப் பெற்றவராய்க், கபிலரை நோக்கி, 'என் அன்புள்ள மகனே! யான் கூறுமதனைக் கேட்பாயாக! தமிழின் நலத்தினைப் பேணி வளர்த்தல் கருதி இந்நாட்டிலே தொன்று தொட்டுத் தமிழ்ப் புலவர் பேரவை யொன்று நிகழ்ந்து வருகின்றது. வெண் கொற்றக் குடை நிழலிருந்து கலியிருளாறு நாது செங்கோலோச்சி வரும் பாண்டிவேந்த ரொவ்வொருவரும் அதனைத் தமக்கு இன்றியமையாததோர் அவையாகக் கொண்டு போற்றி வருகின்றனர். சாலச் சிறந்த புலவர்களே அதில் வீற்றிருத்தற் குரியோராவர். அதுதான் மதுரையில் விளக்க முற்றிருக்கும் தமிழ்ச் சங்கம் என்பது. அதனை நீ முன்னும் அறிதியன்றோ? நீயும் அத் தமிழ்ச் சங்க மடைந்து, தமிழாராய்ந்து, தமிழ்ப்பணி யாற்றிப், புகழ் சிறந்து, விளங்கவேண்டுமென்பது என் விருப்பம்.' என்றனர். கபிலரும், ஆசிரியர் கட்டளையைத் தலைமேற்கொண்டு, வணங்கி, விடைபெற்று, மதுரை யம்பதி யடைந்து, அங்கட்கண்ணி பங்கரை வணங்கிச், சங்கத்துச் சான்றோருள் ஒருவராய், அங்குள்ள பரணர், கூலவாணிகன் சாத்தனார் முதலிய நல்லிசைப் புலவர்க

ளோடு தமிழாராய்ச்சி செய்து போதருவா ராயினர். அப்பொழுது நாடெங்கும் தமிழ் மணம் கமழலுற்றது. நன்மக்களுடைய நாவும், செவியும், உளமுமெல்லாம் தமிழுக்கே நிலைக்களனாய் விளங்கின. வேந்தரெல்லாரும் தமிழ்மாலை சூடி, வீறு பெற்றுயர்ந்தனர். விண்ணிழி மானத்து மேவிய கண்ணுதற் பெருமானும் முந்துறு சிறப்பிற் செந்தமிழ்ப் பாக்களைப் பல்காலும் கேட்டு, அருள் நல்காநின்று, 'பாட்டுக் குருகும் தமிழ்ச் சொக்கநாதர்' என்று பெயரெய்தினர். கபிலரது பாவியற்றும் வன்மையும், வாய்மை, தூய்மை முதலிய நன்மையும் கண்டுணர்ந்த * பரணர் முதலிய நல்லிசைப் புலவர்கள் உளங்கலந்து நண்பு பூண்டொழுகியதோடு, அவரைத் தமக்கெல்லாம் தலைவராகவும் கொண்டு போற்றிவந்தனர். அவரும், எடுத்துக் காட்டாகும் பெருமையுடைய பாக்கள்பல அடுத்தடுத்துப் பாடித், தாம் இன்புற்றும், ஏனோரை யின்புறுத்தியும் வந்தனர்.

---

* பழைய வுரைகளில் 'கபில பரணர்' என வழங்குதலால் இவ்விருவரும் ஒருவர்க் கொருவர் சிறந்த நட்பின ரெனக் கருதப்படுகிறது.

நம்பி திருவிளையாடலில், 'பின்னமில் கபிலன் றோழன் பெயரிடைக் காடனென்போன்' என்றும், பரஞ்சோதி முனிவர் திருவிளையாடலில் 'முழுதுணர்ந்த கபிலன் றன்பால், பொழிந்தபெருங் காதன்மிகு கேண்மையினான் இடைக்காட்டுப் புலவன்' என்றும் கூறியிருத்தலால் இடைக்காடரும் கபிலருக்குச் சிறந்த நண்பராதல் வேண்டும். எனினும், இடைக்காடர் சிறிது பிற்காலத்தவரெனக் கருதுதற்கும இடனுண்டு. திருவிளையாடற் புராணமும் சண்பக மாறனுக்குப் பின் பதினைந்தாவது தலைமுறையினனான குலேசபாண்டியன் காலத்தில் இடைக்காடரது செய்தி கூறுகின்றது. புலவர் நாற்பத் தெண்மருமே எப்பொழுதும் இருந்தாராகக் கொண்ட புராணத்தின் கொள்கைக்கு இது முரணன்று. எனினும் ஆராயத்தக்கதாம் என்க.

அந்நாளிலே, ஆரிய நாட்டு மன்னனொருவன், பிரகத்தன் என்பான், செழியர் பெருமகனாலே போர்முனையிலே பற்றிக் கொணரப் பட்டவன், பின் அப்பாண்டி வேந்துக்கே நண்பனாய், மதுரையிற்றானே பல ஆண்டுகள் தங்குவானாயினன். தங்கியவன், அங்கே தமிழ் கற்பான் றொடங்கிச், சிறிது பயின்ற வளவிலே, இஃது ஆரியத்திற்கு நிகராகுங் கொல் என்று ஐயுறவுடையனாயினான். அவனது ஐயத்தைக் குறிப்பானறிந்தார் நல்லிசைக் கபிலர். அறிந்த வளவில் தமக்குள்ளே சிந்திப்பார்: 'உலகிலே யாவர்க்கும் தத்தம்மொழியிலே பற்றுண்டாதல் இயல்பே. அப்பற்றுத்தான் ஒருதலையாக வேண்டற் பாலதுமாகும். எனினும், அது பற்றி நடுநிலை திறம்பிப், பெருமையுடைய பிறமொழியைத் தாழ நினைப்பது அழகாகாதே. இவ் வாரிய அரசன்றான் நடுவுநிலையின்றி இங்ஙனம் கருதுகின்றான் என்பதினும், வரலாற்று முறையாற் கற்றிலாமையின் தமிழின் பெருமையை அறிந்திலன் எனக் கொள்ளுதலே சால்புடைத்து. இத்தகையாற்குத் தமிழின் பெருமையை அறிவுறுத்தித் தெருட்டுதலே எனக்குரிய கடனாகும்.' என இவ்வாறு சிந்தித்தவர், சின்னாளிலே பெருங்குறிஞ்சி என்ற பாட்டினைப் பாடிக்கொண்டு, பிரகத்த மன்னன்பால் அணுகி, அளவளாவியிருந்து, அவற்கு உணர்த்தலாகுஞ் செவ்வி தெரிந்து கூறுகின்றார்: 'அரசே! உலகிலே பழமையும் பெருமையும் வாய்ந்த மொழிகள் சிலவும், அண்மைமையிற் றோன்றி இன்னும் திருத்தம் பெறாதவாய மொழிகள் பலவும் இருக்கின்றன. பழமையுடைய

சிலவற்றில் உலக வழக்கினும் நூல் வழக்கினும் பயின்று வருவதும், எக்காலத்தும் அங்ஙனம் பயி லுதற் கேற்ற ஆற்றலமைந்ததும் தமிழொன்றேயா கும். தமிழ்மொழி எப்பொழுது உண்டாயதென்று யாவரானும் அறிய வாராமையின், படைப்புக்காலந் தொடங்கி மேம்பட்டு வருவதொன்று எனக் கூறும் படி யிருக்கிறது. அவ்வளவு நீண்ட காலமாகியும் அது தன் எழில் சிதையாது, நடை தளராது, இன் னமும் கன்னியென மிளிர்கின்றதென்றால், அவ் வாறு விளங்குதற் கேற்ற சிறப்பியல்புகள் யாவை யென அறிதற்கு அவாவுதல் இயல்பே. அவற் றுள்ளே சில கூறுவேன். தமிழிலுள்ள எழுத் தொலி யெல்லாம் கற்றுவல்லாரும் அல்லாரும் ஒரு படியே கூறத் தக்க மென்மை யுடையன. சொற்களெல்லாம் பெரும்பாலும் இரண்டு மூன்று எழுத்துக்களால் ஆகியவை. சொற்களின் சந்தி யில் உண்டாகின்ற மெய் பிறிதாதல், மிகுதல், குன் றல் என்னும் திரிபுகளும், இயல்பும் எல்லாம் இயற் கையினின்றும் மாறுபடாதன. கல்லாத சிறார் பேச்சி லுள்ள சந்தியும் தமிழிலக்கணம் கூறுகின்ற சந்தி யும் ஒன்றே. எல்லாப் பெயர்களும் ஒரு தன்மை யாகவே வேற்றுமை யுருபேற்றுத் திரிபின்றி நிற்கும் எண்மை யுடைய வாதலால், பேசுதற்கு என எவரும் வேற்றுமை யிலக்கணம் கற்க வேண்டுவதின்று. இவை யெல்லாம் இம் மொழியின் வழக்கிற்குச் சிறந்த கருவியாவன. மற்றும் இதற் குரிய* சிறப் பியல்புகளோ பல. இதன் எழுத்தெல்லாம் பெரும் பாலும் இயற்கையிற் பிறப்பன. மெய் யெழுத்துக்

கள் வலி, மெலி, இடை யென மூன்று இனமாக அமைந்திருப்பதும், அவை ஒவ்வொன்றும் ஒரே யளவாக அவ்வாறு எழுத்துக்கள் பெற்றிருப்பதும் வியப்பு விளைப்பனவாம். உரப்பலும், கனைத்தலு மின்றிக் கூறத் தக்க இவ் வெழுத்துக்களுள்ளும், இவை மொழிக்கு முதலில் வாரா என்றும், இவை இறுதியில் வாரா என்றும், இவ்விவற்றோடு இவ் விவை மயங்கா என்றும், மக்களது நாவி னியல் பையும், ஒலியி னியல்பையும் ஆராய்ந்தறிந்து, அரு முயற்சி யின்றிக் கூறத் தக்கவாறு முதனூலாசிரியர் வரையறை செய்திருக்கும் மாட்சியை யாம் எங்ஙனம் வியந்து கூறுவது? சொற்களெல்லாம் பெரும் பாலும் பொருளுக்கும், வினை, பண்பு முதலியவற் றுக்கும் ஏற்ற ஓசையமைதி யுள்ளன. பகுத்தறி வுடைய மக்கள் முதலிய வுயிரை உயர்திணை யென் றும், பகுத்தறிவில்லாத உயிரையும், உயிரில் பொரு ளையும் அஃறிணை யென்றும் அறிவு பற்றி வேறு எந்த மொழியில் பாகுபாடு செய்திருக்கிறது? சொல் நோக்கி ஆணைப் பெண்ணாகவும், பெண்ணை ஆணாகவும், இரண்டையும் அலியாகவும், பிறழக்கூறு மாறின்றிப், பொருள் நோக்கத்தாலே இம் மொழி யில் பால் வகுத்திருக்கிறது. இதிலுள்ள வினைச் சொற்கள், திணை, பால், இடம், காலம் என்பவற்றை உணர்த்துவதுபோல், வேறு எம்மொழிச் சொற்க ளுணர்த்துவன வாகும்? இதிலுள்ள பாக்களெல் லாம் பொருளுக்கேற்ப வேறு வேறு ஓசை யமைந் தவை. மக்கள் அடையற் பாலனவாகிய பொருளை யெல்லாம் அகம், புறம் எனப்பகுத்து, அவற்றுக்

குரிய ஒழுக லாற்றினை இலக்கணத்தால் வரையறை செய்வது இம்மொழிக்கேயுரிய சிறப்பியல்பு.' என்று இங்ஙனம் கூறக் கேட்ட ஆரிய வரசன், 'ஆ! இத் துணைப் பெருமையுடைய தமிழை என் அறியாமை யாலன்றோ இகழ்ந்திருந்தேன்.' என்று தன்னை நொந் து கொண்டவனாய்ப், பின்பு கபிலரை நோக்கி, 'அந் தணளீர்! இளஞாயிறு போலும் நுமது சொல்லாகிய கதிர்களால் என் அறியாமை யென்னும் இருள் இரிந்தோடுவதாயிற்று. உலகிலுள்ள மொழிகளில், தமிழே தொன்மையும், பெருமையும் வாய்ந்ததென இப்பொழுது நன்கறிந்தேன். தமிழின் பொருட் பாகுபாட்டினைப் புலவர் பெருமானாகிய நும்மிடமே நன்கு அறிந்துகொள்ளும் அவாவுடையேன்.' என்று கூறினன். கபிலரும், அவனுக்குக் குறிஞ்சி முதலிய அகத்தின் பகுதிகளையும், வெட்சி முதலிய புறத் தின் பகுதிகளையும் விளக்க எடுத்துரைத்துப், பின்பு, தாம் இயற்றி வந்த குறிஞ்சிப் பாட்டைக்கூறி, அதன் பொருளையும் அறிவுறுத்தருளினார். வேறு எம் மொழியிலும் காணப்படாத பொருளிலக்கணத்தை யும், அகப் பொருளின் ஓர் துறைக்கு இலக்கிய மாகிய குறிஞ்சிப் பாட்டையும் கூறக் கேட்ட பிர கத்தனுக்கு உண்டாய மகிழ்ச்சிக்கு ஓரெல்லையின்று. குறிஞ்சிப் பாட்டிலுள்ள இயற்கை யழகுகளும், நீதி முதலியவும் அவன் உள்ளத்தைக் கவர்ந்து விட் டன. அன்று முதலாக அவ்வரசன் பேரார்வமுடன் இடையறாது தமிழ் பயின்று, பாட்டியற்றும் நல்லி சைப் புலவனுமாயினன். இவ்வாறு ஆரிய வரச னைத் திருத்திய கபிலரது அறிவு, ஆற்றல் முதலிய

வற்றை அனைவரும் கொண்டாடினார்கள். கபிலரது புகழ் எங்கும் பரவிற்று.

அக்காலத்தில், வீரத்தின் மேம்பட்ட பேரரசர்களேயன்றிக், குறுநில மன்னருள்ளும் பலர் சிறந்த வள்ளல்களாய் விளங்கினர். சிறிய பூக்களையுடைய முல்லைக்கொடி படர்தற்குத் தனது பெருந்தேரை யளித்த பறம்பிற்கோமானாகிய பாரியும், காட்டிலே யுள்ள மயிலுக்குத் தனது மேற்படாத்தினை நல்கிய பெருங்கல் நாடனாகிய பேகனும், இரவலர்க்கு வேண்டுவன யாவும் நல்கிய முள்ளூர் மன்னனாகிய காரியும், கொல்லிமலைத் தலைவனாகிய ஓரியும், நள்ளியும் முதலிய வள்ளியோர்கள் அப்பொழுது விளக்கமுற்றிருந்தனர். அவருள்ளே, வரையா வள்ளன்மையால் வையகமுழுதும் தன்புகழ் பரக்க விருந்த வேள்பாரியின் அருங் குணங்களையும், பெருஞ் செயல்களையும் கேள்வியுற்றார் கபிலர். 'ஆ! ஒருமுல்லைக்கொடி படர்தற்குக் கொழுகொம்பின்றி நடுங்குவதுகண்டவளவிலே, தான் ஊர்ந்து வந்த தேரினை அது படருமாறு நிறுத்திக்கழலடி சிவப்ப நடந்து சென்றானும்! அவ்வோரறிவுயிர் மாட்டும் வரம்பின்றெழுந்த அவனது இயற்கைப் பேரருட் பெருக்கினை யாவர் அளவிட்டுரைக்க வல்லர்? அவ்வருளுடன் கூடிய அறிவன்றோ அறிவெனப்படுவது. இத்தகைப் பெருமை யுடையானை எப்பொழுது காண்பேம்?' என்று நினைந்து வேள் பாரியைக் காண்டற்கு விருப்பு மிக்கவ ராயினர். பாரியும், கபிலரது பெருமையெல்லாம் கேள்வியுற்று, 'மனந்தூய்மை, செய்வினை தூய்மை இரண்டும் இனந் தூய்மை பற்றுக்கோடாக வரும் என்பர் பெரியோர்.

தூய்மையே ஒருருவெடுத்தாலனையர் கபிலர். அன்னவரை எப்பொழுது இனமாகப்பெறுவேன்? தூய்மையுறுவேன்?' என்றெண்ணி, அவர்பால் அன்பு மீதாரப்பெற்றவனானான். வள்ளியோன் அன்பினால் இழுக்கப்பட்டார் கபிலர். மதுரையை அரிதின் நீங்கினார். பறம்புநாடடைந்து பாரியைக் கண்டார். அன்று தொட்டு ஒருவர் ஒருவரிற் கலந்த கேண்மையராயினர். பாரியானவன், அறிவாற்றல் மிக்க பெரியாராய கபிலரது கேண்மையினும் பெறுதற்கரிய பேறு பிறிதின்றெனக் கருதி, அவரது குறிப்பின்வழி யொழுகுவானாயினன். கபிலரும், அவ்வள்ளலுக்கு அருமந்த நண்பராயும், சூழ்ச்சித்துணைவராயும் விளங்கியதோடு பறம்பு மலையின் இயற்கை வளனெல்லாம் பல்காலும் கண்டு கண்டு களித்து, அங்குள்ள பூவும், புள்ளும் முதலிய கருப்பொருள்களின் பெற்றியை யெல்லாம் நுனித்தறிந்து, சுவை கனிந்த அகப்பொருட் பாட்டுக்கள் பலபாடியும் வள்ளியோர் தலைவனை மகிழ்வித்து வருவார். ஒரோருகால், தன்னையடைந்தவர் அறிஞராயினும், மடவாராயினும், வலியராயினும், மெலியராயினும் அன்னவர்க்கு வேண்டுவன நல்கிவிடுக்கும் பாரியின் வண்மையினைப் பாராட்டிப் பாடுவர். இங்ஙனம் பல்லாண்டாகப் பாரியுடன் வாழ்ந்து வரும் நாளில் வையாவிக்கோப் பெரும்பேகன், மலையமான் திருமுடிக்காரி என்னும் வள்ளல்களின் நண்பும் அவர்க்கு உளதாயிற்று.

ஒருகால் அவர் வேள்பேகனைக் காண வேண்டி, 'அருந்திறற் கடவுள்' ஆய முருகவேள் கோயில் கொண்டிருந்து மன்பதைகட்கு அருள் வழங்கா

நின்ற பழனிமலையினையுடைய ஆவினன்குடி என்னும் அவனது ஊரை அடைந்தார். அப்பொழுது, பேகனோ, ஆடல் பாடலில் வல்லளான அழகின் மிக்க ஓர் கணிகையின் கண்வலையிற் சிக்குண்டு, கற்பினுக் கரசி யெனத்தகும் தன் மனைவி கண்ணகியைப் பிரிந்துறை வானாயினன். கண்ணகி யென்னும் பெயருடையார்க் குக் கணவராயினார் இங்ஙனம் ஒழுகுவது இயற்கை போலும்! கற்புடைய மகளிர்க்குத் தம் கணவர் தம் மைப் பிரிந்திருத்தலே யன்றிப், பிறமகளிர் வயமா யொழுகுதலும் புரியின், அதனினும் தாங்கற் கரிய துயரம் பிறிதுண்டோ? கண்ணகியும் ஆற்றாமை மேலிட்டு நீருமாடாள்; பூவுஞ் சூடாள்; விலையுயர்ந்த ஆடையாலும், அணியாலும் ஒப்பனை செய்து கொள் ளாள்; ஊணின்றி, உறக்கமின்றி, உடம்பு மெலிந்திடு வாள்; இரங்கி யினைந்திடுவாள். இங்ஙனம் இவ ளுற்ற ஆற்றாமையின் காரணத்தை யறிந்த சான்றோ ராய பரணர், அரிசில்கிழார், பெருங்குன்றூர் கிழார் என்னும் புலவர் பெருமக்கள் பேகன்பாற் சென்று, கண்ணகியின் றுயரினைப் பலவாறு எடுத்துக் கூறி, ‘நீ அறநெறியில் ஒழுகி, நின்மனைவியின் ஆற் றாமையைப் போக்குவதே நின்னை யாம் இரக்கும் பரி சில்.’ என்று வேண்டினார்கள். அருள் சேர்ந்த நெஞ் சினராய கபிலரும், பேகனை யடுத்து, ‘வளமிக்க மலை பொருந்திய நாட்டை யுடையானே! தாளாற்றலும் கைவண்மையும் உடைய பேக! நேற்றுச் சுரத்தின் கண் நடந்து வருந்திய எனது சுற்றத்தின் பசியைப் போக்குமாறு, முரசுபோல் ஒலிக்கும் அருவியை யுடைய உயர்ந்த மலையிடத்துச் சீறூரிலே நின்வா

பிலின் கண் வந்து நின்னையும் நின்மலையையும் வாழ்த்தி நின்று பாடினேன்; அப்பொழுது துயர் மிகுதியால் இடையறாது சொரிகின்ற கண்ணீரானது தன் மார்பகத்தை நனைக்கும்படி விம்மி நின்று, வேய்ங்குழல் இரங்கி யொலிப்பதுபோல, ஒருத்தி அழுதாள்; பெரிதும் இரங்கத்தக்காள்; அவள் யாரோதான்?' என்று கூறினர். அவற்றையெல்லாம் கேட்ட பேகன், தலை கவிழ்த்து, நாண மெய்தியவனாய்த், தன் தவற்றினை நினைந்து நினைந்து வருந்தித், தன் குற்றத்தைப் பொறுத்தருள வேண்டுமெனக் கபிலர் முதலிய சான்றோரை வணங்கி வேண்டி நின்று, அன்னவர்க்கு அருங்கலனும், பிறவும் ஆய பரிசில்களை அருகாது வழங்கி விடுத்துப், பின்பு கண்ணகியுடன் கூடி இல்லறம் இனிது நடாத்தி இன்புற்று வந்தான்.

கபிலர், 'ஆவியது நல் ஊர்' எனப் பொருள்படும் ஆவிநன்குடியை நீங்கி, மலையமானாட்டிலே, பெண்ணையாற்றங் கரையிலுள்ள திருக்கோவலூரை யடைந்து, மலையமான் திருமுடிக்காரியைக் கண்டு, அளவளாவி மகிழ்வாராயினர். முள்ளூர்மலைக்குத் தலைவனும், கோவலூரை அரசிருக்கையாகக் கொண்டவனும், போரிலே மூவேந்தர்க்கும் ஒரொருகால் உதவி புரிந்த பெரு வீரனும், புலவர்க்கும், இரவலர்க்கும் வரையாது வழங்கும் வள்ளியோனும் ஆகிய திருமுடிக்காரியும் கபிலரது வரவிற்குப் பெரிதும் மகிழ்ந்து, அவர்பால் நட்புரிமையோடு ஒழுகி வருவானாயினன். வள்ளலாகிய காரி, உயர் குணங் பலவும் உடையனாயினும், புலவர்களின் வரிசை யறியாது நல்குகின்றான் என்பதனை யறிந்த கபிலர், அவனுக்கு

அறிவுகொளுத்தக் கருதி, ஓர் கால் அவனை நோக்கி, 'மிக்க வண்மையையுடைய தலைவ! ஓரிடத்துள்ள வள்ளியோன் ஒருவனை நினைந்து நாற்றிசையினு முள்ள பரிசிலர் பலரும் வருவர்; அவர் வரிசையறிதல் அரிது; கொடுத்தலோ மிகவும் எளிது; நீ அதனை நன்கு அறிந்தாயாயின், புலவரிடத்து வரிசை கருதாது பொதுவாக நோக்குதலைத் தவிர்வாயாக.' என்று கூறினர். பின்பொருகால், அவனது வீரத்தையும், வண்மையையும் பாராட்டி, 'வீரக்கழலணிந்த திருந்திய அடியை யுடைய காரியே! நின் நாடு கடலாற் கொள்ளப்படாது; பகைவரும் கொள்ளக் கருதார்; எனினும், அது நினக்கு உரித்தன்றி வேள்வித்தீயைப் புரக்கும் அந்தணருடையதாகின்றது. மூவேந்தருள் ஒருவற்குத் துணையாக வேண்டுமென, அவர்கள் பால் நின்றும் வந்தோர், தனித்தனி புகழ்ந்து, நினக்குத் தரும் பொருளும் நுமது குடியை வாழ்த்தினராய் வரும் பரிசிலருடையதாம். ஆதலால், அருந்ததி யொக்கும் கற்பினையும், மெல்லிய மொழியையும் உடைய அரிவையது தோள் மாத்திரை யல்லது, நினதென்று சொல்லல ஒன்று இல்லையாயிருக்கவும், நீ பெருமித முடையையாய் இருக்கின்றாய்! இதற்குக் காரணமென்னை?' என்று வியப்புறக் கூறினர். 'வள்ளியோர் பிறரெல்லாம் நாண் மது வுண்டு மகிழ்ச்சியுற்ற போழ்து பிறர்க்கு வழங்குவர்; மலையமான் இயல்பாக வழங்கிய தேர்கள் முள்ளூர் மலையினுண்டாகிய மழைத்துளியினும் பல.' என்றும், 'அருவியொலிக்கும் பெரிய மலையுடையோனைப் பாடியவர்கள், நல்ல நாளன்றிப் போகிப், புள் நிமித்தம் இடை

நின்று தடுப்பச், செவ்வியன்றாகப் புகுந்து, வெறுக்கத் தக்கவைகளைச் சொல்லினும், பரிசில் பெறாது வறிதாக மீள்வாரல்லர்.' என்றும் அவனது இயற்கையாகிய கொடையின் சிறப்பைப் புகழ்ந்துரைத்தனர். இவ்வாறாய ஆழ்ந்த கருத்துள்ள பாடல்கள் பல பாடி, மலையனை மகிழ்வுறுத்தி வந்த கபிலர், தம் அரும்பெறல் நண்பனாகிய வேள்பாரியைக் காணும் ஆதாம் பெருகினமையின், அங்கு நின்றும் போந்து, பறம்பு நாடடைந்து, பாரியின் அருள் பொழியும் விழிகளுக்கு நல்விருந்தாயினார்.

நவிலுந்தொறும் நூலின் நயம் வெளிப்பட்டு இன்பம் விளைத்தல் போல், பழகுந்தொறும் இவ்விருவருடைய இனிய பண்புகளும் வெளிப்பட்டு, இருவர்க்கும் இன்பம் விளைப்பவாயின. காக்கையின் இரு கண்ணிற்கும் மணி ஒன்றாதல் போல, இவ்விருவருடம்பிற்கும் உயிர் ஒன்றென்னுமாறு விளங்கினார்கள். பாரியின் வண்மைத் தன்மையைக் காணுந்தொறும், கபிலர் மிக்க வியப்பும் உவப்பும் உடையராய், 'மக்களுள் யாவரானும் விரும்பப்படாத எருக்கம்பூவாயினும் கடவுள் விரும்பி ஏற்றுக்கொள்ளுதல் போல, யாதும் அறிவில்லாரும், புன்குணனுடையாரும் செல்லினும், அன்னவர்க்கும் பாரி கைவண்மை செய்தலைக் கடப்பாடாக வுடையன்.' என்று, கடவுளோ டொப்பித்துக் கூறி, அவனது விரிந்த வுள்ளத்தின் மேன்மையை விளக்கிடுவர். 'பாரி, பாரியென்று சொல்லி, அவன் பல புகழையும் வாழ்த்தி, அவ்வொருவனையே புகழ்வர், செவ்விய நாவினையுடைய புலவர்; பாரி யொருவனுமே யல்லன், மாரியு

முண்டு, இவ்விடத்து உலகத்தைப் பாதுகாத்தற்கு.' என்று பழிப்பது போற் புகழ்ந்து, வரைவின்றியும், கைம்மாறு கருதாதும் ஈயும் பாரியின் கடப்பாட்டின் மேன்மை தெரித்திடுவர். 'பறம்பு மலையானது, பாடுவார்க்குக் கூறிட்டுக் கொடுத்தலின், அவருடைய தாயிற்று; அறத்தினை மேற்கொண்டு, பாரியும், பரிசிலர் வேண்டுவாராயின் அவ்வழி வாரேன் என்னுனாய் அவரெல்லையின் கண்ணே நிற்பன்.' என்று, பரிசிலர்க்கு என்பு முரியனும் அவனது அன்பின் திறத்தினை யெடுத்தியம்புவர். இவ்வாறு, வேள் பாரியானவன் கபிலர் பாடும் புகழுடையோனாய் விளங்கினன். அவனது புகழ் நாடெங்கும் பரந்தது. அக்காலத்துச் சேர, சோழ, பாண்டியர்களில் வீரத்தினும், நீதியினும் மேம்பட்ட பேரரசர் சிலரிருந்தனர். அவருடன் பகைகொண்டு அரசின்றித் திரிந்தாரும் சிலருண்டு. அங்ஙனம் திரியனுற்றார் மூவர், ஒருங்கு கூடிப், படைகளைத் திரட்டிச் சென்று, பாரியின் பறம்பென்னும் மலையரணை முற்றுகை யிட்டனர். அவ்வரணே, நீர், நிலன், காடு என்பவற்றாற் சூழப்பட்டது; எணிக்கெட்டாத வுயர்ச்சியும், புறத்தோர்க்குத் தோண்டலாகாத அடியகலமும், அகத்தோர்க்கு நின்று வினை செய்தற்காம் தலையகலமும், கல்லானும், இட்டிகையானும் செய்யப் பட்டமையின், குத்தப் படாத திண்மையும் உடைய மதிலினை யுடையது. அகத்தோர்க்கு வேண்டும் பொருள்க ளெல்லாவற்றையும் உடையது. தலைவன் மாட்டன்பும், மானமும், மறமும், சோர்வின்மையும் முதலிய நற்குணங்களுடையராய், உற்றுழி யுதவும் வீரரை யுடை

யது. மற்றும், அரணுக்கு வேண்டும் பிற மாட்சி மைகளையும் உடையதாய், மடிந்திராது, ஏற்ற வினையை அளவறிந்து செய்து, காக்க வல்ல வினை மாட்சி யுடையாரையும் உடைத்தாய் இருந்தது. ஆகலின், அஃது எத்துணைப் படை மாட்சி யுடையரானும் எளிதிற் பற்றப் படுவதொன் றன்று. மூவாது முற்றுகையும் நெடுங்காலஞ் சென்றது. அரண், அடை மதிற்பட்டிருந்த காலை, அகத்துள்ளார் உணவின்றி வருந்தா வண்ணம், அங்கிருந்த புலவர் பெருமானாகிய கபிலர், † கிளிகள் பலவற்றைப் பயிற்றி விடுத்து, அரணுக்குப் புறத்தேயுள்ள விளைநிலங்களிலிருந்து நெற்கதிர்களை நாடொறும் கொய்து வரச்செய்து,

† இச் செய்தி.

'உலகுடன் றிரிதரும் பலர்புகழ் நல்லிசை
வாய்மொழிக் கபிலன் சூழச் சேய்நின்று
செழுஞ்செய் நெல்லின் விளைகதிர் கொண்டு
தடந்தா ளாம்பன் மலரொடு கூட்டி
யாண்டுபல கழிய வேண்டுவயிற் பிழையா
தாளிடூஉக் கடந்து வாளமரு ழக்கி
யேந்துகோட் டியானை வேந்தரோட் டிய
கடும் பரிப் புரவிக் கைவண் பாரி' (அகம்-78)
என நக்கீரனாராலும்,

'புலங்கந் தாக விரவலர் செலினே
வரைபுரை களிற்றொடு நன்கல னீயு
முரைசால் வண்புகழ்ப் பாரி பறம்பி
னிரைபறைக் குரீஇயினங் காலைப் போகி
முடங்குபுறச் செந்நெற் றரீஇய ரோராங்
கிரைதேர் கொட்பின வாகிப் பொழுதுபடப்
படர்கொண் மாலைப் படர்தந் தாங்கு' (அகம் 303)
என ஔவையாராலும் கூறப்பட்டுள்ளது.

அங்குள்ள குடிகளேயும், படைகளையும் உண்பித்துக் காப்பாற்றிவந்தனர். அங்கிருந்த நொச்சி மறவராயி னர், தம் மலையின் கண் இயற்கையாய்க் கிடைக்கும் பலாப்பழம்,வள்ளிக்கிழங்கு முதலிய வுணவுகளோடு கபிலரது சூழ்ச்சியாற்கிடைக்கும் உணவினேயுமுண்டு தளர்வின்றிப் போர்மலைந்து வந்தனர். முற்றுகை பல் யாண்டாகியும், அரணினைக் கைப்பற்ற வியலாத மூவேந்தரும், பாரி தன் மகளிரைத் தமக்கு மணஞ் செய்து கொடுப்பின் தாம் போர்புரிவதில்லை யெனக் கூறிவிடுத்தனர்.இதனைக்கேட்டலும்,பாரிக்குச் சினம் மூண்டது. கவரிமான்போலும் மானமுடைய வீர னவன் இவ்விழிமொழியை எங்ஙனம் பொறுத் திருப்பன்? கடியதோர் வாளராவெனச்சீறியெழுந்து உழிஞையார்மேற் சேறலுற்றான். புலவரேறுய கபி லரும்,முன்னர்ச் சென்று, மதிற்புறத்தெய்தி,மூவேந் தரையும் பார்த்துப், பின்வருமாறு கூறலுற்றார்:—

'பெருமை பொருந்திய முரசினையுடைய நீயிர், மூவேந்தரும், எத்துணைக்காலம் முற்றுகை செய்யி னும், பறம்பு என்னும் அரணிலுள்ளார்க்கு உணவுக் குறை உளதாகாது. மூங்கில் நெல்லும், பலாப்பழ மும், வள்ளிக்கிழங்கும், தேனும் என்னும் நான்கு பொருளேயும் அது மிகுதியாக வுடைத்து. இவை உழவரது முயற்சியின்றியே இயற்கையிற் கிடைப் பன. நீங்கள் எண்ணிலாத களிறும், தேரும் கொ ணர்ந்து அமர்விளைப்பினும், நுமது முயற்சியால் அரணைப்பற்ற மாட்டீர். நும்வாள் வலியால் பாரி அதனைத் தருவானல்லன். அதனைக்கொள்ளுமாறு யான் அறிகுவன். வடித்து முறுக்கிய நரம்பினை

யுடைய சிறிய யாழை வாசித்து, நும் உரிமை மகளிர் பின்வர, ஆடிப்பாடிச் செல்வீராயின், அவன் நமக்கு நாடும் மலையும் சேரநல்குவன்.'

'பெருமை மிக்க தானையினையுடைய மூன்று திறத்தீரும் கூடிப் பொருதீராயினும், பறம்பு கொள்ளுதற்கரிது. குளிர்ந்த நல்ல பறம்புநாடு முந்நூறு ஊர்களை யுடைத்து. அம்முந்நூறூர்களையும் பரிசிலர் பெற்றனர். நீவிர் பாடிக்கொண்டு வரின், நமக்குப் பரிசிலாக மலையுள்ளது. அதுவேயன்றி யாமும் பாரியும் உள்ளேம்.'

'பாரியது பெரியமலை இரங்கத்தக்கதொன்றே அது வேற்படைகொண்டு பொரும் வேந்தர்க்கு அரிது எனினும், நீமைலர்போலும் மையுண் கண்களையுடைய விறலி பாடினாய்வரின், அவட்கு எளிதாகின்றது.'

என்றிங்ஙனம் பாரியது புரவலர்க் கருமையும், இரவலர்க் கெளிமையும் ஆகிய நிலையினை யெடுத்து, அவ்வேந்தர்களைச் சிறிதும் மதியாது, எந்திய கொள்கையரான கபிலர் கூறினர். கூற, மூவேந்தரும், இனி நாம் பாரியை வெல்லுதலரிதென ஊக்க மழிந்தனர். பாரியின் படைவீரர் ஆரவாரித் தெழுந்தனர். பாரியும் புகுந்து மந்தர மனைய திண்டோள் வலியால் பகைக் கடலை யுழக்குவானாயினன். மூவேந்தரும் படையுடன் முரிபட்டோடினர். வெற்றித்திருவும் பாரியின் வெற்புத் தோளை மேவலுற்றனள். இஃதிவ்வாறாக, ஊழ்வினை பயனூட்டுங் காலம் அணுகியது. அதனை யொழிக்க வல்லவர் யாவர்? பாரியுடன் சமர் புரியலாற்றாது நிலைகெட்டோடிய மூவரும் ஓரிடத்

துக் கூடினர். கூடிப், பாரியின் அருமை, பெருமை களை யறியாத பண்பிலிகளாய அன்னோர், அந்தோ! அவனை வஞ்சத்தாற் கோறல் கருதினர். அதற்கொரு சூழ்ச்சியும் புரிந்தனர். நஞ்சனையார் புரிந்த வஞ்சனை இன்னதென யாரா லியம்ப லாகும்? மாரியனை யான் பாரியும் பூதவுடம்பை விடுத்துப், புகழுடம்பை நிறுத்தினன். விண்ணவர் மலர்மாரி பொழிய, மண் ணவர் கண்மாரி பொழிந்தனர். இரவல ரிரங்கினர். புலவர்கள் புலம்பினர். அவனுக்கு ஆருயிர்த் தோழ ராயிருந்த கபிலரது பெற்றியை உரைப்பதென்னே! பாரி தடுத்திராவிடின் தாமும் உயிர் துறந்திருப்பா ரல்லரோ? பாரியின் சொற்களாலும், அவன் மகளி ரைப் பாதுகாக்க வேண்டியும் உயிர் சுமந்திருந்தா ரா யினும், புலவர் பெருமான் நாளும் எல்லை யில்லாது துயருழப்பா ராயினர். பறம்பு நாட்டு முந்நூறூரை யும் பரிசிலர்க் களித்த பெருமையை நினைந் திரங்குவர் ஒருகால். முல்லைக் கொடிக்குப் பொற்றே ரளித்துக் கழலடி சிவப்ப நடந்து சென்ற பேரருளை நினைந் திரங் குவர் ஒருகால். அறிவும், அன்பும், செறிவும், பொறை யும் முதலிய குணனெல்லாம் நினைந் திரங்குவர் ஒவ் வொருகால். அன்புடையாரைப் பிரிதலினும் துன்ப மென்ப தியாதுண்டு? புலமை நிறைந்த அவரது உள்ள மும் நிலையழிந்தது. பலவாறு அழுங்கிக் கூறுவர்.

'உலகெங்கும் வறங் கூர்ந்த பொழுதும் அவனது நாட்டில் வயல் விளைவு மிகப், புதலிடத்துப் பூக்கள் மலர, ஆமாவினது நிரை நல்ல புல்லை மேய, மழை பொய்யாது பெய்தது; சான்றோர் பலராயினர்; அவற்றிற்குக் காரணம் அவனது செங்கோன்மை

யன்றே? அங்ஙனம் கோல் செவ்விதாக நிறுத்தியானை யும் இழப்பதே!' என்றும்;

'நிழலில்லாத நீண்ட சுரத்துத் தனிமரம் போன்று முரசுடை வேந்தரினும் மேலாக இரவலர்க்கு ஈயும் வள்ளியோன் நாடு முன்பு பல புதுவருவா யினையு முடைத்து; இனி அது கெடுங்கொல்லோ!' என்றும்;

'கரிய கூந்தலை யுடைய மடந்தையர்க்குத் தந்தை யும், புலவராற் பாடப்பட் டமையாத பண்பினனும், பகைவர் புறக் கொடுத் தோடும் வீரக் கழலின் ஆரவாரத்தைக் கண்டு நாணிப் பின்செல்லாது நிற்போனும் ஆகிய, முருகனை யொக்கும் வென்றியை யுடையானது நாடு, முன்பு, நன்றாக விளைந்த புதிய வரகை யறுக்கவும், தினையை யரியவும், எள்ளிளங் காய் கறுப்பவும், அவரையின் கொழுங் கொடியில் வெளிய காய் அறுக்குஞ் செவ்வி பெறவும், நறு நெய் யிலே கடலை துள்ள அதனோடு சோற்றை யட்டு ஊட்டுதற்கு மனையாள் கலம் பூசுதலைப் பொருந்தவும் புது வருவாயை உடைத்தா யிருந்தது; இனி அது கெடும் போலும்!' என்றும்;

'இரவலர்க்குத் தேர் வழங்கும் பாரியது சூழிர்ந்த பறம்பு நாட்டில், எண்ணாட் பிறை போலும் வளைந்த கரையையும், தெளிந்த நீரை யுமுடைய குளம், பாது காப்பாரின்றி உடைவதே!' என்றும்;

'மலர் செறிந்த காவில் மயி லெழுந்து ஆடவும், மலையின் கண்ணே யேறி முசுக்கலை தாவி யுகளவும், அம் முசுக்கலையும் நுகர்ந்து வெறுக்குமாறு மரம் பல்வும் காலமன்றாகவும் பழுத்துதவும் புது வருவா யொழியாத சாரலை யுடைய மலை யுச்சியில் ஏறித்,

தம் தந்தையாகிய பாரியின் அருமை யறியாது, போரேற்று வந்த அரசரது குதிரையை யெண்ணு வோராகிய, மழைக் கண்ணும் இன்முறுவலு முடைய மகளிர், இப்பொழுது முள் வேலியையும், பஞ்சு பரந்த முற்றத்தையு முடைய சிறிய மனை யருகே, பீர்க்கும், சுரையும் படர்ந்த விடத்தில், ஈத்திலையை யுடைய குப்பையின் கண்ணே யேறி, உமணர் உப்புச் செலுத்தும் சகடத்தை எண்ணுவர்; நோவேன் யான்! எனது வாழ் நாள் கெடுவதாக!' என்றும்; அவனது மலையும், நாடு முற்ற நிலையினையும், அவன் மகளிருக் குற்ற எவ்வத்தினையும் குறித்துப் பலவாறு அழுங்கி அரற்றினர்.

இங்ஙனமாகக் கையாறெய்திய கபிலர், பின்பு, அங்கிருக்க உளம் பொறாதும், பாரிமகளிரைத் தகுதி யுடைய ஆடவர்க்கு வாழ்க்கைப் படுத்துதல் கருதியும், அன்னாரை அழைத்துக் கொண்டு பறம்பே யேக லுற்றனர். ஏகுகின்றவர், பறம்பினை நோக்கி நின்று 'ஓ! பெரிய புகழை யுடைய பறம்பே! முன்பு பல சிறந்த வுணவையும் விரும்பியவாறே தரும் மிக்க செல்வமும் முதிர்ந்து, எம்முடன் நட்புச் செய்தாய்! இப்பொழுது, பாரி இறந்தானாகக், கலங்கிச், செயலற்று, வளை யணிந்த முன்கையை யுடைய மகளிரின் மணங் கமழும் கரிய கூந்தலைத் தீண்டுதற்கு உரியவரை நினைந்து, நீர் வார்கின்ற கண்ணை யுடையேமாய், நின்னைத் தொழுது வாழ்த்திச் செல்லுகின்றேம்; நீவாழ்வாயாக!' என்று கூறி, அதனை விடுத்துச்சென்றனர். சென்றவர், சிறிது தூரத்தில் நின்று, மீளவும் நோக்கி, 'தேர்வழங்கும் இருக்கையை யுடைய உயர்ந்தோ

னது மலை, அவன் உளனாய காலத்துப் புகழானுயர்ந்து, காணாதார்க்கும் செவிப்புலனாகத் தோன்றும்; இப்பொழுது பிற மலைகள்போல் கட்புலனளவிற்றாய், இவ்விடத்து நின்றோர்க்கும் தோன்றும்; சிறிது எல்லை போய் நின்றோர்க்கும் தோன்றும்.' என்று இரங்கிக் கூறினர். இங்ஙனம் பறம்பின்பால் வைத்த பெரும் பற்றினாலே கவற்சிமிக்குப், பலவாறு கூறிக்கொண்டு சென்று, மாலைப் பொழுதில் ஓர் பொய்கையருகே தங்கினர். மதியமானது வெள்ளிய நிலவினை விரித்து விளங்குவது கண்டனர் பாரிமகளிர். சென்ற திங்களில் அந்நிலாப்பொழுதில் தாம் இருந்த நிலைமையும், இப்பொழுது இருக்கும் நிலைமையும் அவர்கள் மனத்திலுதித்தன. உடனே உள்ளுடைந்துருகி, 'ஆ! அற்றைத்திங்களில் அவ் வெண்ணிலாவில் யாம் எந்தையை உடையேமா யிருந்தேம்; எம் குன்றும் பிறரார் கொள்ளப் பட்டிலது. இற்றைத் திங்களில் இவ் வெண்ணிலாவில் வேற்று வேந்தராயினோர் எம் குன்றினைக் கைப்பற்றினார்; யாம் எந்தையை உடைய மல்லேமும் ஆயினேம்.' என்று கூறி வருத்தத்துடன் தங்கி யிருந்தனர்.

கபிலரும், மறுநாள் அவர்களை யழைத்துக்கொண்டு சென்று, விச்சிக்கோன் என்னும் சிற்றரசனை யடைந்து அவனை நோக்கி, 'வளம் பொருந்திய மலையினையுடைய, விளைவு மிக்க நாட்டையுடையோய்! நெடிய வேலும், கடுங்கண் யானையும், விளங்கு மணிப்பூணு முடைய விச்சிக்கோவே! இவர்கள்தாம், முல்லைக் கொடியானது நாத்தழும்பேறப் பாடாதாயினும் தனது நெடிய தேரைக் கொள்க வென்று கொடுத்த மேம்பட்ட சிறப்

பிணையுடைய பாரியின் மகளிர்; யானோ, பரிசிலன்; அது வன்றியும் அந்தணன்; நீயோ பகைவரை முறைமையாற் பொருது, வணங்கு விக்கும் வாளால் மேம்படுபவன்; ஆதலால், இவர்களை நினக்கு யான் தர, நீ கொள்வாயாக!' என்று பரிசி லிரப்பார் போன்று கூறினர். கூறியும், அவன், அவர்களுற்ற தாழ்மையை நினைந்தோ, அவர்களை முன்னம் விரும்பிய வேந்தர்களின் பகையுண்டாமெனக் கருதியோ, அன்னவரை மணஞ்செய்து கொள்ள மனமிலனாயினன். பின், புலவர் பெருமான், இருங்கோவேள் என்பானுழைச் சென்றனர். அவனும், இவரை வரவேற்று, இம்மகளிர் யாவரென அறியும் கருத்தினனாயிருக்க, அன்னகாலையில் கபிலர், அவனை நோக்கி, 'போரின்கண் வென்றி மேம்படும் அண்ணலே! புலிகடிமால் என்பதொரு பெயரினை யுடையாய்! பொன்னுண்டாகும் பெரிய மலைக்குத் தலைவ! பகைவ ரஞ்சும் தானையும், கேடில்லாத நாடும் உடையோய்! இவர் யாரென்று வினவுவாயாயின், இவர்தாம், ஊரெல்லா வற்றையும் இரப்போர்க்கு வழங்கித், தேரினை ஏறுதற் கேற்பச் சமைத்த அணியுடன் முல்லைக்கு வழங்கிய நல்லிசை வாய்ந்த பறம்பிற்குத் தலைவனாகிய பாரியின் மகளிர். யான் இவர் தந்தையின் தோழனாதலால், இவர் என்னுடைய மகளிர். அந்தணனாகிய புலவன் யான் கொண்டுவந்தேன். நீயோ, வடபக்கத்து முனிவனுடைய ஓமகுண்டத்திற் றோன்றி, நெடிய மதிலையுடைய துவராபதி யென்னும் படைவீட்டையாண்டு, நாற்பத்தொன்பது தலைமுறை தொன்றுபட்டு வந்த வேளிருள் வேளாயுள்ளாய். ஆதலால், யான் நினக்குத் தர, நீதான் இவரைக் கொள்வா

யாக!' என்றனர். அவனும், பொய்யில் கேள்விப் புலவராகிய கபிலர், இங்ஙனம் கூறியதை மதியாது, சிறிதும் இரக்கமின்றி, அவர்களை மணந்து கொள்ள மறுத்து விட்டனன். கபிலரும், உள்ளம் நொந்து, அன்னவனை நோக்கி, 'நுந்தையின் உரிமையை நிறையப் பெற்ற புலிகடிமாலே! வேங்கையின் ஒள்ளிய பூக்கள் பரந்த பாறை, பெரிய புலியின் வரியையுடைய புறத்தை யொக்கும் மலையிடத்தூர்களை யுடைய நாட்டையுடையோய்! சிற்றரையம், பேரரையம் என இருகூறு பட்டதும், பல்கோடி பொருளை நுங்கட்கு உதவியதுமாகிய அரையத்தினது கேட்டையும் கேட்பாயாக! அது கெடுதலுற்றது, நும்போலும் அறிவினையுடைய நும்குடியு ளொருவன் கழாத்தலையா ரென்னும் புலவரை அவமதித்தமையாலாகும். இவர், கைவண்மையை யுடைய பாரியின் மகளிர்; எவ்வியின் பழைய குடியிலே வாழ்க்கைப் படுவார்களாக; என்று கூறிய எனது தெளிவில்லாத புன் சொல்லைப் பொறுப்பாயாக! பெருமானே! நின்பால் விடைகொண்டேன்! நின்வேல் வெல்வதாக!' என்று வெறுப்புடன் கூறி, அவ்விடம் விட்டு அகன்றனர். அகன்றவர், வேறு செய்வகை யறியாராய், ஆன்றவிந்தடங்கிய கொள்கை நான்மறையாளர் பால் பாரி மகளிரை அடைக்கலமாக வைத்துவிட்டு, மலைநாட்டில் சேரமான் செல்வக் கடுங்கோவாழியாதன், சிறந்த குணமும், மிக்க வண்மையும் உடையனா யிருக்கின்றான் என்பதறிந்து, அவனைக் காணுமாறு சென்றனர். சென்று, செல்வக் கடுங்கோவைக் கண்டு, 'வெற்றி பொருந்திய வேந்தே! பூசிப் புலர்ந்த சாந்தினையும், புலராத ஈகையினையும்,

மலர்ந்த மார்பினையும் உடைய எங்கோ வாகிய பாரி யானவன் முழவு மண் புலரவும், இரவலர் இனைய வும், மீண்டு வாராத சேணுலகத்தை யடைந்தான். நீ என்னை அளிப்பாயாக வென்று இரப்பேனு மல் லேன். அஃதன்றி, உண்மை யொழியப் புகழ்ந்து சொல்வேனு மல்லேன். ஈத்ததற் கிரங்காமை முத லிய பாரியின் குணங்கள் நின்பாலும் உளவென்று உலகங் கூறும் நின் புகழை நின்பாலே தருதற்கு வந்தேன்.' என்று தொடங்கி, அவன் புகழினை ஓர் பத்துப் பாட்டினுற் பாடி யருளினுர். கபிலரது செந் நாவினின்றும் போந்த தீஞ்சுவைச் செந்தமிழ்ப் பாட் டுக்களை வேந்தர் பெருமான் செல்வக் கடுங்கோ வாழியாதன் கேட்டனன். உள்ளத்தே கிளர்ந் தெழுந்த உவகைப் பெருக்கினி லாழ்ந்தனன். பரிசி லாக நூறாயிரம் பொற்காசு கொடுத்தும் அமையாது, நன்று எனப் பெயரிய மலையின் மீதேறித், தன் கண் ணிற் கண்ட நாடெல்லாமும் கொடுத்தான். கபில ரது ஒண்மையையும், சேரமானது வண்மையையும் யாவரும் பாராட்டுவாராயினர். கபிலரும் பெரு மகிழ் வேரடு சின்னு ளங்கிருந்து, செல்வக் கோவிடம் விடைபெற்றுப் போந்து, பார்ப்பனர் பாதுகாவலில் இருந்த பாரிமகளிரையும் உடன் கொண்டு திருக் கோவலூரை யடைந்தனர்.

அடைந்து, தன் நண்பனுகிய திருமுடிக்காரியின் வழியில் வந்த, எழிலும், இளமையும் வாய்ந்த ஏறனை யார்க்குத் தாம் அழைத்து வந்த பூவை யனைய பா வையரை அளித்தனர். மன்னரெலாம் வியக்க, மாட் சிமிக்க பெரியோர்கள் வாழ்த்த, அன்னவர்தம் திரு

மணம் அளவிடற் கரிய சிறப்புடன் நடைபெற்றது. *

கபிலரும் சின்னாள் அங்கிருந்து, பின்பு, தம் நண்பராகிய பாரியின் பிரிவுத் துன்பம் தம்மைப் பெரிதும் சுடா நின்றமையின், தாம் இவ்வுலகில் உயிர் வாழ்ந்திருக்க மனம் பொறாராய்ப், பாரியை நினைந்து 'பெரிய வண்மையினையுடைய பாரியே! நீயும் யானும் கலந்த நட்பிற்குப் பொருந்த, நீ செல்லுங்கால் யான்

* தமிழ் நாவலர் சரிதை என்னும் புத்தகத்திலுள்ள சில பாட்டுக்களைக் கொண்டு. பாரிமகளிர், அங்கவை, சங்கவை என்னும் இருவரும் திருக்கோவலூரி லிருந்த தெய்வீகன் என்பானுக்கு ஔவையாரால் மணஞ்செய்விக்கப் பெற்றனர் என்று ஒருசாராரும்; பாரிமகளிருள் மூத்தவளை மலையற்கு மணம் புரிவித்து, இளையவளைக் கபிலர் தமக்கு வேண்டிய பார்ப்பார் சிலரது பாதுகாவலில் வைத்து விடக்கிருக்க, அவ் விளையவளைத் தெய்வீகன் என்னும் மலையமானுக்கு ஔவையார் பின்பு மணம் புரிவித்தனராகல் வேண்டும் என மற்றொருசாராரும் கூறுப. பிறர் பிறவாறும் கூறுப. ஔவையார் ஒரு பெண்ணுக்கு மணஞ் செய்வித்திருப்பினும் இருக்கலாம். பாரி மகளிர் ஔவையாரை உபசரித்திருப்பினும் இருக்கலாம். அவ்வளவன்றிப் பாரி மகளிர் மணம் ஔவையாரால் நிகழ்த்தப் பெற்றதெனத் துணிதற்கு இடனில்லை. மண நிகழ்ச்சி பற்றித் தமிழ் நாவலர் சரிதையிற் காணப்படும் பாட்டுக்களெல்லாம் பின்னுளோர் புனைவேயாகும். அவை சங்க காலத்திருந்த ஔவையார் பாடியன என்று கொள்ளுதல் தகாது. அவற்றைச் சங்க காலத்துப் பாட்டுக்களோடும், வரலாற்றோடும் அறிவுடையோர் சீர்தூக்கி யறிதல் வேண்டும். பாரிமகளிர் மண வரலாற்றை ஔவையார், கன்றும் கனியுதவும், வேளிர் வரலாறு என்னும் புத்தகங்களிலும். செந்தமிழ் இரண்டாந் தொகுதியிலும் காண்க.

உடன் சேறல் முறைமையாகவும், அதற் கியையாது 'நீ ஈண்டுத் தவிர்க' எனச் சொல்லி, இங்ஙனம் மாறு பட்டமை யாதலின், யான் நினக்குப் பொருந்தினவ னல்லே னாயினேன். அதனால், நீ எனக்கு உதவி செய்த காலங்களினும் என்னை வெறுத்திருந்தா யாதல் வேண்டும். எனினும், இப் பிறப்பில் நீயும் நானும் கூடி இன்புற் றிருந்தவாறு போல, மறுமையி னும் நின்னொடு கூடி வாழ்தலை விதி கூட்டுவதாக!' என்று சொல்லிப் பெண்ணை யாற்றின் நடுவிலுள்ள மணற் பரப்பிலே வடக்கிருந்து, மூலைக் கனலை மூட்டி யெழுப்பித் துறக்கம் புக்கனர்.† அதன் பின், அவ ரது வடிவு கல்லினாற் சமைக்கப்பட்டு, யாவரானும் வழிபடப் பட்டு விளங்குவதாயிற்று.

---

† 'வன்கரை பொருது வருபுனற் பெண்ணைத்
தென்கரை யுள்ளது தீர்த்தத் துறையது
மொய்வைத் தியலு முத்தமிழ்க் கபிலன்
மூரிவண் டடக்கைப் பாரிதன் னடைக்கலப்
பெண்ணை மலையற் குதவிப் பெண்ணை
யலைபுன லழுவத் தந்தரிகூஞ் செல
மினல்புகும் வீடுபே றெண்ணிக்
கனல் புகுங் கபிலக் கல்லது புனல்வளர்
பேரெட்டான வீரட்டானம்
அனைத்தினு மநாதி யாயது.'(திருக்கோவலூர்ச்சாசனம்)
இதன் பொருளைப் புறநானூற்றுக் குறிப்புக்களோடு மாறின்றி அமைத்துக் கொள்ளுதல் முறைமை யாகும்.



## மூன்றாம் அதிகாரம்

## பெயர் முதலியவற்றின் ஆராய்ச்சி

---

### பெயர்க்காரணம்.

கபிலர் என்னும் பெயரினர் பலர். திருமா லவதாரமாகக் கூறப்படும் முனிவர் கபிலரும், சாங்கிய நூலின் ஆசிரியராகிய கபிலரும், சங்கப் புலவருள்ளே தொல் கபில ரென்பாரும், இவ்வாராய்ச்சிக்குப் பொருளாயுள்ள புலவர் பெருமானாகிய கபிலரின் வேறாக விளங்கினோராவர். சிவபெருமானுக்கு உரியதாகும் கபிலர் என்னும் பெயர், கடவுளர் பெயரை மக்கட்கு இட்டு வழங்கும் முறைப்படி, இவர்கட்கு இடப்பட்டது எனக் கொள்ளல் வேண்டும். கபிலம் என்பது செந்நிறத்திற்கு ஒரு பெயராகலின், கபிலர் என்பது செந்நிறமுடைய சிவனார்க்கு உரிய பெயராயிற்று. 'மா அயோயே' என்னும் பரிபாட்டில், சிவனது திருவுருவுடையரான உருத்திரர் பதினொருவரையும், 'பதினொருகபிலர்' எனக் கூறியிருப்பதும், 'உருத்திரரைக் கபில ரென்றார்; அவர் செய்யராதலின்.' என்று பரிமேலழகர் உரைதெளித்திருப்பதும் காண்க.

### குலம்.

இவரது குலம், தமிழ் நாட்டு ஐந்திணை மக்களினின்றும் வேறாகத் தொல்லோரால் வகுக்கப் பெற்ற நாற்பாலுள்ளே அந்தணர் குலமாகும். இவர் அந்தணரென்பது, 'புலனழுக்கற்ற வந்தணாளன்' (புறம்-126) என மாறோக்கத்து நப்பசலையார் இவரைப்

புகழ்ந்து கூறியிருத்தலானும், இவர் பாரிமகளிரை விச்சிக்கோன், இருங்கோவேள் என்பவர்களிடம் கொண்டு சென்று, அவர்களை மணந்து கொள்ளுமாறு வேண்டிய பொழுது, 'யானே, பரிசிலன் மன்னுமந் தணன்' (புறம்-200) என்றும், 'அந்தணன் புலவன் கொண்டு வந்தனனே' (புறம்-201) என்றும் தம்மைக் கூறிக் கொண்டிருத்தலானும் பெறப்படுகின்றது.

இனிப், பகவன் என்னும் அந்தணனும், கருவூர்ப் புலைச்சியாகிய ஆதி யென்பவளும் மணந்து, நான்கு பெண்மக்களும், மூன்று ஆண்மக்களும் வெவ்வேறு ஊர்களில் பிறந்தன ரென்றும், அவர்களுள் திருவா ரூரிற் பிறந்த ஆண் குழந்தையை, அவ்வூரிலிருந்த பிள்ளையில்லாத பிராமணன் எடுத்துக், கபிலர் என்று பெயரிட்டு, வளர்த்துத், தக்கபருவத்தில் உபநயனஞ் செய்வித்தற்கு அவ்வூர் அந்தணர்களை அழைக்க, அந்தண ரெல்லாம் ஒருங்கு கூடி, இப் பிள்ளை நம் மரபிற் பிறந்தவ னன்மையால் கூடாது என மறுத்து விட்டன ரென்றும், அது கேட்டுத் தந்தையார் வருந்தி நிற்பது கண்ட கபிலர், அம் மறையவர் கூட் டத்திற் சென்று, கன்மத்தாலன்றிப் பிறப்பினாலே சாதியென்ப தொன்றில்லை யென முடிவு செய்தன ரென்றும், கபிலரகவல் என வழங்கும் ஒரு பாட்டும், அதனை யொட்டிச் சில ரெழுதிய கதைகளும கூறு கிற்கும். அவ் வகவல் கபிலர் கூறியதாகவே அது தெரிவிக்கின்றது. அது, கபிலர் பார்ப்பன மாந் தரை விளித்துச் சில வினாக்களை யெழுப்பிப், பின்பு இளமையும், யாக்கையும், செல்வமும் நிலையற்றன வாகலின், அறத்தினை உடனே செய்யவேண்டு மென்

றும், கூற்றுவன் உயிர் கொண்டு செல்லின், புந்தி நைந்தழுவது தகாதென்றும், இறந்தவரைக் குறித்துப் பிராமணருக்குப் பொருள் கொடுப்பது பேதைமையென்றும், பிற நாடுகளில் பார்ப்பார் இல்லையென்றும், இந் நாட்டிற்றான் பார்ப்பார் நால்வகைச் சாதியை நாட்டிவிட்டன ரென்றும், பெற்றமும், எருமையும் முதலிய வெவ்வேறு சாதியின் ஆண் பெண் மாறிக் கலந்து கருப்பெறுமை போலன்றி, மக்கள் கருவுயிர்த்த லுண்டாகலின், மக்க ளெல்லாரும் ஒருவகையினரே யென்றும், வசிட்டர், சத்தி, பராசரர், வியாசர் என்போர் பிறப்பில் இழிந்தோராகக் கூறப்படினும், ஒழுக்கத்தால் மாதவராகி வயங்கினரென்றும், பகவனுக்கும் ஆதிக்கும் பிறந்த மக்களில், உப்பை ஊற்றுக்காட்டில் வண்ணாரகத்திலும், உறுவை காவிரிப்பூம் பட்டினத்தில் சான்றாரகத்திலும், ஔவை பாணாரகத்திலும், வள்ளி மலைச் சாரலிலும், வள்ளுவர் மயிலாப்பூரில் பறையரகத்திலும், அதிகமான் வஞ்சி நகரில் அதிகன் இல்லிலும் வளரா நிற்க, யான் திருவாரூரில் அந்தணர் வளர்க்க வளர்ந்தேனென்றும், குலமும் ஒன்றே, தெய்வமும் ஒன்றே யெனவுணர்ந்து, புலையுங் கொலையும் தவிர்ந்து, இரப்பவர்க் கிட்டு வாழ வேண்டுமென்றும், சிறப்பும் சீலமு மல்லது, பிறப்பு நலந்தராதென்றும் அவர்கட்குக் கூறுவதாக அமைந்துளது. கபிலர் மற்றை ஆறு பிள்ளைகளும் போன்று, பிறந்த அக்கணத்திலே செய்யுளியற்றும் அறிவு பெற்றவராகலின், வேறு வேறிடத்திற் பிறந்து வளர்ந்த அப்பிள்ளைகளையும், பிற நாட்டியல்புகளையும், பன்னூற்

கருத்துக்களையும் ஒருங்கு உணர்ந்து கொண்டனர் போலும்! இதிற் கூறப்பட்டுள்ள நீதிகளிற் சிற்சில யாவரும் ஒத்துக்கொள்ளற் பாலனவே. வேறு சில கொள்கைகள் நேர்மையானவை அல்லது, தவறுன வை யென்று யாம் இங்குக் கூறத்துணிந்திலம். அவை நேர்மையுள்ளவே யெனினும், சங்கப் புலவ ராகிய கபிலருடைய கொள்கையல்ல என்பது தேற் றம். இது சங்கப் புலவர் பாட்டு என்பதற்கு யா தொரு சான்றும் இல்லை. சான்றோர் பாட்டுடன் சோதது எண்ணத்தகும் நடைப்பெருமை முதலியன இதன்கட் சிறிதும் இல்லை. சில தொன்னூற் கருத் துக்களையும், தொடர்களையும் ஓரோவழி அமைத் திருப்பதே இதிற் காணப்படும் அழகாகும். இப் பாட்டிற் கூறப்படும் எழுவர் வரலாறும், முதற்குறளி லுள்ள 'ஆதி பகவன்' என்னுந் தொடரைத் திரு வள்ளுவரது தாய் தந்தையரின் பெயரெனத் திரிபு படக் கருதிக் கொண்ட ஒருவனது சூழ்ச்சித்திற னல் விளைந்த புனைந்துரையே யன்றி வேறல்ல. தன் கொள்கையினை உலகில் வெளிப்படுத்தற்கு ஏற்ற பெற்றியாக இக்கதையினை ஆக்கிக்கொண்டதே அவ னது சூழ்ச்சித் திறனுகும். கபிலரது ஊர் பாண்டி நாட்டுத் திருவாதவூர் என்று பழைய திருவிளையா டல் கூறுவதற்கு மாறுகச், சோணுட்டுத் திருவாரூர் என்றும், அதியனது ஊர் தகடூர் எனப் பழைய நூல் கள் கூறுவதற்கு மாறுக, வஞ்சி என்றும் இவ்வகவல் கூறுவது பிழையாகும். அதியர்குடி என்னும் பழங் குடியிற் றேன்றி, வள்ளலாக விளங்கிய அதியமான் நெடுமான் அஞ்சியென்னும் சிற்றரசனையும், அவனைப்

பல பாட்டுக்களாற் புகழ்ந்து பாடிப், பரிசில் பல பெற்றுப், பலவூர்களிலும் திரிந்து, வாழ்நாள் நடத்திய ஔவை யென்னும் தொன் மூதாட்டியையும் உடன் பிறந்தார் எனக் கூறுதற்கு அறிவுடையோர் எங்ஙனம் ஒருப்படுவர்? ஔவையார், கபிலர், அதியமான் என்னும் மூவரும் ஒருகாலத்தினர் என்ற வளவு உண்மையாகக் கொள்ளலாம். வள்ளுவர், அக் காலத்தோ, அதனின் முற்காலத்தோ விளங்கினாராவர். இவ்வாற்றால் † ஆதி பகவன் என்னும் பெயர்களும், ஔவையும், அதியமானும் ஒருங்கு கேட்கப்பட்டமை போன்ற சில செய்திகளும், பற்றுக் கோடாகக் கொண்டு, இக்கதை புனைந்துரைக்கப்பட்டதென்றறிக. இஃது இப்பெற்றித்தாகலின், இதனை விடுத்துப், புறப்பாட்டுக்களின் சான்று கொண்டு, கபிலர் அந்தணராவரென அறுதியிடுதலே ஏற்புடைத்தாகும்.

## சமயம்.

திருவிளையாடல் முதலிய புராணங்களிலிருந்து இவர் சைவ சமயத்தவர் என்று கொள்ளப் படுகின்றது. இவரே யன்றிச், சங்கப் புலவர் பலரும் சைவரென்றே புராணங்களும், வேறு சைவ நூல்களும் கூறுகிற்கும். 'பொய்யடிமை யில்லாத புலவர்' என்று ஆளுடைய நம்பிகள் திருத்தொண்டத் தொகையுட் கூறியது சங்கப் புலவர்களையே யெனப் பின்வந்த பெரியார் பலருங் கொண்டனர். நம்பியாண்டார்

† ஆதி பகவன் என்னும் பெயரை விடுத்து, அறிவில்லாத சண்டாளப் பெண் என்றும், யாளிதத்தன் என்னும் முனிவன் என்றும் ஞானமிர்தம் என்ற நூலின் உரை கூறுகின்றது.

நம்பி, தாமியற்றிய திருத்தொண்டர் திருவந்தாதியில், பொய்யடிமை யில்லாத புலவரைக் குறித்து,

'தரணியிற் பொய்ம்மை யிலாத்தமிழ்ச் சங்கமதிற் கபிலர்
பரணர்நக் கீரர் முதனாற்பத் தொன்பது பல்புலவோர்
அருணமக் கீயுந் திருவால வாயரன் சேவடிக்கே
பொருளமைத் தின்பக் கவிபல பாடும் புலவர்களே.'

என்று கூறியிருத்தலுங் காண்க. பதினொராந் திருமுறையிலுள்ள மூத்த நாயனார் திருவிரட்டை மணிமாலை, சிவபெருமான் திருவிரட்டை மணிமாலை, சிவபெருமான் திருவந்தாதி என்னும் பிரபந்தங்கள் மூன்றையும் அருளிச்செய்த கபிலதேவ நாயனார் இவரே யென்னின், இவரது சமயம் சைவமென்பதிற் சிறிதும் ஐயுறவின்று. சங்கநூல்கொண்டு பார்க்குமிடத்தும், இவரியற்றிய இன்னாநாற்பது என்னும் நூலின் கடவுள் வாழ்த்தில், 'முக்கட் பகவ னடிதொழா தார்க்கின்னா' என்று முதற்கட் சிவபிரானைக் கூறி யிருப்பதும், புற நானூற்றில், இவர், 'புல்லிலை யெருக்க மாயினு முடையவை, கடவுள் பேணே மென்னா' என்று சிவபிரானைக் குறிப்பான் உணர்த்தும்படி, அவர் சூடும் எருக்கம் பூவை யெடுத்துக் கூறி யிருப்பதும், இவரது சமயம் சைவமென்று கருதச் செய்கின்றன. இவர் இன்னா நாற்பதின் கடவுள் வாழ்த்தில், சிவபிரானை யடுத்துப் பலராமன், கண்ணன், முருகவேள் என்னும் இவர்களைக் கூறியிருப்பது, இவரது பொது நோக்கினையும், அதற்கு இடங்கொடுத்துள்ள சைவ சமயத்தின் விரிந்த கொள்கையையும் புலப்படுத்துவதாகும். சங்கத்துச் சான்றோர் பலரும் இன்னணம் பொதுநோக்குடையரென்பதும், அவரெல்லாம் இங்

நான்கு கடவுளரையும் இவ்வியல்பானே போற்றி வந்துள்ளார்களென்பதும், அவர்களியற்றிய பாட்டுக் களானே அறியலாகும். நக்கீரர், புறத்தின்கண் இந் நால்வரையும் இம்முறையே கூறி, இவர்களை, 'ஞாலங் காக்கும் கால முன்பிற், றோலா நல்லிசை நால்வர்' என்று கூறியிருப்பதுங் காண்க. கபிலர் நற்றிணை முதலியவற்றிலும் இக்கடவுளரை யெடுத்துக் கூறி யுள்ளார். குறிஞ்சிக்கலியில் இலக்குமிப் பிராட்டி யாரையும் எடுத்தியம்பி யுள்ளார்.

## பெருமை.

இவ் வாசிரியரது கல்விப் பெருமையை, இவரியற் றிய பாட்டுக்களானே நன்கு அறியலாகும். சங்கத் தார் தொகுத்த எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, பதினெண்கீழ்க்கணக்கு என்னும் மூன்று வகுப் பிலும் இவருடைய பாட்டுக்கள் உள்ளன. எட்டுத் தொகையுள், பரிபாடலொழிந்த எழனுள்ளும், இவ ரியற்றியன காணப்படுகின்றன. பரிபாடல் எழுப தில், இருபத்திரண்டு செய்யுட்களே இப்பொழுது வெளி வந்திருத்தலின், அதனுள்ளும் இவர் பாட்டு இல்லையெனத் துணிந்து கூறலமையாது. பன்னூறு புலவர்கள் பாடிய செய்யுட்களில் இவர் பாடியன ஏறக்குறையப் பதினொன்றில் ஒரு பங்காக இருத் தலும், அவை ஒவ்வொரு தொகையிலும் சேர்ந் திருத்தலும், இவரது பாட்டியற்றும் பெருமையை யும், நன் மதிப்பையும் நன்கு விளக்குகின்றன. இளங் கோவடிகள், கம்பர் முதலாயினோர் போன்று, இவ் வாசிரியர் தொடர்நிலைச் செய்யுள் இயற்றி யிருப்ப

நேரல், இவரது பெருமை யாவருள்ளத்தும் இப் பொழுதையினும் நன்றாகப் பதிக்கப் பட்டிருக்கும். தமிழுலகு இதனினும் மிகுதியான பயனையும் எய்தி யிருக்கும். எனினும், இவரியற்றிய குறிஞ்சிப் பாட்டும், குறிஞ்சிக் கலியும், இயற்கை வளங்களை யெடுத் துரைப்பதில் நிகரற்றனவாய்த், தொடர்நிலைச் செய் யுளின் ஓரளவான பயனை அளிக்கவல்லன என்பது தேற்றம். தமிழ்ச் சுவை யறியாதிருந்த ஆரிய வர சன் பிரகத்தனுக்கு, இவர் குறிஞ்சிப் பாட்டியற்றித் தமிழ் அறிவுறுத்தினர் என்பதிலிருந்து, தமிழின் பால் இவருக்கிருந்த பெரும்பற்றும், ஏனோரும் தமிழினை யறிந்து இன்புற வேண்டுமென்னும் இவ ரது பெரு விருப்பமும், தமிழின் சுவை யறியாதோ ரும் அறிந்து புலவராம்படி தெருட்டவல்ல இவரது பேராற்றலும் நன்கு விளங்குகின்றன. நச்சினார்க் கினியர், சேனாவரையர், பரிமேலழகர் முதலிய உரை யாசிரியன்மா ரெல்லாம் ஆறும் வேற்றுமைச் செய்யுட் கிழமைக்குக் 'கபிலரது பாட்டு' என்று உதாரணம் காட்டியுள்ளார்க ளென்றால், அங்ஙனம் சான்றோர் பலர்க்கும் எடுத்துக் காட்டாக முன்னிற் றற் குரிய இவர் பாட்டுக்களின் அருமை, பெருமை களை எங்ஙனம் அளவிட்டுரைக்க வல்லேம்? இவ் வாறு புலமையிற் சிறந்து விளங்கிய இவ் வாசிரியர், அருளும், அன்பும் முதலிய சிறந்த குணமெல்லாம் ஒருங்கமையப் பெற்றவராயும் இருந்தனர். அக் காலத்துப் புலவ ரெல்லாரும் வாய்மையையே அணி யெனப் பூண்டு விளங்கின ரென்றால், இவர் அவ் வாய்மைக்கே அணியெனத் திகழ்ந்தா ரென்னலாம்.

இவரது பாட்டியற்றும் வன்மையையும், வாய்மையையும், மனத்தூய்மையையும், புகழ் மேம்பாட்டையும் சங்கத்துச் சான்றோர்களே ஒருங் கொப்பப் புகழ்ந்து கூறியுள்ளார்கள்.

'உலகுடன் திரிதரும் பலர்புகழ் நல்லிசை
வாய்மொழிக் கபிலன்'—(அகம்-78)

என்று புலவரேறாகிய நக்கீரனார் புகழ்ந்து கூறினார்.

'அரசவை பணிய அறம்புரிந்து வயங்கிய
மறம்புரி கொள்கை வயங்குசெந் நாவின்
உவலை கூராக் கவலையி னெஞ்சின்
நனவிற் பாடிய நல்லிசைக்
கபிலன்'—(பதிற்றுப்பத்து-85)

என்று பெருங்குன்றூர்கிழார் பாடினர்.

'தாழாது
செறுத்த செய்யுட் செய்செந் நாவின்
வெறுத்த கேள்வி விளங்குபுகழ்க் கபிலன்'–(புறம்-53)

என்று பொருந்திலிளங்கீரனார் பாடினர்.

'நிலமிசைப் பிறந்த மக்கட் கெல்லாம்
புலனழுக் கற்ற வந்த ணாளன்
இரந்துசெல் மாக்கட் கினியிட னின்றிப்
பரந்திசை நிற்கப் பாடினன்'–(புறம்-127)

என்றும்,

'பொய்யா நாவிற் கபிலன்'–(புறம் 174)

என்றும் மாறோக்கத்து நப்பசலையார் பாடினர்.

இங்ஙனம் புலவரெல்லாம் போற்றும் புலமையும், சான்றாண்மையும் உடையாரா்ய இவர்பால், அக்காலத்து வேந்தர்களும், வள்ளல்களும் எவ்வளவு மதிப்பு

வைத்திருத்தல் வேண்டும்? பறம்பிற் கோமானாகிய வேள்பாரி, இவரை ஆருயிர்த் துணையாகக் கொண்டொழுகினமையே, இவர்பால் அவ்வள்ளல் வைத்த பெருமதிப்புக்குச் சான்றாகும். சேரமான் செல்வக் கடுங்கோவாழியாதன் என்னும் வேந்தர் பெருமான், இவர் பாடிய பத்துப் பாடல்களுக்குப் பரிசிலாக நூறாயிரம் காணம் கொடுத்ததன்றி, ஓர் மலை மீதேறிக் கண்டநாடெல்லாம் கொடுத்தான் என்றால், அவ்வரசன் இவர்பால் வைத்த மதிப்பினை அளவிடலாகுமோ? மாந்தரஞ்சேரலிரும்பொறை என்ற சேரர் பெருமான், இப்புலவர் பெருந்தகை தமது காலத்தில் இல்லாது போனமைக்கு மனங் கவன்று, 'தாழாது, செறுத்த செய்யுட் செய்செந் நாவின், வெறுத்த கேள்வி விளங்குபுகழ்க் கபிலன், இன்றுளனாயின் நன்றுமன்' என்று இரங்கிக் கூறினன். இது கேட்ட பொருந்திலிளங்கீரனார் என்ற புலவர், அவ்வரசனைப் பாடுங்கால் இதனைக்கொண்டு மொழிந்தனர்.

இன்னணம் புலவரும், மன்னரும் போற்றும் புகழமைந்த இவர் தொல்லாணை நல்லாசிரியரும் ஆவர். இது, தமிழினை மதியாது கூறிய குயக்கொண்டான் பெரும்பிறிதுறுமாறு, நக்கீரர் தாம் பாடிய அங்கதப் பாட்டினுள்,

'முரணில் பொதியமுதற்புத்தேள் வாழி
பரண கபிலரும் வாழி'

என்று, அருந்தவக் கொள்கை அகத்தியனாரொடு ஒப்பவைத்து வாழ்த்தி, இவரது ஆணை பிழையா [redacted] காட்டினமையாற் றெளியப்படும்.

## காலம்.

கடைச் சங்க காலத்தையும், அக்காலத்து விளங்கிய அரசர், வள்ளியோர், புலவர் என்பாரிற் சிற்சிலரது காலத்தையும் இதற்கு முன் ஆராய்ந்தார் பலர். அன்னாருடைய கொள்கைகள், தம்மில் ஒன்று பட்டனவும், வேறு பட்டனவுமாய்ப் பலதிறப்பட்டுள்ளன. விரிவு கருதி அவற்றை யெல்லாம் எடுத்துக் காட்டாதொதுக்கி, ஓர்வழியால் கபிலரது காலத்தை இங்கு ஆராய்ந்து காண்பாம்.

சைவசமய குரவர்களாகிய திருஞானசம்பந்தரும், திருநாவுக்கரசரும் ஒரு காலத்தினரென்பதும், சிறுத்தொண்ட நாயனாரும் அப்பொழுதிருந்தவரே யென்பதும், தேவாரம், பெரியபுராணம் முதலியவற்றால் நன் கறியப்பட்டவை. சிறுத்தொண்டர், அக்காலத்து நரசிம்மவர்ம பல்லவ வேந்தனுக்குப் படைத்தலைவராய்ச் சென்று, வாதாபி என்னு மிடத்தில், இரண்டாம் புலிகேசி என்னும் சளுக்கிய மன்னனை முரியடித்து வந்தனர். நரசிம்மனும் வாதாபிகொண்ட நரசிம்மன் எனப் பெயரெய்தினான். இச்செய்தி,

"மன்னவர்க்குத் தண்டுபோய் வடபுலத்து வாதாவித்
தொன்னகரந் துகளாகத் துளைநெடுங்கை வரையுகைத்துப்
பன்மணியு நிதிக்குவையும் பகட்டினமும் பரித்தொகையு
மின்னனவெண் ணிலகவர்ந்தே யிகலரசன் முன்கொணர்ந்
[தார்."

என்று பெரியபுராணத்துக் கூறப்பட்டது. மகேந்திரவர்மன் புதல்வனாகிய வாதாபி கொண்ட நரசிம்மவர்மனின் காலம், கி. பி. ஏழாம் நூற்றாண்டின் முற்பகுதி எனத்தெரிதலால், திருஞான சம்பந்தரும் அக்

காலத்தவ ரென்பது கூறுதே யன்மையும். திருநாவுக்கரசராகிய அப்பர், அப்பொழுது ஆண்டின் முதிர்ந்தோராகலின், ஆறும் நூற்றாண்டி னிறுதியும் அவர்க்குரியதே யாகும். இனி, ஒரு சாரார், பாண்டியன் நெல்வேலிவென்ற நெடுமாறனும், நந்திபோதவர்மன் அல்லது நந்திவர்மனும் ஒருகாலத்தவ ரென்றும், நந்திபோதவர்மன் காலம் கி. பி. 710 முதல் 760 வரை என்று சாதனங்களாற் கருதப்படுதலின், பாண்டியன் நெடுமாறன் காலமும், அவ்வேந்தனைச் சமணிலிருந்து சைவ சமயத்திற் றிருப்பிய திருஞான சம்பந்தர் காலமும் அதுவே யாகவேண்டு மென்றும் கூறுவர். இது, சிறுத்தொண்டர் நரசிம்மவர்மன் காலத்தவ ரென்னும் உறுதியான சான்றுடன் மாறுபடுதலின், நந்திவர்மனோடும், அவன் சேனைபதியாகிய உதயேந்திரனோடும் போர் புரிந்த அரிகேசரி மாறவர்மனும் வேறு, நெடுமாறனும் வேறு என்று கொள்ளவேண்டும். நெடுமாறன், மாறவர்மனுக்கு அறுபது எழுபது ஆண்டின் முன்னிளங்கினோன் என்க.

இனிக், கடைச் சங்கமானது, இந் நாயன்மார் காலத்திற்குப் பல நூற்றாண்டுகளின் முன்னர் நிகழ்ந்ததாகும். காலத்தை வரை யறுத்தற் குரிய கருவிகளில், அக்காலத்துச் செய்யுணடைப் போக்கும் ஒன்று. சங்கச் செய்யுள்களுக்கும் தேவாரத்துக்கும் உள்ள நடை வேற்றுமையோ பெரிதாகின்றது. இஃதொரு புறமிருக்க, இவ் விருவேறு காலங்களின் சேய்மையைக் குறிக்கும் வேறு சான்றுகள் இங்கே காட்டப்படும். திருநாவுக்கரசு நாயனார், 'நன்பாட்டுப் புலவனாய்ச் சங்க மேறி நற்கனகக் கிழிதருமிக்

கருளினேன்காண்' என்று இறையனார்க்கும் நக்கீரனார்க்கும் வாது நிகழ்ந்தமை குறித்திருத்தலொன்றே, தமிழ்ச் சங்கமானது நாயன்மார் காலத்திற்குச் சிறிதேனும் முற்பட்டதாமென்று நாட்டப் போதியதாகும். சங்கப் புலவர்களாற் பாடப் பெற்ற முடியுடை வேந்தரும், சிற்றரசரும் மிகப் பலராகவும், அவர்களுள் ஒருவரேனும் சைவத்தின் இருவிழிகளான நாயன்மார் காலத்திற்கு அண்மையிலேனும் இருந்தன ரெனத் தெரியவில்லை. கோச்செங்கட் சோழர், திருக் கோயிற் றிருப்பணி புரிந்து, சைவத்தைப் போற்றிய திருத்தொண்ட ராகலின், நாயன்மார் பதிகத்து எடுத்தோதும் பேறு பெற்றுள்ளார்.†

இவர் சிவபிரானுக்குத் திருக்கோயில் பல சமைத்தமையை, 'எண்டோளீசற் கெழின்மாட மெழுபது செய் துலகாண்ட செங்கணான்' என்று திருமங்கையாழ்வாரும் கூறியுள்ளார். சம்பந்தர் காலத்தின் முன்பு தொட்டுச் சுந்தரர் காலத்தின் பின்னருங் கூடச் சோணாடு பல்லவரது ஆட்சியிற்றானே யிருந்தது. அக்காலமெல்லாம் ஆற்ற லிழந்திருந்த சோழ மன்னர் சிலர் சேர, பாண்டி நாடுகளை யடைந்து, அவ்வேந்தர்களோடு ஒத்து வாழ்ந்து வந்தனர் என அறி

---

† 'கோடடைந்த மால்களிற்றுக் கோச்செங்க ணாற்கருள்செய்
சேடடைந்த செல்வர் வாழுஞ் சேய்ஞலூர் மேயவனே'
(திருஞானசம்பந்தர், திருச்சேய்ஞலூர்ப்பண்).

'புத்தியினாற் சிலந்தியுந்தன் வாயினூலாற் பொதுப்பந்த ரதுவிழைத்துச் சருகான் மேய்ந்த, சித்தியினா லரசாண்டு சிறப்புச்செய்யச் சிவகணத்துப் புகப்பெய்தார்.'
(திருநாவுக்கரசர், திப்பாசூர்த்திருத்தாண்டகம்.)

யப்படுகின்றது. சம்பந்தர் காலத்தின் முன்னரே பல்லவ ஆட்சி சோணாட்டில் நிலைத்து விட்ட தென்பது, காவிரிப்பூம் பட்டினத்திற் பல்லவனாற் கட்டப் பெற்றமையின், பல்லவனீச்சரம் எனப் பெயர் பெற்ற திருக்கோயில் சம்பந்தரது பதிகம் பெற்றிருத்தலால் அறியலாகும். சுந்தரமூர்த்தி நாயனார், 'மண்ணுலகங் காவல் பூண்ட, வுரிமையாற் பல்லவர்க்குத் திறைகொடா மன்னவரை மறுக்கஞ் செய்யும், பெருமையாற் புலியூர்ச்சிற் றம்பலத்தெம் பெருமானைப் பெற்றா மன்றே' என்று பாடுதலாலும், சேரமான் பெருமா ணாயனார் புராணத்துச் சேக்கிழார் கூறும் சில குறிப்புக்களாலும், பிறவற்றாலும் சுந்தரர் காலத்தில் சோணாடு பல்லவ ஆட்சியி லிருந்த தென்பதும், சோழன், சேர, பாண்டி நாடுகளைச் சார்ந்திருந்தன னென்பதும் அறியலாகும். பல்லவரிற் சிற்சிலர் சமண, பௌத்த மதங்களைத் தழுவி யிருந்தனர். சிற்சிலர் சைவ, வைணவங்களைச் சார்ந்து செங்கோலோச்சி வந்தனர். திருத்தொண்டத் தொகையிற் கூறப்பட்ட சிவனடியார்களில் பல்லவ அரசர்களும் உள்ளனர். இங்ஙனம் சோணாட்டை யடிப்படுத்துத், திறமையுடன் ஆட்சி புரிந்து, நாயன் மாராலும், ஆழ்வார்களாலும் புகழப் பெற்ற பல்லவர் காலத்திற்கும் கடைச் சங்கத்திற்கும் இயைபு இருந்திருப்பின், அவர்கள் சங்கப் புலவர்களால் எத்துணைப் பாட்டுக்கள் பெற்றிருத்தல் வேண்டும்? சங்கப் புலவருக்கோ பல்லவரென்ற பெயரும் தெரிய நேர்ந்திலது.

இனித், திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் காலத்தில் தமிழ்நாடு முழுதும் சமண், பௌத்த

மதங்கள் பரவி யிருந்த தன்றிச், சமண, பௌத்தர் களுக்கும், சைவ, வைணவர்களுக்கும் இடையில் மதப் போராட்டங்கள் நிகழ்ந்த செய்தி உலகை மறிந்தது. கடைச்சங்க நாளிலோ, புகார், மதுரை போன்ற தலைநகர்களில் பௌத்த, சமணக்கோட்டங் களும், பள்ளிகளும் நிறுவப்பட்டு, அம்மதங்கள் பரவுதற்கான செயல்கள் செய்யப்பட்டு வந்தன என்று அறியப் படினும், தமிழரசர் யாரும் அக் கொள்கைகளை மேற்கொண்டனரில்லை. தமிழ்ப் புலவர்களும் அன்னர். சேரன் செங்குட்டுவனுக்குத் தம்பியாராகிய இளங்கோவடிகளும், சாத்தனாரும் முறையே சமண, பௌத்தக் கொள்கைகளை விரித் துரைத்தார்க ளெனினும், அவர்கள் சைவ, வைணவக் கொள்கைகளையும் பாராட்டி யிருத்தலின், எம் மதத்தினும் அவர்கட்கு வெறுப்பில்லை யென்பது பெறப்படும். எத்துணையோ பல அரசர்களையும், வள்ளல்களையும் பற்றிப் பன்னூறு புலவர்கள் பாடிய பாட்டுக்களைத் தொகுத்துள்ள எட்டுத்தொகை, பத்துப் பாட்டுக்களில் ஓரிடத்தேனும் சமண, பௌத்தக் கொள்கை காணப்படவில்லை. இன்ன பல காரணங்களால் கடைச்சங்க மானது திருஞானசம்பந்தர் காலத்திற்குச் சில பல நூற்றாண்டுகளின் முன்னர் நிகழ்ந்திருக்க வேண்டு மென்பது வெள்ளிடை மலை போல் விளங்கா நிற்பவும், இவற்றை யெல்லாம் ஓராது, கடைச் சங்கம் எட்டாம் நூற்றாண்டில் நிகழ்ந்த தென்றும், ஒன்பதாம் நூற்றாண்டில் நிகழ்ந்த தென்றும், தம் மனம் போனபடி கூறுவார் சிலரும் உளர் என்க! இனித், திருநாவுக்கரசர், தமது தேவாரத்தில்,

'நரியைக் குதிரை செய்வானும்' என்றும், 'மணியார் வையைத்-திருக்கோட்டி னின்றதோர் திறமுந் தோன்றும்' என்றும், 'குடமுழ நந்தீசனை வாசகனுக் கொண்டான்' என்றும் பாடியிருத்தலால், அவர்க்கு முற்காலத்தவ ரென்றும், மூன்று அல்லது நான்காம் நூற்றாண்டில் விளங்கியவ ரென்றும் கருதப்படுகிற திருவாதவூரடிகள், கோவையாரில், 'சிறைவான் புனற்றில்லைச் சிற்றம் பலத்துமென் சிந்தை யுள்ளும், உறைவா னுயர்மதிற் கூடலி னாய்ந்த வொண்டீந் தமிழின், றுறை' என்று கூறியிருப்பது, அடிகள் காலத்தின் முன்னரே கூடலிற் றமிழ்ச் சங்கம் நடந்த தென்பதை விளக்க வல்லது. ஒருக்கால் அடிகள் பிற்காலத்தவரென நாட்டப் படினும், அது தமிழ்ச் சங்கத்தின் பழமையை விலக்குதற் குரிய தாகாது.

இனி, இவ்வாற்றால் மூன்றாம் நூற்றாண்டின் முற்பட்டது என நிறுவப்படும் கடைச் சங்கத்தில் விளங்கிய கபிலரது காலம் யாதென ஆராய்ந்திடுவாம். இதனை ஆராய்ந்து துணிதற்குச் சிறந்த கருவியாக வுள்ளன சிலப்பதிகாரமும், இலங்கைச் சரித்திரங்களும் ஆகும். சேரன் செங்குட்டுவன் கண்ணகிக்குக் கோயிலெடுத்து வழிபட்ட நாளில், அங்கு வந்திருந்த மன்னர்களில், 'கடல்சூ ழிலங்கைக் கயவாகு வேந்தனும்' ஒருவன் என்றும், அவன் கண்ணகிபால் வரம் பெற்றுச் சென்று, இலங்கையிலும் நங்கைக்கு விழாச் செய்தான் என்றும், சிலப்பதிகார வரந்தரு காதையாலும், உரை பெறு கட்டுரையாலும் அறியப் படுகின்றது. இலங்கைச் சரித்திரங்களில், கயவாகு என்னும் பெயருடையார் இருவ ருளரென்றும், அவருள்

முதற் கயவாகுவே சிலப்பதிகாரத்திற் கூறப்பட்டவ னென்றும் சரித வல்லுநர் யாவரும் ஒரு படித்தாகத் துணிகின்றனர். இக் கயவாகுவின் காலம், மகா வம்சம் கூறுகிறபடி, கி. பி. 113–135. ஆகும் என்றே கொண்டனர், 'ஆயிரத் தெண்ணூறு ஆண்டுகளின் முந்திய தமிழர்' என்னும் நூலியற்றிய வி. கனக சபைப் பிள்ளை முதலியோர். திரு. எஸ். கிருஷ்ண சாமி ஐயங்கார், எம்.ஏ., 'மகா வம்சம் கி. பி. 113—135 என்று கூறும்' எனக் கூறித், தம்முடைய கொள்கையாக, 'முதற் கயவாகுவின் ஆட்சிக் காலம் கி. பி. 179—201 ஆகும் என்று கூறியுள்ளனர்.† திரு. கே. ஜி. சங்கரையர், கயவாகுவின் காலம் கி. பி. 154-176 என்று கூறுவதோடு, கோவல னிறந்தது 157-என்றும், கண்ணகிக்குக் கோயி லெடுப்பித்து விழாவியற்றியது 160-என்றும், சோதிடக் குறிப்பு முதலிய பல ஆதாரவு கொண்டு விளக்குகின்றனர்.* இப்பொழுது இவ்விறுதிக் கொள்கையினை வைத்துக் கொண்டு, மேல் ஆராய்ச்சி நிகழ்த்துதும். செங்குட்டுவன் அரசுவீற்றிருந்த காலம் ஐம்பத்தைந்து ஆண்டு என்று பதிற்றுப்பத்து, ஐந்தாம் பத்தின் பதிகத் திறுதிக் கட்டுரையால் விளங்குகின்றது. அவன் கண்ணகிக்குக் கோயி லெடுப்பித்த காலத்தில், அவனது ஆட்சியில் ஐம்பதியாண்டு ஆயிற் றென்பதும், அவன் பிறந்து ஏறக்குறைய எழுபதியாண்டு ஆக வேண்டு மென்பதும், மாடல மறையோன் செங்குட்டுவனை நோக்கி,

---

† செந்தமிழ், தொகுதி-4, பக்கம்-525.

* செந்தமிழ், தொகுதி-15. பக்கம்-585, 645.

† 'வையங் காவல் பூண்டநின் னல்யாண்
டையைந் திரட்டி சென்றதற் பின்னும்
அறக்கள வேள்வி செய்யா தியாங்கணும்
மறக்கள வேள்வி செய்வோ யாயினை'

என்றும்,

'நரைமூதிர் யாக்கை நீயுங் கண்டனை'

என்றும் கூறியிருத்தலாற் றெளியப்படும். இவ்வாற்றால், செங்குட்டுவன் அரசுகட்டி லேறியது கி. பி. 110-ஆம் ஆண்டென்று கொள்ளப்படும். ‡ படவே, அவன் தந்தையாகிய இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் ஐம்பத்தெட் டியாண்டு அரசு வீற்றிருந்தானென்று பதிற்றுப் பத்தால் அறியப்படுதலின், அவன் அரியணை யேறியது கி. பி. 52-ல் என்று கொள்ளலாம். செங்குட்டுவனைப் பதிற்றுப் பத்தில் ஐந்தாம் பத்தாற் பாடிய பரணர் என்னும் புலவர் பெருமான், அவன் றந்தை யாகிய நெடுஞ்சேரலாதனும், சோழன் வேற்பஃறடக்கைப்பெருவிறற்கிள்ளியும் போர்ப்புறத்துப் பொருது வீழ்ந்த காலையில் இரங்கிப் பாடிய பாட்டு ஒன்று புறநானூற்றில் காணப்படுகிறது. இவரே கரிகாலன் றந்தையாகிய உருவப்பஃறேரிளஞ்சேட்சென்னியைப் பாடியிருத்தலோடு, கரிகாலன் மகளாகிய ஆதிமந்தியின் செய்தியைப் பலவிடத்துக் கூறுகின்றார். இவ்வாற்றால், சோழன் கரிகாலனும், செங்குட்டுவனும் ஒரு காலத்

† சிலப்பதிகாரம், நடுகற்காதை.

‡ சேரன் செங்குட்டுவன் என்ற நூலில் செங்குட்டுவன் ஐந்தாம் நூற்றாண்டினன் என்பதற்குக் காட்டிய காரணங்களெல்லாம் பின்பு முறையானே கண்டிக்கப்பட்டொழிந்தன. செந்தமிழ், தொகுதி-15-காண்க.

தவரென்று கருதலாம். எனினும், சிலப்பதிகாரத்தில் கரிகாலன் செய்திகள் இறந்த காலத்தவாகக் கூறப்பட் டிருத்தலும், மதுரைக் காண்டத்து இறுதிக் கட்டுரையில் நெடுஞ்செழியனையும், வஞ்சிக் காண்டத்து இறுதிக் கட்டுரையில் செங்குட்டுவனையும் கிளந்தெடுத்தோதிய இளங்கோவடிகள், புகார் காண்டத்து இறுதிக் கட்டுரையில் அரசர் பெயர் யாதும் கூறாது விட்டிருத்தலும், கரிகாலன் மகளாய ஆதிமந்தி, தன் கணவனைக் காவிரி அடித்துக் கொண்டு போகத், தான் புனலின் பின் புலம்பிச் சென்று, தன் கணவனை மீட்டும் எய்திய செய்தியைக், கண்ணகி, வஞ்சின மாலையுள், எடுத்துரைத்ததாகக் கூறுதலும், மணிமேகலையுள்ளும், அக்காலத்துப் புகாரி லாண்டவன் நெடுமுடிக்கிள்ளி யென்று கூறப் படுதலோடு, கரிகாலன் அவனுக்கு முற்பட்டவன் என்பது தோன்றக் கூறியிருத்தலும் ஆகிய வற்றால், கரிகாலன் அக்காலத்து இருந்திலன் என்பது விளங்குதலின், செங்குட்டுவனது இளமையினும், இமயவரம்பனது ஆட்சிக்காலத்திலும் அவன் விளங்கினான் எனல் பொருந்தும். இவ்வாற்றால், கரிகாலனது ஆட்சிக்காலம் கி. பி. 55 அல்லது 60-க்கு மேல் 110-க்கு உட்பட்ட காலம் எனக் கொள்ளல் வேண்டும். கயவாகுவின் காலமும், செங்குட்டுவன் காலமும் இன்னும் இருபது முப்பது ஆண்டுகளின் முன்பென்று காட்டப்படின், கரிகாலன் ஆட்சி கி. பி. 25-க்கும் 40-க்கும் இடைப்பட்ட காலத்தில் தொடங்கிற்றென்று கொள்ளலாம். இவ்வாறிருக்க, ஞானசாகரத்தில் எழுந்த 'திருக்குறளாராய்ச்சி' யென்னும் அரிய பொருளுரை, கரி

காலன் கி. மு. முதல் நூற்றாண்டினிடையில் அரசி யற்றப் புகுந்தான் என்று கூறுகிறது.

அஃது அவ்வாறு கூறுதற்குக் காரணம், பதிற்றுப் பத்துப் பெற்ற சேரவரசர்களில், இமயவரம்பனுக்கு முன் பெருஞ்சேரலிரும்பொறையும், அவனுக்குமுன் செல்வக்கடுங்கோவாழியாதனும் முறையே அரசு புரிந்தார்களென்றும், கரிகாலனொடு பொருத பெருஞ் சேரலாதன் செல்வக்கடுங்கோவுக்கு முன் ஆண்டவ னென்றும் கொண்டமையே. மற்றும், அது, 'கரிகாற் பெருவளத்தானுக்கும் சேரன் செங்குட்டுவனுக்கும் இடையே ஒரு நூற்றாண்டு கழிந்தமை இவற்றால் நன்கு தெளியப்படும்' என்கின்றது. செங்குட்டு வனைப் பாடிய பரணரே, கரிகாலன் றந்தையையும் பாடியிருக்கும் பொழுது, ஒரு நூற்றாண்டு எங்ஙனம் இடைப் பட்டிருத்தல் கூடும்? இமயவரம்பனும், செல்வக்கடுங்கோவும், வேளாவிக்கோமான்பதுமன் என்பவனுடைய மகளிரை மணஞ்செய்துள்ளார்க ளென்று பதிற்றுப்பத்தாற் றெரிதலின், அவ்விரு வரும் ஏறக்குறைய ஒரு காலத்தவ ரென்று கொண்டு விடின், அவ்வாராய்ச்சியும் கரிகாலன் கி. பி. முதல் நூற்றாண்டினிடையில் விளங்கியவ னென்றே காட்டு வதாகும். 'முதலாவது கரிகாலன்' என்னும் அரிய உரை நூலும், இவ்வாராய்ச்சியையே தனக்குரித்தாகக் கொண்டு, 'கரிகாலன் கி. மு. முதல் நூற்றாண்டின் இடைப்பட்ட காலத்து அரசுகட்டில் ஏறினவன்' என்று முடித்திருத்தலின், இதுவும் பிழையெனல் கூறவேண்டா.

இனி, உருவப்பஃறேரிளஞ்சேட்சென்னியைப் பாடிய பரணர், அவன் மகனுக்கு மகளாகிய ஆதிமந்தியின் கற்பு மேம்பாட்டைப் புகழ்ந்துரைத்தலானும், வேறுசில குறிப்புக்களானும், நெடுநாள் உயிர்வாழ்ந்திருந்தவரென்பது பெறப்படும். ஆதலின், பரணரது காலம் ஏறக்குறைய கி. பி. 50—140 ஆகுமெனக் கருதல் அமையும். பரணராற் பாடப்பெற்ற அரசரும், குறுநிலமன்னர் முதலாயினோரும் மிகப் பலராவர். அவர்களிற் சிலரை இங்கே குறிப்பிடுதல் இன்றியமையாதது. உருவப்பஃறேரிளஞ்சேட்சென்னி, வேற்பஃறடக்கைப்பெருநற்கிள்ளி, நெடுஞ்சேரலாதன், செங்குட்டுவன், வையாவிக்கோப்பெரும்பேகன், அதியமான் நெடுமான் அஞ்சி, ஆய், ஓரி, திதியன், நள்ளி, நன்னன் என்போர்.

இனி, அதியமான் அஞ்சியைப் பல பாட்டுக்களாற் பெரிதும் பாராட்டிய ஔவையார், அஞ்சியைப் பார்த்து, † 'அன்றும் பாடுநர்க் கரியை இன்றும் பரணன் பாடினன்' என்று கூறியிருத்தலின், பரணரும் ஔவையாரும் ஒரே காலத்தவ ரென்பது பெறப்படும். அஞ்சியைப் பாடிய ஔவையார், அவன் மகன் பொகுட்டெழினியையும், சிறிது பிற்காலத்தவராகத் தெரிகிற உக்கிரப்பெருவழுதி, மாவெண்கோ, இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி என்போரையும் பாடி யிருத்தலால், அவர் நெடிது நாள் உயிர் வாழ்ந்தவ ரென்னுங் கொள்கை வலியுறுகின்றது. அவர், அதியமான் கொடுத்த நெல்லிக்கனி யுண்டு நெடிது நாள் வாழ்ந்தவ ரென்பது, ‡ 'நீயே தொன்

† புறம்—99. ‡ புறம்—91.

னிலைப், பெருமலை விடரகத் தருமிசைக் கொண்ட, சிறியிலை நெல்லித் தீங்கனி குறியா, தாத னின்னகத் தடக்கிச், சாதல் நீங்க வெமக்கீத் தனையே.' என்று அவரே அஞ்சியை நோக்கிக் கூறுதலாற் றெளியப் படும். இவ்வாற்றால், ஔவையார் கி. பி. 65 முதல் 165 வரையிலாவது வாழ்ந்தவ ராதல் வேண்டும்.

இனிக், 'கபில பரணர்' எனத் தொன்று தொட்டு வரும் வழக்கானே, கபிலரும், பரணரும் ஒரு காலத் தின ரென்றும், ஒத்த பெருமைய ரென்றும், ஒன் றிய கேண்மைய ரென்றும் கருதலாகும். வையாவிக் கோப்பெரும்பேகனால் துறக்கப்பட்ட கண்ணகி கார ணமாக, அவன்பாற் சென்று, அவனுக்கு இரக்க முண்டாகும்படி பாடிய புலவர்கள் கபிலர், பரணர், அரிசில்கிழார், பெருங்குன்றூர்கிழார் என்போரா கலின், இவர்களெல்லாம் ஒரு காலத்தின ரென் பது தெளிவாகின்றது. இவர்களால் பாடப்பட் டோரும் ஏறக்குறைய ஒரு காலத்தின ராதல் வேண் டும். செல்வக்கடுங்கோவைப் பாடிய கபிலர், மாந் தரஞ்சேரலிரும்பொறை இரங்கிக் கூறும்படி, அவ னுக்கு முற்காலத்திலோ, அவனது இளம் பருவத் திலோ இவ்வுலகினை விட்டகன்றூர் ஆகலின், அவரது காலம் கி. பி. 50 முதல் 125 வரை என்று கொள்ளு தல் பொருந்தும்.

இனி, அக்காலத்திற் றமிழகத்தின் நிலைமையைச் சிறிது ஆராய்ந்து நோக்கின், அது மற்றெந் நாட்டி னும் சிறந்து விளங்கிற் றென்பது புலனும். தமிழ்ப் பேரரசர்கள், 'அஞ்சாமை, ஈகை, அறிவு, ஊக்கம்' முதலியன எஞ்சாது விளங்கினூர்கள். கரிகாற் பெரு

வளவன், நெடுஞ் சேரலாதன், செங்குட்டுவன், ஆரி யப் படை தந்த நெடுஞ்செழியன் முதலிய தமிழ் வேந்தர்கள், வடக்கில் இமயமலை காறுஞ் சென்று, ஆங்குள்ள வேந்தர்களை வென்று, திறை பெற்று, இம யத்தில் தம்முடைய புலியும், வில்லும், கயலும் பொறித்து, மீண்டார்களென்னின், அவர்களுடைய ஊக்கமும், வீரமும் அளவிடற்பாலவாமோ? அன் றியும், அவர்கள் காடு திருத்தி நாடாக்கியும், நீர்நிலை களைப் பெருக்கியும், மற்றும் பல புரிந்தும், குடி தழு விக் கோலோச்சி வந்தமையால், மழை வேண்டுமளவு பெய்யா நிற்க, 'வேலி யாயிரம் விளையுட் டாக' என் னும்படி, நில னெல்லாம் தாங்கா விளைவு பெற்றிருந் தன. பண்டிகளாலும், கப்பல்களாலும், உள்நாட்டு வாணிகமும், புறநாட்டு வாணிகமும் நன்கு நடை பெற்று வந்தன. மற்றும், உலகப் பொது வாழ்க் கைக்கு வேண்டப் படுவனவாகிய நெய்வு, சிற்பங் களும், இரும்பு, வெண்கலம், செம்பு, பொன் முதலிய வற்றின் தொழில்களும், பிறவும் மேம்பட்டிருந்தன. அரசராயினோர், பல அரசியல் மன்றங்க ளமைத்து, முறை செய்து வந்தனர். இவ்வாற்றால், மக்களாயி னோர், பசியும், பிணியும், பகையு மின்றி, யாவருடனும் கலந்து உறவாடி, யின்புற்று வந்தனர். முடியுடை வேந்தரும், சிற்றரசரும், தாம் தமிழ்ப் புலமையுடை யவராய் விளங்கிய தன்றித், தமிழ்ப் புலவர்கள் பால் ஆன்ற மதிப்புடையவராயும் இருந்தனர். கரிகாற் பெருவளவன், பட்டினப்பாலை பாடிய உருத்திரங் கண்ணனார்க்குப் பதினாறு நூறாயிரம் பொன் பரிசி லளித்தான். பதிற்றுப் பத்துப் பாடிய புலவர்களுக்

துச் சேர மன்னர்கள் பன்னூறாயிரம் பொன் பரிந் தளித்து, நாடும், பிறவும் நனி வழங்கினர். பாரி, பேகன் முதலிய வேளிர் குல வள்ளல்களும், அதிய மான் முதலிய பிற வள்ளல்களும், மாரி யன்ன வரையா வண்மையால் புலவர்களுக்குப் பொன்னணி பாணையும், தேரும் அளித்துப், போற்றி வந்தனர். இவ்வாறு தமிழ்ப் புரவலர் மிக்கு விளங்கினமையின், தமிழ்ப் புலவரும் எண்ணிறந்தா ராயினர். பெண் பாலாருள்ளும் பலர் புலமை சிறந்து விளங்கினர். அசை வில்லாத செழுந்தமிழ் வழக்கானது அயல் மொழி வழக்கினை வென்று விளங்கிற்று. மக்களெல் லாரும் தமிழமிழ் துண்டு, அறிவும், திருவும், ஆற்ற லும் உடையாராய், அறம் பொருளின்பங்களைப் பெரு க்கி, வாழ்ந்து வந்தனர்.

## இடம்.

இவ்வாசிரியர் பிறத்தலாற் பெருமையெய்திய ஊர் யாதென்று பார்க்கின், திருவிளையாடற்புராண மானது, சங்கப்புலவர் நாற்பத்தெண்மரும்† பலவிடத் திருந்து, ஒரே காலத்து மதுரைக்கு வந்தனர் என்று கூறுதலின், அதுகொண்டு துணிதற்கு இடனில்லை. கபிலரகவல் என்னும் புத்தகம் கூறுவதும், முன்னரே பிழையென்று கடியப்பட்டது. பெரும்பற்றப்புலி யூர் நம்பி யியற்றிய திருவிளையாடற் புராணத்து, வாத வூரடிகளுக்கு ஞானோபதேசஞ் செய்த திருவிளையா டலில்,

† இது பாண்டிநாடு வற்கடமுற்ற காலையில், புலவரெல்லாம் பிரிந்து சென்று, மீண்டு மதுரை யடைந்ததனைக் குறிப் பிப்பதும் ஆகலாம்.

'நீதியார் மதுரக நீழல் நெட்டிலை யிருப்பை யென்றோர்
காதல்கூர் கவிதை பாடுங் கபிலனார் பிறந்த மூதூர்
சோதிசேர் வகுளை நீழல் சிலம்பொலி துளங்கக் காட்டும்
வேதநா யகனார் வாழும் வியன்றிரு வாத வூரால்.'

என்று கூறப்பட்டிருத்தலின், கபிலர் பிறந்தவூர். பாண்டி நாட்டிலுள்ள திருவாதவூர் என்னும் திருப்பதியென்றே கொள்ளற்பாலது. மதுரையும், பறம்பும் முதலியன இவ்வாசிரியர் வதிந்த இடங்களாகும்.

## கபிலரைப் பாடினோர்.

நக்கீரர், பெருங்குன்றூர்கிழார், பொருந்திலிளங்கீரனார், வெள்ளிவீதியார் என்போர் இவரைப் புகழ்ந்து பாடினோராவர்.

## பாடப்பட்டோர்.

இவராற் பாடப்பட்டோர், சேரமான் செல்வக்கடுங்கோவாழியாதன், பாரி, பேகன், மலையமான் திருமுடிக்காரி, ஓரி, நள்ளி முதலியோர்.

## கபிலர் பாடியன.

1. குறிஞ்சிப்பாட்டு.
2. குறிஞ்சிக்கலி.
3. குறிஞ்சிக்குறுநூறு
4. நற்றிணை.
5. குறுந்தொகை
6. அகநானூறு.
7. புறநானூறு.

(4–7: இவற்றிற் சிற்சில பாட்டுக்கள்.)

8. பதிற்றுப்பத்தில் ஏழாம்பத்து.
9. இன்னாநாற்பது.

10. மூத்தநாயனார் திருவிரட்டைமணிமாலை.
11. சிவபெருமான் திருவிரட்டைமணிமாலை.
12. சிவபெருமான் திருவந்தாதி.
13. கபிலம்.

இவையும், 'நெட்டிலையிருப்பை' என்னும் தனிப் பாட்டும், திருவள்ளுவமாலையிலுள்ள 'தினையளவு' என்னும் வெண்பாவும் இவரியற்றியன வாகும்.



## நான்காம் அதிகாரம்.

## குறிஞ்சிப்பாட்டு ஆராய்ச்சி.

மக்கள் அறிவு வளர்ச்சிக்கு இன்றியமையாக் கருவியா யுள்ளது மொழி. தம் கருத்தைப் பிறர்க்கு அறிவிக்கவும், பிறர் கருத்தைத் தாம் அறிந்து கொள்ளவும், மொழிபோல் துணையாவது பிறிதில்லை. இவ்வாற்றால், மக்களியக்கத்திற்கும், ஆக்கத்திற்கும் கருவியாயுள்ள மொழிகளும் பலவாக வுள்ளன. அவ்வம் மொழிகளிலிருந்தே அவற்றை யுடைய தொல்லோர்களின் பண்புகளும் அறியப்படும். நம் தாய் மொழியாகிய தமிழானது இன்ன காலத்தில் உதித்தது என எவ்வாற்றானும் அறிய வாராத அத்துணைப் பழமையும், திருத்தமும் உடையதாகும். தமிழ் மொழி, வழக்கு எனவும், செய்யுள் எனவும் இரு கூறுபட்டு இயங்குகின்றது. சாத்தா வா, நீ பொருளைத் தேடினாய், அவன் மிகப் பசித்தான், யான் சோறு கொடுத்தேன் என்றாற் போல, யாவரும் வழங்குதற் பொருட்டுக் கூறும் சொற்றொடர்கள் வழக்கு எனப் படும். இழிந்தோர் பலவாறு சிதைவுபடக் கூறுவனவும் ஒருவாற்றால் வழக்கே யாயினும், அவை அறிவுடையோரால் மேற்கொள்ளப்படா வாகும். நல்லறி வுடையோரால் பல்வகைச் சொற்களாலும் அமைதி பெறச் செய்யப் படுவன செய்யுள் எனப்படும். பாட்டுக்களே யன்றிச், சூத்திரம், உரை முதலாயினவும், செய்யுள் என்னும் பெயரால், சூத்திரச் செய்யுள், உரைச் செய்யுள் என்று இங்ஙனம் பண்டு வழங்கின. யாம் இப்

பொழுது செய்யுள் என்னும் பெயரைப் பாட்டுக்கே உரிய தாக்கிச், சூத்திரம் அல்லாதவைகளை உரை யெனவும், பாட்டு எனவும் இருவகைப் படுத்துக் கொள்கின்றேம். உரையினையும், பல்வகைப் படுத்துக் கூறுகின்றார் தொல்காப்பியனார். செய்யுட்களின் இடையே விரவி வரும் உரை சிலப்பதிகாரத்திற் காணப்படுவது. செய்யுள் அல்லது சூத்திரப் பொருளைத் தெளிவுறுத்தும் உரைகள் தமிழில் மிக்குள்ளன. யாதானு மொரு வரலாறு அல்லது உண்மையினைச் செய்யுளின்றித் தொடர்ச்சியாய்க் கூறும் உரைநடையா னியன்ற நூல், 'உரை நூல்' என்று வழங்கற் குரியது. அத்தகைய நூல் பண்டைச் சான்றோர் செய்ததாக நமக்கு ஒன்றும் கிடைத்திலது. உரைநடையானது, பயில்வாரது அறிவு நுணுகி நின்று ஆராய்தற் கேற்ற திட்பமும், கூறும் பொருளுக் கேற்ற ஓசையும் உடையதன்று ஆகலின், பாட்டுக்கள் போல, உணர்வினை யெழுப்பி, இன்பஞ் செய்வ தாகாது. ஓர் வரையறை யின்மையின், சிதை வின்றி நிலைபெறுவது மாகாது. எனினும், எளிதிற் பொருள் விளங்குவதாய்ச், சுருங்கிய அறிவினர்க்குப் பயன் றருவது உரை நடையே ஆகலின், ஒவ்வொரு மொழிக்கும் உரை நூல்கள் இன்றியமையாதன என்பதிற் றடையில்லை. அவ்வாறகையில் தமிழ் மொழி வளர்ச்சியுறு திருந்தது இரங்கத் தக்க தொன்றே.

தமிழ் மொழியிலுள்ள பாட்டுக்களின் மாட்சி அளவிடற் பாலன வல்ல. பிற மொழிச் செய்யுளை யெல்லாம் தமிழ்ச் செய்யுட்கள் வென்று விட்டன

என்னலாம். நமது முன்னையோர் தம் நுண்ணறிவாலும், உழைப்பாலும் கண்டறிந்த அரும் பொருண் மணிகளை யெல்லாம் நமக்கு உதவுமாறு தொகுத்து வைத்த களஞ்சியங்கள் பாட்டுக்களே யாகும். பல்லாயிரம் ஆண்டுகளின் முற்பட்ட நம் பெரியோர், என்பு, தோல், நரம்புகளால் யாக்கப்பட்ட உடம்பினை விடுத்து, எழுத்து, அசை, சீர்களால் யாக்கப்பட்ட உடம்பினை யெடுத்து, நமக் கெதிரில் வீற்றிருக்க, நாம் அவர்களோடு அளவளாவியும், அவர்கள் கூறும் உறுதி மொழிகளைக் கேட்டும், அறிவும், ஆண்மையும் உடையராய் இன்புற்றிருத்தலினும், பெறுதற் கரிய பேறு யாதுளது? எத்தனையோ ஆயிரம் ஆண்டுகளின் முன்பு விளங்கியிருந்து, பின் மாறுதலுற்று மறைந்து போன மலை, நிலன், கடல், யாறு முதலாயின வெல்லாம், புலவருடைய பாட்டுக்களில் தம் பண்டைய வுருவுடன் விளங்குதலைக் காணுமிடத்து, நமக்குண்டாகும் உணர்ச்சியை யாதென்று கூறலாகும்? உலக மென்னும் காட்சி மன்றத்தில், உயர்வற வுயர்ந்த ஒருவனால் காலந்தோறும் அமைத்து வைக்கப்படும் எண்ணில் பேதமான பொருள்களையும், அவற்றின் பண்புகளையும், பொறிக ளென்னும் வரைவு கோல் கொண்டு, உள்ள மென்னும் கிழியில் ஒழுங்குறத் தீட்டி வைத்த ஓவியராகும் நல்லிசைப் புலவர்கள், அவ் வோவியக் காட்சியில் உறைத்து நிற்குங்கால் உண்டாய வுணர்ச்சியே வடிவாக, அன்னவர்தம் செந்நாவினின், றெழுந்த பாட்டுக்களினும் நமக்கின்பம் விளைப்பன யாவை யுள? 'உருகிப் பெருகி யுளங்குளிர முகந்து கொண்டு, பருகற் கினிய பாங்

கருணைத் தடங் கடல்' போன்று, பருகுந் தொறும் பருகுந் தொறும் வற்றாத பேரூற்றாய்க், கழி பேரினிமை சுரந்தூட்டுவன பாட்டுக்களேயா மென்க.

இக்காலத்தே பொருட் பொலிவு சிறிது மின்றி, எதுகை, மோனை யமையச் சொற்களைத் தெற்றிவைப்பதே பாட்டென்று கருதிக் கொண்டிருப்பாரும் உளர். மடக்கும், திரிபுமாகச் சொற்களை அடுக்கி வைத்து, இரண்டொரு போலிப் பாட்டியற்றினாரைப் புலவர் வரிசையிற் சேர்த் தெண்ணுவாரும் உளர். அந்தோ! இவற்றுக் கெல்லாம் காரணம், பாட்டின் றன்மை இன்னதென்று அறியாமையே யாகும். தொல்காப்பியனார் கூறிய, 'நோக்கு' முதலிய இன்றியமையாச் செய்யு ளுறுப்புக்களை யொழித்து விட்டுப், பிற்காலத்தார் யாப்பிலக்கணம் வகுத்ததும், பாட்டின் றன்மை யறியாது, பிழை நெறியிற் பிறர் செல்லுதற்கு ஏதுவாயிற் றென்க. இவற்றை யெல்லாம் ஒதுக்கிச், சுருங்கிய சொற்களில் ஆழ்ந்து அகன்ற பொருள்களை யுடையனவாய், இயற்கைநெறி வழாதனவாய், உணர்வினை யெழுப்பி, மெய்ப்பாடு தோற்றுவிக்கும் சான்றோர் செய்யுட்களையே, அறிவுடையோர் 'பாட்டு' என்று கொள்வாராவர். அத்தகைய பாட்டுக்கள் தாம் எண்ணிறந்தன வுள. அவற்றுள், 'கபிலரது பாட்டு' என ஆன்றோரால் எடுத்துக் காட்டும் பெருமை வாய்ந்த செய்யுட்டுறைகளில், அப்புலவர் பெருமானது அடித்துணையே புணையாகச் சென்று, கிடைக்கும் பொருள்களை வெளிப்படுத்தல் கருதி, முதற்கண் குறிஞ்சிப்பாட்டு என்னும் துறையிற் செல்லுகின்றாம்.

குறிஞ்சிப்பாட்டு என்பது, சங்கத்துச் சான்றோரால் செய்யப்பட்டு, அக்காலத்தே தொகுக்கப் பட்டனவாகிய † பத்துப்பாட்டுள் எட்டாவதாக வுளது. இஃது, ஆரியவரசன் ‡ பிரகத்தனை தமிழறிவித்தற்குக் கபிலர் பாடியது என்று, இப்பாட்டினது உரையிறுதியில் எழுதப்பட்டுள்ள தொடரால் தெரிகின்றது. எனவே, ஆரிய வரசனாகிய பிரகத்தனென்பான் ஒருவன் தமிழ் நாட்டிற் போந்து, சிறிது தமிழ் பயின்ற துணையானே, தமிழின் பெருமையில் ஐயுறவு கொண்டிருந்தான் எனவும், அதனை யறிந்த நல்லிசைப் புலவரும், புலனழுக்கற்ற அந்தணாளரும் ஆகிய கபிலர், அவனுக்குத் தமிழின் ஒப்புயர் வில்லா மாட்சியைத் தெரிவிக்க எண்ணி, இப்பாட்டினை யியற்றிக் கற்பித்தாரெனவும், இதனைக் கேட்ட ஆரிய வரசன் தமிழ்ச் சுவையில் ஈடுபட்டுத், தமிழினை மேன்மேலுங் கற்றுச், செய்யுளியற்ற வல்ல புலவனாயினான் எனவும் ஓர்ந்து கொள்ளல் சாலும். இவன்

† பத்துப்பாட்டுக்கள் :—திருமுருகாற்றுப்படை. பொருநராற்றுப்படை. சிறுபாணாற்றுப்படை. பெரும்பாணாற்றுப் படை, முல்லைப்பாட்டு. மதுரைக்காஞ்சி, நெடுநல்வாடை. குறிஞ்சிப்பாட்டு, பட்டினப்பாலை, மலைபடுகடாம் என்பன. இதனை,

'முருகு பொருநாறு பாணிரண்டு முல்லை
பெருகு வளமதுரைக் காஞ்சி—மருவினிய
கோலநெடு நல்வாடை கோல்குறிஞ்சி பட்டினப்
பாலை கடாத்தொடும் பத்து.'

என்னும் வெண்பாவான் உளங்கொள்க. இப்பாட்டுக்கள் பத்திற்கும் நச்சினார்க்கினியர் உரை உளது.

‡ யாழ்ப்பிரமதத்தன் என்றும் பிரதி வேற்றுமையுண்டு.

பாடிய பாட்டு ஒன்று குறுந்தொகையிற் காணப்படுவது, இவன் கற்று வல்லனாயினான் என்பதனை வலியுறுத்துவதாகும்.

இப்பாட்டு, 261—அடிகளையுடைய அகவற்பா ஆகும். தமிழ்ச் செய்யுளின் ஓசை யமைதிக்குப் பா என்று பெயர். பாவை யுடைய செய்யுளும், ஆகுபெயரால் 'பா' என வழங்கப் படுகிறது. செப்பல், அகவல், துள்ளல், தூங்கல் எனச் செய்யு ளோசை நான்கு வகைப்படும். செப்பலாவது, ஒருவன் கேட்ப, மற்றொருவன் மாறு கூறுவது போல், இடையிடை நின்று செல்லும் இயற்கை யோசையாம். அகவலாவது, ஒருவன் தான் கருதிய வாறெல்லாம் வரையாது கூற, இடையிடை நிற்றலின்றித் தொடர்பு பட்டுச் செல்லும் இயற்கை யோசையாம். துள்ளலாவது, இசை வேறுபாடு தோன்றத் துள்ளிச் செல்லும் செயற்கை யோசையாம். தூங்கலாவது, சீர்தொறும் நிறைந்து நின்று செல்லும் செயற்கை யோசையாம். செப்பலோசை யுடையது வெண்பா எனவும், அகவலோசை யுடையது அகவற்பா எனவும், துள்ளலோசை யுடையது கலிப்பா எனவும், தூங்கலோசை யுடையது வஞ்சிப்பா எனவும் கூறப்படும். இவை யன்றிச் செப்பலும், அகவலும் விரவி வருவது மருட்பா எனவும், செப்பலோசையேனும், எல்லா வோசையுமேனும் பெற்றுக், கலிக்குரிய வுறுப்புக்களுடையதாய் வருவது பரிபாட்டு எனவும் கூறப்படும். இப்பாட்டு முழுதும் ஓரே தொடர்ச்சியாய்ச் செல்லும் அகவலோசை உடைத்தா யிருத்தலின், இஃது அகவற் பாவா மென்பது அறிக.

குறிஞ்சித் திணைக்குரிய பொருள் கூறுதலின், இதற்குக் குறிஞ்சிப்பாட்டு என்று பெயர் கூறினர். உலகத்துப் பொருளெல்லா வற்றையும், முதற்பொருள், கருப்பொருள், உரிப் பொருள் என மூவகைப் படுத்துக் கூறுவது தமிழ்நூல் வழக்கு. நிலனும், காலமும் முதற் பொருள் எனப்படும். நீர், தீ முதலிய மற்றைப் பூதங்களும் நிலனென அடங்கும். பிற பொருளெல்லாம் இவற்றைச் சார்ந்து தோன்றுதலின், இவை முதற்பொருள் எனப்பட்டன. தேவர், மக்கள், விலங்கு, புள், மரம் முதலாயினவும், உணவு, செயல், பறை, யாழ் முதலாயினவும் கருப் பொருள் எனப்படும். நிலத்தினும், காலத்தினும் தோற்றுதலின், இவை கருப்பொருள் எனப்பட்டன. (கரு = தோற்றம்). அவ்வந்நிலத்து மக்கட்கு வேறு வேறாய்த் தோன்றி நிற்றலின், தெய்வமும் கருப் பொருளாயிற்று. மக்கள் எய்தற் பாலனவாகிய அறம், பொருள், இன்பம், வீடு என்பன உரிப்பொருள் எனப்படும். உரிய பொருளாகலின் உரிப் பொருள் எனப்பட்டன. இவற்றை, அகப்பொருள், புறப்பொருள் என இரண்டாக அடக்கிக் கூறுவது தமிழ் நூன் முறை. இன்பம் அகப்பொருள். அறனும், பொருளும் புறப்பொருள். வீடு, அகம் புறம் இரண்டினும் அடங்கும். இன்பம், தானே யுணர்தலன்றிப், பிறர்க்கு இன்ன தன்மைத்தெனக் கூறலாகாமையின், அகம் என்றும், அறனும், பொருளும் பிறர்க்குக் கூறப் படுதலின், புறம் என்றும் பெயர் பெறுவவாயின. இன்பமும் பலவாயினும், ஒரு காலத்து ஒரு பொருளால் ஐம்புலனும் நுகரும் சிறப்புடைய காம

வின்பமே இங்கு கொள்ளப்பட்டது. அவ்வின்பந் தானும், சுவை மிகுதி தோன்ற உலக நடையோடு ஒத்தலும், ஒவ்வாமையும் உடையதாக்கிக் கூறப்படுகின்றது. உருவும், திருவும், பருவமும், குடியும், குணனும், அன்பும் முதலியவைகளால் தம்முள் ஒப்புமை யுடையராய தலைவனும், தலைவியும், பிணி, மூப்பாதிய வின்றி நுகரும் இன்பமே அகம் எனக் கூறப்படும் இன்ப மென்க.

அவ்வின்பத்திற்குக் காரணமாய ஒழுக்கம் அகத்திணை யெனப்படும். அது, குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை, பெருந்திணை, கைக்கிளை என எழுவகைப்படும். அறம், பொருளுக்குக் காரணமாய ஒழுக்கம் புறத்திணை யெனப்படும். அதுவும், வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, காஞ்சி, பாடாண்டிணை என எழுவகைப் படும். சிற்சில ஒப்புமை பற்றிக், குறிஞ்சி முதலிய அகத்திணை யேழுக்கும், வெட்சி முதலிய புறத்திணையேழும் முறையே இனமாக ஆசிரியர் தொல்காப்பியனார் கூறியுள்ளார். அகத்திணையுள், பெருந்திணையும், கைக்கிளையும் அல்லாத ஐந்துமே சிறப்புடையன. குறிஞ்சி யென்பது, கூடலும், கூடல் நிமித்தமும் ஆம். முல்லை யென்பது, பிரிவின் கண் ஆற்றியிருத்தலும், இருத்தல் நிமித்தமும் ஆம். மருத மென்பது, ஊடலும், ஊடல் நிமித்தமும் ஆம். நெய்தலென்பது, இரங்கலும், இரங்கல் நிமித்தமும் ஆம். பாலை யென்பது, பிரிதலும், பிரிதல் நிமித்தமும் ஆம். குறிஞ்சி முதலிய திணைகளுக்கு, முதற் பொருளாகிய நிலம், பொழுதுகளும், கருப் பொருளாகிய தெய்வம் முதலியவும்

வேறுவேறு வகுக்கப் பட்டுள்ளன. குறிஞ்சிக்கு நிலன் மலையும், மலை சார்ந்த இடமும் ஆம். பெரும் பொழுது, ஐப்பசியும் கார்த்திகையும் ஆகிய கூதிர்ப் பருவமும், மார்கழியும் தையும் ஆகிய முன்பனிப் பருவமும் ஆம். சிறு பொழுது, அப்பருவங்களது இரவின் நடுக் கூறாகிய யாமம் ஆம். கருப்பொருள், முருகவேள் ஆகிய தெய்வமும், குறவர் முதலிய மக்களும், புலி முதலிய விலங்குகளும், மயில் முதலிய புட்களும், வேங்கை முதலிய மரங்களும், மற்றும் இந்நிலத்தினும், காலத்தினும் தோன்றும் பொருள்களும், பிறவும் ஆம். இவ்வாற்றால், இப்பாட்டின் கட் கூறப்படும் பொருள் இவை யாதல் வேண்டும் என்றறிக. இவற்றுள் உரிப்பொருள் இன்றேல் பொருட் பேறு இன்றாம் ஆகலின், அஃது ஒருதலையாகக் கூறப்படுவதாம். அதனைச் சிறப்பிக்கவே முதற் பொருள், கருப் பொருள்களும் கூறப்படும்.

இனி, இப் பாட்டில் உரிப் பொருளின் எப்பகுதி கூறப்படுவது எனவும், இது, யார், யாருக்கு, எப் பொழுது, எவ்வாறு, கூறுவதாக இயற்றப்பட்டுளது எனவும் முதற்கண் அறிந்து கோடல் வேண்டும். குறிஞ்சி முதலிய அக வொழுக்க மெல்லாம், களவு, கற்பு என இருவகைப் படுத்துக் கூறப்படும். இவற்றில் களவின்றிக் கற்பு நிகழுமா றில்லை யெனவும், களவே சிறப்புடைத் தெனவும் கூறுப. களவாவது, முற்கூறிய உருவும், திருவும் முதலியவற்றால் தம்முள் ஒப்புமை யுடையாராய தலைவனும் தலைவியும், கொடுப்பாரும், அடுப்பாரு மின்றி, ஊழ் வகையால் தாமே யெதிர்ப்பட்டு இன்பம் துய்த்து வருவது. முத

வில் இவ்வாறு ஒரு பொழிலில் எதிர்ப்பட்டுச் சேர்வது இயற்கை எனவும், அதன் பின் அவர்கள் பிரிந்து சென்று, முன் போன்று மீட்டும் அவ்விடத்தே கூடப்பெறின், அஃது இடந்தலைப்பாடு எனவும், பாங்கனாற் கூடப் பெறின், அது பாங்கற் கூட்டம் எனவும், தோழியாற் கூடப் பெறின், அது தோழியிற் கூட்டம் எனவும் கூறப்பட்டுக், களவு நால் வகைப்படும். பாங்கனும், தோழியும், தலைமக்கட்கு உயிர்போற் சிறந்தாராகலின், அவர்களறிவது பிற ரறிவதாகாது, தலைமக்க ளறிவதே போலும் என்க. இப்பாட்டு, இயற்கையும், பின் னிகழும் கூட்டங்களுக்கு நிமித்தமும் கூறுவது என்பர் நச்சினார்க்கினியர். இயற்கையின் பின்பு, தோழியிற் கூட்டம் நிகழ்ந்து வருங்கால், இரவுக்குறி யிடையீடு பட்டுத், தலைமகன் பன் முறை வறிதே மீளா நிற்பத், தலைவி ஆற்றாமை பெரிதுடையளாய், உடல் மெலிவுறலானாள். தலைவியின் மேனி இளைத்து வேறுபட்டிருத்தலைக் கண்ட செவிலியானவள், இவ் விளைப்புக்குக் காரணமான நோய் இன்னதெனை அறியும் பொருட்டுக், குறி சொல்லுவாரை வினவி, அவர்கள் தெய்வத்தா னாயிற்று எனக் கூறலின், தெய்வங்கட்குச் சிறப்புச் செய்து, பின்னும் நோய் நீங்காமை கண்டு வருந்துகின்றாள். அந் நிலையில், தலைவி, மேலும் ஆற்றாமை யுடையளாய், 'எமக்குள் நிகழ்ந்த இம் மன்றலை நாம் தாய்க்கு அறிவுறுத்தலால் பழியும் வருவதுண்டோ?' என்று தோழிக்கு உணர்த்த, அவள் செவிலிக்கு அறத்தொடு நிற்பதாக, இயற்றப்பட்டுளது இப்பாட்டு. அறத்தொடு நிற்றல் என்பது,

தலைவனுக்கும் தலைவிக்கும் நிகழ்ந்த கூட்டத்தை வெளிப்படுத்தல். இந்த நிலைமையில் இதனை வெளிப் படுத்தலே அறத்தொடு பொருந்திய செயலாகலின், இஃது அறத்தொடு நிற்றல் எனப் பட்டது. எனவே, இப்பாட்டிற்குத் திணை, குறிஞ்சி எனவும், துறை, தோழி செவிலிக்கு அறத்தொடு நிற்றல் எனவும் கொள்க. தோழியானவள், உயர் குடிப் பிறந்த தலைவியது களவொழுக்கத்தை வெளிப் படுத்தும் பொழுது, செவிலிக்குச் சினமுண்டாகா வாறும், தலைவியிடத்தாதல், தன்னிடத்தாதல், தலைவனிடத்தாதல், அவளிடத்தாதல் சிறிதும் குற்றமின்றென அவளுணருமாறும், இங்ஙனம் நிகழ்ந்தது நல் வினைப் பயனே யெனத் தோற்றமாறும், படைத்து மொழியும் திறப்பாடு பெரிதும் வியக்கத் தக்கதாகும். இப்பாட்டின் பொருளுணரவே, அது நன்கு விளங்கு மாகலின், ஈண்டு அதனைச் சுருக்கிக் கூறுகின்றாம்.

"தாயே! யான் கூறுவதனை விரும்பிக் கேட்பாயாக! நீ தான், ஒள்ளிய நெற்றியை யுடைய என் தோழியது இறைமையினை நெகிழச் செய்த, பொறுத்தற்கரிய, நோயைக் கண்டு, அலமந்து, கட்டினானும், கழங்கினானும் அறிந்து குறிசொல்லுவாரை வினவி, அவர் தெய் வத்தான் வந்த வருத்தம் என்றலின், பல்வேறு தெய் வங்களை வழிபட்டும், அதனாற் றீராமையின், இந்நோயை அறியாத மயக்கத்தை உடையையாய், வருந்தா நின்றாய். இவளோ, தனது நல்ல வனப்புக் குன்றவும், தோள் மெலியவும், கூறுதற்கு அருமையாலே தன் மனத்துள்ளே மறைத்திருக்கும், ஆற்றுதற்கரிய, நோயி

னைக்குறித்து யான் நெருங்கிக் கேட்கலுற்றபொழுது, என்னை நோக்கி, 'முத்தானும், மணியானும், பொன்னானு மியன்ற அருங்கலன் கெட்டதாயினும், பின்னும் வந்து பொருந்தும். அஃதன்றிக், குணங்களின் அமைதியும், மேம்பாடும், ஒழுக்கமும் கெட்டால், உண்டாயமாசுபோம்படி கழுவி,முன்போலப் புகழை நிறுத்தல்,குற்றமற்ற அறிவினையுடைய முனிவர்க்கும் எளியதன்றென்று தொன்னூலறிஞர் கூறுவர். யாங்கள் இருவேமும் ஆய்ந்த மன்றல் இது வென, நாம் தாய்க்கு அறிவுறுத்தின், நமக்குப் புகழன்றிப், பழி வருவது முண்டோ? அஃதில்லையே. இங்ஙனம் வெளிப்படுத்த பின்பு, தலைவர்க்கே நம்மைக் கொடுக்க நேர்ந்திலராயினும், நாம் உயிர் போகுந்துணையும் இவ் வருத்தத்தைப் பொறுத்திருப்பின்,நமக்கு மறுமையினும் இக்கூட்டம் கூடுவதொன்றாகுமே.' எனக் கூறி, ஆற்றரு நோயினையுடையளாய், மையல் நோக்கங் கொண்டு, செய லொழிந்து, அயர்ந்து, மெலியா நின்றாள். யானுந்தான், மாறுபட்டு அமரிலே மிக்குச் செல்லும் இரண்டு பெரிய அரசரைச் சந்து செய்விக்கும் தொழிலில் நின்ற சான்றோர் போல, நினக்கும், இவளது வருத்தத்திற்கும் அஞ்சும் இரண்டு பெரிய அச்சத்தாலே வருந்தா நின்றேன். கொடுப்பின் எல்லாவற்றானும் நன்றாகி முடிதலும், குடியும், குணமும், சுற்றத் துதவியும் எனு மிவற்றை ஒப்பித்துப் பார்த்துப் பலருடனும் எண்ணுமலும், நும்மையின்றியும், யாங்களே துணிந்த, உயிர்க்குப் பாதுகாவலான, இவ்வரிய மணம் முன்பு நிகழ்ந்த வாற்றை நீ நன்றாக வுணரும்படி கூறுதற் கமைந்தேன். அது

கேட்டுச் சினவாதிருப்பாயாக! தாயே! நீ தான், விளைந்த தினையின் கண் வீழும் கிளிகளை யோட்டி, மாலைப் பொழுதில வருவீராக.' எனச் சொல்லி, எம்மை அனுப்புகையாலே,யாங்களும் சென்று, மரத்தினுச்சியில், இரவு காத்திருப்போன் பண்ணின, புலியஞ்சும் பரணிலே யேறிக், கவணும், தட்டையும் முதலியவற்றை முறை முறை கைக் கொண்டு, கிளிகளை யோட்டினேம். பின்பு, ஞாயிற்றின் வெம்மை மிகுகின்ற பகற்பொழுதிலே,வானிற்பறக்கும் பறவைகளெல்லாம் தாம் விரும்புர் சேக்கையிற் செல்லாநிற்க, யாங்கள், நெடிய மலையுச்சியி னின்றும் குதிக்கும் தெளிந்த நீரையுடைய, வெளிய துகில் போலும், அழகிய அருவியிலே, தவிராத விருப்புடன் மேலும் மேலும் விளையாடி, அதன் பின்பு, பளிங்கினைக் கரைத்துச் சொரிந்து வைத்தாற் போலும் சுனையிற் குடைந்து விளையாடுங்கால், எங்கள் மனத்திற்கு விருப்பமான பல பாடல்களைப் பாடினேம். ஆன பின், எமது பின்னிய கூந்தலின் நீரைப் பிழிந்து,சாம் புலர்த்தி, உள்ளிடம் சிவந்த கண்ணினேமாய், ஆம் பல், அனிச்சம், செங்கழுநீர், குறிஞ்சி, வெட்சி முதலிய பல்வகைப் பூக்களையும், மிக்க வேட்கையுடன் பலகாலும் திரிந்து பறித்து வந்து, தூய்தான அகன்ற பாறையிலே குவித்துப், பறவைகளின் ஓசையாகிய பல்லியங்களை யுடைய மலைப் பக்கத்திற் புனத்தே, தெளிந்த இசையுடன் கூடிய சொற்களால் இடையிடைக் கிளிகளை யோப்பியும், புறவிதழ்களைக் களைந்தெறிந்து, ஒழுங்கு பெறக் கொய்து இயற்றிய 'தழை' யென்னும் உடையினை இடையிலே உடுத்

தியும், பல் வேறுருவின் அழகமைந்த மாலைகளை எம் முடைய மெல்லிருங் கூந்தலில் அழகுபெறச் சுற்றி யும், நெருப்புப் போலும் நிறத்துடன் விளங்கும் அழகிய தளிரையுடைய அசோகினது தாது உதிர் கின்ற தண்ணிய நிழலிலே மேவியிருந்தேம். அங் ஙனம் இருக்கையில், ஆண்டு, ஓர் தோன்றல், பன்னிற முள்ள பல்வகைப் பூக்களாலும் தொடுக்கப் பெற்ற தொடையலையும், வெளிய தாழை மடலிற் பொருந் தச்செய்த கண்ணியையும் சென்னியில் அழகுறச் சூடியும், பிச்சி மலராற் றொடுத்த ஒரு சாமா கிய மாலையைச் சுற்றியும், அசோகினது தளிரைத் தோளில் வீழ்ந் தசையும்படி ஒரு காதிலே செரு கியும், சந்தனம் பூசப் பெற்று, அகன்று, உயர்ந்து வி ளங்குகின்ற செம்பொறியை யுடைய மார்பில், தொ ன்று பட்டு வரும் சிறந்த அணிகலங்களோடே, நறிய மாலைகளைப் பொலிவுற அணிந்தும், நுண்டொழி லமைந்த கச்சினை உடையின் மேல் இறுகக் கட்டி யும், கையிலே வில்லை யெடுத்து, அம்புகளைத் தெரிந் து பிடித்தும், பொன்னாற்செய்த வீரக்கழல், பெய ரும் பொழுதெல்லாம், திருந்திய அடியிலே ஏற் றிழிவு செய்து விளங்கும் படியாகப் போந்தனன். போந்தவன், அணுகுதற்கரிய, வலியமைந்த பகை வரைப் புறங் கண்ட வீரர் போலே, செருக்கும், சின முமுடைய நாய்கள், இமையாத கண்ணினவாய், எம் மை வளைத்துக் கொண்டு, மேன்மேல் நெருங்கி வரு தற்கு யாங்கள் அஞ்சி, அடி தளர்ந்து, வருத்தம் மிக்க மனத்துடன், வேறு புலத் தேறச் செல்லா நிற்ப தனைக் கண்ணுற்றனைய், மாறுய விடைகளை யெல்

லாம் பொரு தோட்டியதும், வேறு புலத்திருக்கும் புதிய ஆவினைக் காணலுற்றது மாகிய ஏறு போலே, அழகு பெறத் தோன்றி, யாங்கள் அஞ்சுதற்குத் தான் அஞ்சி, மென்மையும், இனிமையு முடைய சொற்களை எமக்குப் பொருந்துமாறு சொல்லி, எம் கூந்தலையும், அழகையும் புகழ்ந்து, 'ஒள்ளிய தொடியும், மெல்லிய சாயலும், அழகிய உந்தியும், மதரிய கண்ணும் உடைய இளையீரே! என்னைத் தப்பி, இவ்விடத்துப் போந்த யானை முதலியவற்றைக் கண்டீரோ?' என வினவினன். அதற்கு யாங்கள் மறுமொழி தந்திலே மாகையால், அவ் வாண்டகை, நெஞ்சழிந்து, 'நீவிர் அவற்றைக் காட்டித் தாரீ ராயினும், எம்முடன் ஒரு வார்த்தை சொல்லுதலும் நமக்குப் பழியாமோ?' எனச்சொல்லி, வண்டு மூசும் பூக்களையுடைய, தழை பரந்த கொம்பை முறித்துப், பரிக்கோலைக் கைகடந்த மதயானை போல ஓச்சிக், கல்லென்னும் ஓசை படக் கத்தும் வேட்டை நாய்களின் கடுங் குரலை மாற்றி, யாங்கள் வார்த்தை சொல்லுவதோர் காலத்தைப் பார்த்து நின்றனன். அப்பொழுது, வேறு புனத்திலே, காவலாளர்கள் கள்ளுண்டு, காவன் மடிந்திருந்த வளவில், ஓர் வேழமானது புனத்தினைத் தின்று நொக்கி விடுகையினாலே, அவர்கள், வருத்தம் மிக்குத், தமது பாம்புபோலும் வில்லை நாணேற்றி, அம்பினை யெய்து, காடெல்லாம் கல்லென்னும் ஓசை பிறக்க, வாயை மடித்து வீளை யோசையெழுப்பி, அதனைப் புனத்தினின்றும் ஓட்ட, அக்களிறு, மதச் செருக்கினை யுடைத்தாகி, உருமேறு போல முழங்கி, மரங்களை முறித்துக், கையைச்

சுருட்டி நிலத்தே யெறிந்து, கூற்றுவனைப் போல எங்கள் மீது கடுக வந்தது. யாங்கள், உயிர்கொண்டு பிழைப்ப தோரிடம் அங்கு வேறுணரேமாகி, உலை வுற்ற மனத்துடன், உயிரினுஞ் சிறந்த நாணினைப் பாதுகாத்தலை மறந்து,வளைகளொலிக்கும்படி விரைந்து சென்று, அவனைச் சேர்ந்து, தெய்வ மேறின மயில் போல நடுங்கா நிற்க, அவன் கடுவிசைப் பகழியை நிரம்ப வலித்து, அவ் வியானையின் முகத்தே யெய்தமையால், அம்புபட் டுருவின புண்ணி னின்றும் குருதி யொழுகா நிற்க, அது, தன்னை மறந்து, ஆண்டு நிற்க லாற்றாது, புறங் கொடுத் தோடிற்று. அதன் பின், யாங்கள், முருக வேளுக்கு வரை மகளிர் கைகோத் தாடுவது போன்று, கடம்பின் அரையினை நெருங்கச் சூழ்ந்த மாலை போல், கை கோத்துக் கொண்டு, யாற்றின் பெருக்கிலே குதித்து விளையாடலுற்று, இடிகரையி னின்ற வாழை போலே, கால் தளர்ந்து,நீரிற் செல்ல லுற்றேமாக,அது கண்டு, விரைந்து வந்தெடுத்து, அழகிய மலை பொருந்தின நாட்டை யுடையனை அவ் வாண்டகை, 'யான் நினது அழகிய நலத்தை நுகர்வேன். நின்னை நீங்குவேனெனச் சிறிதும் அஞ்சாதே.' என்று சொல்லி, ஒளி பொருந்திய நுதலினைத் துடைத்து, நெடுநாள் இக்கள வொழுக்கம் நிகழ வேண்டுமென நினைத்து, என் முகத்தை நோக்கிச் சிரித்தான். அப்பொழுது, தனக்கு இயல்பாகிய நாணமும், அச்சமும் வந்து தோன்றுகையால், இவள் தன்னிடத்து நின்று விரைந்து நீங்கவும் விடானாய், அங்ஙனம் நின்ற நிலையிலே கையா லணைத்து, இவள் மார்பு தன்

மார்பிலே யொடுங்கும்படி தழுவா நின்று, பின், இவளுள்ளக் கருத்து மேல் வரைந்துகொண்டு இல்லறம் நிகழ்த்துதலா யிருக்குமென உட்கொண்டு, இவளை நோக்கி, 'ஆருயிர்ப் பாவாய், பலரும் வந்துண்ணுமாறு கதவு அகலத் திறந்து கிடக்கும் வாயிலையுடையதாய், மிடாச் சோற்றை வருவார்க்கெல்லாம் வரையாம லிடுகின்ற, விழாக்கொண்டாடினாற் போலும் செல்வத்தை யுடைய மனையகம் பொலிவு பெறும்படி, பைந்நிண மொழுகிய நெய்ம்மிக்க அடிசிலை நீ இடாநிற்கக், குற்ற மில்லாத உயர்குடிப் பிறந்தோர் தமது சுற்றத்தோடே விருந்துண்டு, எஞ்சியுள்ள மிச்சிலை நீயும் யானும் உண்ணுதல் மேன்மையுடைத்து.' என்று சொல்லி, இல்லறம் தங்களைக் கரை யேற்றுவதாகத் தெளிவித்து, மலை யுச்சியிலுறையும் முருகவேளை வாழ்த்தி, வணங்கி, அவன் முன்பு வஞ்சினங் கூறி, அழகிய இனிய அருவி நீரைக் குடித்தனன். அதனால் இவள் நெஞ்சு பொருந்தியிருக்கக், களிற்றினால் தரப்பட்ட கூட்டத்தைத், தேவர்களும் விரும்பும் பூக்கள் நிறைந்த சோலையில், அன்றைப் பகற் பொழு தெல்லாம் போக்கி, ஞாயிறு மலையின்கண் மறைய, மாலைப்பொழுது வருதல் கண்டு, 'இலங்கிழையீர்! நம்முடைய சுற்றத்தார் நுமது நேரிறை முன்கை பற்றி எமக்குத் தர, நாடறியும் நன் மணத்தினைப் பின்பு நிகழ்த்துவேம். யாம் இக்கள வொழுக்கத்தாற் பெறும் பேரின்பம் நுகர்தற்குச் சிறிது நாள் இங்ஙனம் ஒழுகுவது பற்றி நெஞ்சு கலங்கா திருப்பீராக.' என்று அருளுடைத்தாகிய நன் மொழியை இவள் வருத்தந் தீரும்படி

சொல்லி, ஆவைப் புணர்ந்த ஏறு போலே விடாமல் எம்முடன் கூடவந்து, முழவோசை யறாத நம் ஊர் வாசலில், பலரும் நீருண்ணுந் துறையில், எம்மை நிறுத்தி மீண்டு போனான். அது முதலாக, அன்று போலும் விருப்பத்தோடே, எந் நாளும் இரவுக் குறியில் வருதலைத் தனக் கியல்பாக வுடையன். அங்ஙனம் வரும்போதெல்லாம், ஊர் காவலர் கடுகிக் காத்தாராயினும், சினத்தினை யுடைய நாய் குரைத்ததாயினும், நீ துயிலுணர்ந்தாயாயினும், நிலவு வெளியாக எறித்த தாயினும், மூங்கிலை யொத்த மென்றோளிற் பெறும் இன்றுயில் பெறாது போவன். அங்ஙனம் வாளா பெயரினும் அதற்கு வெறுத்தலைச் செய்யான். அவன்றான் இளமைப் பருவத்தைக் கடந்தது மிலன். செல்வச் செருக்கால் எந்நாளும் தன் குலத்திற் குரிய நற்குணங்களின் நீங்கியது மிலன். அலர் முதலிய வற்றால் அச்சத்தை யுடைய இவ்வூரின் கண், தனக்குப் பொய்யாயிருக்கின்ற இரவுக் குறியில் வருந்தன்மையை, இஃதொழுக்க மன்றென்று நினைத்து, அவன் வரைந்துகொள்ள இல்லறம் நிகழ்த்துதலே நல்லொழுக்கமென்று துணிகையினாலே, இவளுடையபெரிய, மதர்த்த, குளிர்ந்த கண்கள், பெருந்துளி யெறிந்து மழை பெய்யப்பட்ட மலர் போல் அழகு கெட்டு, இமை சோர்ந்து, ஈரத்தினையுடையவாய்க் கலங்கா நிற்கும். அதற்குமேலே, இவள், அவர் வருகின்ற மலையிடம், புலியும், யாளியும் முதலிய இடும்பை செய்வன வுடையவாயிருக்கு மென்று நினைக்குந் தோறும், வலையி லகப்பட்ட மயில் போலே தனது நலம் போம்படி மெலிந்து, கண்ணில் அரித்து வீழ்கின்ற நீர்

நாள் தோறும் மார்பிலே துளிப்பக் கலங்காநிற்கும். இது காண் நல்வினை நிகழ்ந்த வண்ணம், என்றாள்.''

தோழி செவிலிக்கு அறத்தொடு நிற்குங் காலத்துத் தலைவனை எளியனாகக் கூறுதலும், உயர்த்துக் கூறுதலும், அவனது வேட்கை மிகுத்துரைத்தலும், அவன் தம்மைக் கைப்பற்றினமைக்குக் காரணமிட்டுரைத்தலும், தலைப்பட்டமை கூறுதலும், படைத்து மொழியாது உண்மை கூறுதலும் என்று இவ்வாற்றால் உணர்த்துதற் குரியள், என்று ஆசிரியர் தொல்காப்பியனார் கூறிய இலக்கணம் இப்பாட்டில் இடையிடை அமைந்திருத்தல் காண்க.

இவ்வாறு கூறக் கேட்ட செவிலியானவள், பின்பு நற்றாய்க்கு அறத்தொடுநிற்கும். நற்றாயும், தந்தைக்கும், தன்னையர்க்கும் அறத்தொடுநிற்கும். பின், தலைமகன் தமரொடும் போந்து, தலைமகளை வரைந்து கொண்டு, இல்லறம் நிகழ்த்தா நிற்பன் என்க.

இனிக், களவொழுக்கம் குற்ற முடைய தன்றோ எனின், இது தான், எவ்வாற்றானும் ஒப்புமையுடையா ரிருவர் மாட்டுத் தெய்வத்தான் நிகழ்ந்ததாகலானும், கந்தருவர் வழக்கத்தோடு ஒத்த தாகலானும், பின்பு இவ்விருவருமே நாடறிய நன் மணஞ் செய்து கோடலானும், குற்ற முடைத் தாகாது. தலைவனுக்கும் தலைவிக்கும் உள்ள தலையன்பு இவ் வொழுக்கத்தில் சிறந்து காணப்படுதலின், இது குணமுடையது மாகின்றது. இன்பத்திற்குக் காரணம் அன்பேயாகலின், மக்களுள் தலைவராயினாரிடத்து நிகழும் அன்பினை விளக்கி, அதன் காரியமாகிய இன்பத்தைக் காட்டுவது ஆன்றோர் கருத்தாம். இறையனா

ரும் முதற் சூத்திரத்து, 'அன்பி னைந்திணைக் களவெனப் படுவது' என்றும், இறுதிச் சூத்திரத்து, 'களவு கற்பெனக் கண்ணிய வீண்டையோ-ருளநிகழன்பி னுயர்ச்சிமேன' என்றும் கூறியவைத்துத், தலைமக்க ளொழுக்கம் அன்பினைச் சார்ந்து நிகழ்வ தென்று காட்டியருளினர். தலைவற்கும் தலைவிக்கும் இடையே தோன்றும் இவ்வன்பே,பின் எல்லா வுயிர்களிடத்தும் அன்பு செய்தற்கும், உலகெலாமாகி, வேறாய், உடனுமா யிருக்கும் முழு முதற் கடவுளிடத்து அன்பு செய்தற்கும், வித்துப் போன்றுள்ள தென்பது உய்த்துணர்வார்க்கு விளங்கும்.

இனிப், 'பொய்யும் வழுவும்' மிக்குள்ள இக் காலத்திற்கு இவ்வொழுக்கம் பொருந்திய தன்று மெனினும், மக்கள் அறிவு வாய்ப்பெற்று, ஒருவரை யொருவர் அறிந்து, மனம்பற்றிய பின்னரே மணஞ் செய்தல் தக்க தெனவும், சிறுமியர் மரப் பாவைக்கு வதுவை யாற்றுதல் போல், இளங் குழவிகட்கு மணம் முடித்தல் சிறிதும் தகாதெனவும் அறிக.

பெண்டிர்க் குரிய கடமை பல வற்றுள்ளும் முதலாக நிற்பது, அவர்கள் கற்பினின்றும் வழுவாது தம்மைப் பாதுகாத்துக் கொள்ளுதலே. 'தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற-சொற்காத்துச் சோர்விலாள் பெண்.' என்று வள்ளுவனாரும் அதனையே முதலாக வைத்துக் கூறி யுள்ளார். கற்பென்னும் ஒழுக்கமே அவர்கட்குச் சிறந்த அணிகலனாவது. உயர் குடிப் பிறந்த பெண்டிர் தம் கற்பினை நிலை நாட்டுதற்கு உயிரினை யிழக்க வேண்டு மெனின், அவ் வுயிரினையும் ஓர் துரும்பெனக் கருதி விடுவர்.

†'உயிரினுஞ் சிறந்தன்று நாணே நாணினுஞ்-செயிர்தீர் காட்சிக் கற்புச்சிறந் தன்றெனத்-தொல்லோர் கிளவி புல்லிய நெஞ்சமொடு' எனத் தொன்று தொட்டு வரும் தமிழ் நாட்டுப் பெண்டிரது கற்பின் திறத்தை ஆசிரியர் தொல்காப்பியனார் சிறந்தெடுத்துக் கூறுதலுங் காண்க. இப்பாட்டின் கண், தலைவியானவள், இரு முது குரவர் கொடுப்ப மணம் நிகழாவிடினும், ஊழால் தன்னை யுற்றானுக்கே தான் உரியளென்னும் உறுதிப் பாடுடையளாய், இதனை வெளிப் படுத்தா தொழியின், தாய் தந்தையரால் தன் கற்பிற்கு ஏலாதன கருதப் பட்டுத், தனக்கும், குடிக்கும் வடுவுண்டா மென்று அஞ்சித், தோழியை நோக்கி, 'விலையுயர்ந்த அணிகலன் கெடினும் மீண்டும் வந்து கூடும்; சால்பு முதலிய குன்றின் உண்டாய பழியைப் போக்கிப், பழைய புகழை நிறுத்தல் முனிவர்க்கும் அரிது என்பர் நூலோர்.' எனவும், 'எமக்குள் நிகழ்ந்த இம் மன்றலைச் செவிலிக்கு அறிவுறுத்தலே நன்றாம்.' எனவும், 'அதன் பின் தாய் தந்தையர் நம்மைத் தலைவர்க்கு அளிக்க நேர்ந்திலராயினும், இவ் வருத்தத்தைப் பொறுத்திருந்து உயிர் நீப்பின், மறுமையினும் இக் கூட்டம் நமக்கு இயைவதாகும்.' எனவும் கூறினளாக,

'முத்தினு மணியினும் பொன்னினு மத்துணை
நேர்வருங் குரைய கலங்கெடிற் புணரும்;
சால்பும் வியப்பு மியல்புங் குன்றின்
மாசறக் கழீஇ வயங்குபுகழ் நிறுத்தல்
ஆசறு காட்சி யையர்க்கு மந்நிலை

† தொல்காப்பியப் பொருளதிகாரம்-113.

யெளிய வென்னார் தொன்மருங் கறிஞர்;
இருவேம் ஆய்ந்த மன்ற லிதுவென
நாமறி வுறாலிற் பழியு முண்டோ?
ஆற்றின் வாரா ராயினு மாற்ற
எனையுல கத்து மியைவதால் நமக்கென.'

என்று கூறப்பட்டுள்ள தொடர்கள், எத்துணை உயரிய கருத்தைத் திட்பமுற விளக்கி மகிழ்வுறுத்துகின்றன பாரீர்! 'கலங் கெடிற் புணரும்' என்று எடுத்துக் காட்டால், மக்கட்கு அஃது ஒழுக்கம் போல் அரியதன்று என்பதும், உடம்பிற்கு அணியாய அஃது இல்லா தொழியினும், உயிர்க்கு அணியாய ஒழுக்கமுடையாரே யாவராலும் புகழப் படும் மேன்மையுடைய ரென்பதும், அஃதுடைத்தாயிருப்பினும் ஒழுக்க மிலாதவர் போக்குதற்கரிய பழியினையே எய்துவ ரென்பதும் பெறப்படுகின்றன. இத்துணை அறிவும் உறுதியும் வாய்ந்த பெண் மக்களைப் பெற்றிருத்தலினும் ஒரு நாடு பெறுதற்குரிய பேறு யாதுளது?

இனி இப்பாட்டின்கண்,

'குன்றுகெழு நாடனெம் விழைதரு பெருவிறல்
உள்ளத் தன்மை யுள்ளினன் கொண்டு
சாறயர்ந் தன்ன மிடாஅச் சொன்றி
வருநர்க்கு வரையா வளநகர் பொற்ப
மலரத் திறந்த வாயில் பலருணப்
பைந்நிண மொழுகிய நெய்ம்மலி யடிசில்
வசையில் வான்றிணைப் புரையோர் கடும்பொடு
விருந்துண் டெஞ்சிய மிச்சில் பெருந்தகை
நின்னோ டுண்டலும் புரைவ தென்றாங்கு
அறம் புணை யாகத் தேற்றி'

என இல்லற வியல்பு கூறப்பட்டுளது. இது, தலைவியின் கருத்து வரைந்து கொண்டு இல்லறம் நிகழ்த்துத லாயிருக்குமென உட்கொண்ட தலை மகன், அவளை நோக்கிக் கூறிற்றாகத் தோழி கூறியதாகும். இதில், தலைவன் றன் மனையகம், பலரும் வந்து உண்ணும்படி கதவு அகலத்திறந்தே கிடக்கும் வாயிலையுடைய தென்றும், மிடாச் சோற்றை வருவார்க்கெல்லாம் வரையாமலிடுதலின், விழாக் கொண்டாடினாற் போலும் செல்வத்தை யுடைய தென்றும் கூறியிருப்பது, தமிழ் மக்களது அறத்தின் மேம்பாட்டினை மலை விளக்காக்குகின்றது. 'படைப்புப் பல படைத்துப் பலரோடுண்ணும், உடைப் பெருஞ் செல்வர்' எனப் புறத்தினும், 'புகழ்நிலைஇய மொழி வளர, அறநிலைஇய அகனட்டிற், சோறுவாக்கிய கொழுங்கஞ்சி, யாறுபோலப் பரந்தொழுகி' எனப் பட்டினப்பாலையினும், உண வளித்தலின் சிறப்புக் கூறியிருத்தலுங் காண்க. இவற்றால், பலருடனுக உண்ணுதலே செல்வத்துப் பயனு மென்பதும், இது பெற்றாரே செல்வரா மென்பதும் பெறப்படுவதாயிற்று. 'மலரத்திறந்த வாயில்' என்னுங் கருத்தினைக் கம்பரும், 'அடையா நெடுங் கதவு' என்று கூறுவர். பிறரும் பிறவாறு கூறுவர். இத்தகைய மனையின்கண், பசிய நிணமொழுகின நெய் மிக்க அடிசிலை நீ இடுகையினாலே, குற்றமில்லாத உயர் குடியிற் பிறந்த பெரியோர் தமது சுற்றத்தோடே விருந்துண்டு எஞ்சியுள்ள மிச்சிலை நின்னோடு உண்ணுதல் மேன்மை யுடைத்து.' என்றும், 'இவ் வில்லறமே நம்மைக் கரையேற்றுவதாகும்.' என்றும் தலைவன்

தலைவிக்குக் கூறினான் என்க. எனவே, வரைந்து கொண்டு இல்லறம் நிகழ்த்துவேம் என்றானாயிற்று. இல்லிலிருந்து செய்யப்படும் அறம் பலவற்றுள்ளும் விருந்தோம்பல் சிறப்புடைத்து. வள்ளுவனாரும் விருந்தோம்பலையே சிறந்தெடுத்து முதற்கட் கூறுவராயினார். பிறவறம் புரியினும், விருந்தோம்பல் இல்வழி, இல்லறம் இல்லையாயிற் றென்பது தேற்றம். இவ்வறம் தான் ஒத்த அன்புடைய கணவனும் மனைவியும் கூடியிருந்தல்லது செய்ப லாகாது. 'தொல்லோர் சிறப்பின் விருந்தெதிர் கோடலும் இழந்த என்னை' என்று கண்ணகி கூறுவதாக இளங்கோவடிகளும், 'விருந்து கண்டபோ தென்னுறுமோவென வெதும்பும்' என்று சீதை அழுங்குவதாகக் கம்பரும் கூறியிருக்கும் நுட்பம் உளங்கொளற் பாலது. இப் பாட்டில், 'பைந்நிணமொழுகிய நெய்ம்மலியடிசில்' என்றமையால், விருந்தினர்க் களிப்பது சிறந்த வுணவாதல் வேண்டு மென்பதாயிற்று. 'வசையில் வான்றிணை புரையோர்' என்றமையால், விருந்தினர் தகுதி யளவே விருந்தோம்பலின் பயனளவாமென்பதாயிற்று. 'விருந்துண் டெஞ்சிய மிச்சில்' என்றமையால், விருந்தினர்க்கு இடுதற் பொருட்டே உணவு அடுதல் வேண்டு மென்பதாயிற்று. 'பெருந்தகை' என்றமையால், அங்ஙனம் மிச்சி லுண்பானே பெரிய தகுதிப் பாடுடையன் என்பதாயிற்று. 'நின்னோடுண்டலும்' என்றமையால், மனைவி முன்னிருந்து மன மகிழ்ந் தூட்ட உண்ண வேண்டு மென்பதாயிற்று.

'இனைத்துணைத் தென்பதொன் றில்லை விருந்தின்
றுணைத்துணை வேள்விப் பயன்.'
'வித்து மிடல்வேண்டுங் கொல்லோ விருந்தோம்பி
மிச்சின் மிசைவான் புலம்.'

என்னும் மறைமொழிகள் இங்கு நினைக்கற்பாலன. ஒருவனையும் ஒருத்தியையும் படைத்துக் கொண்டு, அவர்கள் வாயிலாக உலகத்தார்க்கு இன்பத்தின் பெற்றியை அறிவிப்பான் புக்க ஆசிரியர், அவ்வின்பம் நிலைபெறுதற்கு அறம்பற்றாக் கோடாதலை யறிந்து, கற்பொழுக்கமும், விருந்தோம்பலும் முதலிய இல்லற முறைமைகளை இடையறிந்து கூறிவைத்தாரென்க.

இனி, இப்பாட்டியற்றிய நல்லிசைப் புலவராய கபிலர், தாம் கூறும் இப் பொருளின் சுவையை மேம்படுத்துக் காட்டுதற்குப், பலதிறப்பட்ட வனப்புடைய உலகியற் பொருட் காட்சியில் நம்மைக் கொண்டு செல்கின்றார். உலகத்தில் அழகு மிக்குடைய பொருள்களைக் காணுங்கால், மக்களது அறிவு, அவற்றில் அழுந்தி நின்று, இன்புறுதல் கண்கூடாம். அத் தகைய பொருள்களை வெவ்வேறிடத்துத் தனித் தனியாகக் காண்பதினும், அவை பலவற்றையும் தொகுத்து வைத்துள்ள காட்சி மன்றத்தில் ஒருசேரக் காணுங்கால், அவற்றின் நிறங்களும், வடிவுகளும், குணங்களும், செயல்களும், ஒற்றுமை, வேற்றுமைகளும் எண்ணிறந்த வகையாய்த் தோன்ற, அவைகளை அங்ஙனம் படைத்தருளிய முழுமுதற் கடவுளின் வரம்பிலா ஆற்றலை நினைந்து வியந்து உருகுகின்றேம். அங்ஙனம் பல்

பொருளும் தொகுத்து வைத்துள காட்சி மன்றம் தானும், எக்காலத்தும் எவ்விடத்து முள்ள யாவர்க்கும் ஒருசேரப் பயன் படுவதின்று. நல்லிசைப் புலவராயினோர் அப் பொருள்களைத் தம் பாட்டுக்களில் தொகுத்து வைத்து, எக் காலத்தி யாவருள்ளத்தும் நிலவு மாறு செய்ய வல்லுநர். இயங்கியற் பொருளும், நிலையியற் பொருளும் ஆகிய உலகத்துப் பொருள்கள் செய்யுளிற் கூறப்படும் பொழுது, அவற்றினியற்கை பிறழாமல் உள்ளவாறு கூறப்படுதல் வேண்டும். அவ்வாறு கூறுமிடத்தும், ஓரோவழிப் பொருள் புலப்படா தொழியினும், சுவை தோன்றாவிடினும், அவற்றோடு ஒப்புமை யுடையவற்றைக் கண்டு சார்த்திக் கூறுதல் வேண்டும். ஒரு பொருளை அதன் தன்மை பிறழாமல் கூறக் கேட்கு மிடத்தும், ஒத்த தன்மையுடைய வேறு பொருளோடு உவமித்துக் கூறக்கேட்கு மிடத்தும் உண்டாகும் மகிழ்ச்சி பெரிது. இவற்றை முறையே தன்மை நவிற்சி யெனவும், உவமை யெனவும் கூறுவர் அணி நூலார். ஆசிரியர் தொல்காப்பியனார் உவமமொன்றே கூறி, அதன் கட்பல அழகும் அடங்க வைத்த மாட்சி அளவிட்டுரைக்கற் பாலதன்று. பிற்காலத்தார் அலங்கார மெனப் பல நூல்கள் எழுதி வைத்தாரேனும், அவை யெல்லாம் தமிழில் இல்லாத அழகினைக் கூறுவனவுமல்ல. உள்ள அழகினை எஞ்சாது எடுத்துரைப்பனவு மல்ல. இயற்கையின் வழாமல் இயம்புவனவு மல்ல. இவ் வுண்மையினை, 'நிரனிறுத் தமைத்த' என்னும் உவமவியற் சூத்திர வுரையில், 'இனி இவ் வோத்தினிற் கூறுகின்ற உவமங்களுட் சிலவற்றை

யும், சொல்லதிகாரத்தினுள்ளும், செய்யு ளியலுள் ளும் சொல்லுகின்றன சில பொருள்களையும் வாங்கிக் கொண்டு மற்றவை செய்யுட் கண்ணே அணியா மென இக்காலத் தாசிரியர் நூல் செய்தாருமுளர். அவை ஒரு தலையாகச் செய்யுட்கு அணி யென்று இலக்கணங் கூறப்படா. என்னை? வல்லார் செய் யின் அணியாகியும், அல்லார் செய்யின் அணியன் றாகியும் வரும் தாங்காட்டிய இலக்கணத்திற் சிதை யா வழியு மென்பது.' எனவும், 'அல்லதூஉம் பொருளதிகாரத்துட் பொருட் பகுதிக ளெல்லாம் செய்யுட்கு அணியாகலான் அவையெல்லாந் தொ குத்து அணி யெனக் கூறாது வேறு சிலவற்றை வரைந்து அணி யெனக் கூறுதல் பயமில் கூற்றா மென்பது.' எனவும் பேராசிரியர் விளக்கிய வாற் றானறிக. பொருள்களைக் கிடந்தவாறு கூறியும், உவமித்துக் கூறியும், மெய்ப்பாடும், பயனு முண்டா கச் செய்யுளியற்ற வேண்டில், புலவராயினோர் பல் வகைப் பொருள்களையும் கண்டு கண்டு அவற்றின் றன்மைகளை நுனித்தறிந்து உளத்தி லமைத்துக் கொள்ள வேண்டும். பல்திணை மக்களின் பழக்க வழக்கங்களையும், உணர்ச்சி வேறுபாடுகளையும் நன் கறிந்தாராதல் வேண்டும். மனவியற்கைத் தன்மை களை மிக அறிந்திருத்தல் வேண்டும். சுருங்க வுரைக் கின் உலகமே அவர்க்குக் கல்லூரியாகவும், உலகி னுள்ள எப் பொருளும் அவர் கற்கும் பாடமாகவும் அமைந்திருத்தல் வேண்டும். இங்ஙனம் உலக வியல் பை முற்ற வுணர்ந்த புலவர்களியற்றும் நூல்களே, எத்தேயத்தினும் எம் மொழியினும் யாவரானும்

போற்றப் பட்டு வருகின்றன. நம் புலவர் பெரு மானாகிய கபிலர் புல், மரம் முதலாக வுள்ள அனைத் துயிர்களின் பண்புகளையும், உலகத் தோற்றங்களை யும் ஆராய்ந்தறிந்த அறிவு முதிர்ச்சி யுடையோ ராவர்.

இப்பாட்டிலே செங்காந்தட்பூ முதல் மலையெ ருக்கம்பூ இறுதியாகத் தொண்ணூற்றென்பது வ கைப் பூக்களை ஒருசேரக் கூறியிருப்பதும், அவற் றுள் பலவற்றை, 'வள்ளிதழொண்செங்காந்தள், எரி புரை யெறுழம், வான்பூங் குடசம், மணிப்பூங் கரு விளை, பல்லிணர்க்குரவம், பல்லிணர்க்காயா, தேங்க மழ் பாதிரி, கொங்குமுதிர் நறு வழை, மணிக்குலைக் கட்கமழ் நெய்தல், தூங்கிணர்க் கொன்றை, சுடர்ப் பூந் தோன்றி' என அவ்வவற்றின் சிறப் பியல்பு தோன்று மாறு ஏற்ற அடைகளுடன் கூறியிருப் பதும், மரம், செடி, கொடி வகைகளில் இவ்வாசிரியர்க் குள்ள பரந்த ஆராய்ச்சியையும், இவரது நினைவின் மாட்சியையும் நன்கு புலப்படுத்துகின்றன.

இன்னும் இப்பாட்டிலே உலகியற் பொருள்களைக் கூறுமிடத்து, நெல்லினைக் கொண்ட நெடியமூங்கி லைத் தின்னற்கு மேல் நோக்கி நின்று வருந்தின யா னை, அவ்வருத்தந் தீரும்படி தனது கையைக் கொம் பின் மேலேற்றித், தொங்க விட்டுக் கொண்டிருத் தலும்; ஞாயிற்றின் கதிர் காயும் வெம்மை மிக்க பொழுதில், வானிலே பறக்கும் பறவைகள், தாம் விரும்பும் சேக்கைகளிற் செல்லுதலும்; தினைத்தா ளால் வேய்ந்த குறுங்காற் குடிசையில், மனைவியெ டுத்துக் கொடுப்ப, மதுவையுண்டு களித்துப், புனங்

காப்போன் காவற்றொழிலை மறந்திருத்தலும்; யானை புனத்தைத்தின்று அழித்து விடுகையைக் கண்ட கானவர், சினம் மிக்கு, வில்லை நாணேற்றி அம்பெய்தும், தட்டையைப் புடைத்தும், காடெல்லாம் கல்லெனும் ஓசையுண்டாக, வாயை மடித்து வீளையெழுப்பி, அதனை யோட்டுதலும்; அங்ஙனம் ஓட்டப்பட்டு, மதச் செருக்குடன் புறப்பட்ட வேழம், மரங்களை முறித்து, இடி யேறு போல் முழங்கிக், கையைச் சுருட்டி நிலத்தே யெறிந்து கடுகி வருதலும்; தலைமகன் தலைவியது ஒளிபொருந்திய நுதலைத் துடைத்துத், தோழியின் முகம் நோக்கிச் சிரித்தலும்; அவன் தலைவியை வரைந்து கொண்டு, இல்லறம் நிகழ்த்துதல் மெய்யென்று தெளிவித்தற்பொருட்டு, மலையுச்சியில் உறைகின்ற முருகக்கடவுளை வாழ்த்தி வணங்கி, வஞ்சினங்கூறி, இனிமை மிக்க அருவி நீர் குடித்தலும்; பிறவும், இயற்கை வழாமல், ஓவியம் வரைந்து, காட்டினாற்போல, அழகு பெறக் கூறியிருப்பதிலிருந்து, புள், விலங்குகளின் தன்மைகளையும், மக்களின் பழக்க வழக்கங்களையும், மனவியற்கையையும் எவ்வளவு நன்றாக இவர் அறிந்துள்ளா ரென்பது புலனாகின்றது.

மற்றும், இதில் தலைவன் தன்மை கூறுங்கால், 'நறிய மயிர்ச்சந்தனம் பூசி, அந்த ஈரம் புலரும் படி, விரலா லலைத்துப், பிணிப்பு விடுத்து, அகிற் புகையூட்டுகையினாலே, வண்டுகள் மொய்க்கும்படி அகிலின் நெய் கலக்கப்பெற்று, நீலமணிபோலும் நிறத்தினை யுடைத்தாய்க், கடைகுழன்று வளர்ந்திருக்கும், எண்ணெய் பூசப்பெற்ற குடுமியிலே பல்வகை மலர்

களாலும் தொடுக்கப்பெற்ற தொடையலையும், தாழைமடலிற் கட்டிய கண்ணியையும், முருகனென்று அச்ச முறும்படி சூடி, அழகிய பிச்சி மலராற்றொடுத்த ஒரு காழாகிய மாலையைச் சுற்றி, அசோகினது தளிரைத், திரண்ட தோளிலே வீழ்ந் தலைக்கும்படி, ஒருகாதிலே செருகி, வலியமைந்து, அகன்று, உயர்ந்து, சாந்து பூசப்பெற்று, உத்தம விலக்கண மாகிய மூன்று வரிகளையுடைத்தாய் விளங்கும் மார்பிலே, தொன்று பட்டுவரும் பேரணிகலங்களோடே, நறிய மாலைகளை யணிந்து, உடுத்தவுடை துளக்கமற நுண்ணிய தொழில்களையுடைய கச்சினை இறுகக் கட்டித், தடக்கையில் வில்லை யெடுத்து, அம்புகளைத் தெரிந்து பிடித்துப், பொன்னாற் செய்யப்பட்ட நல்ல வீரக் கழல் பெயரும் பொழுதெல்லாம் திருந்திய அடியிலே ஏற்றிழிவு செய்யும்படியாகப், பகைப் புலத்தைப் பாழாக்கும் வலியமைந்த வேலினையுடைய வீரரைப் போலே, சினத்தாற் செருக்குற்றுத் தம் மேல் ஒன்று நெருங்குந் தோறும் வெகுளும், மூங்கில் முளைபோலும் பற்களையும், பெரிய உகிரையு முடைய நாய்கள் இமையாத கண்களையுடையவாய் வளைத்துக் கொண்டு போதர, ஆனேறு போல் வந்தான்.' என்றும் ;

மாலைப் பொழுதின் றன்மை கூறுங்கால், 'ஞாயிறு மலையைச் சேர்ந்து மறைதலால், மான்கணம் மரத்தடிகளிலே திரள, ஆன் கூட்டம் கன்றுகளை யழைக்கும் குரலையுடையவாய் மன்றுகள் நிறையப் புகுதலைச்செய்ய, வளைந்த வாயையுடைய அன்றில் பனையின் உண் மடலிலே யிருந்து பேட்டை யழைக்க,

அரவு தான் மேய்தல் காரணமாக மணியினை யுமிழ, ஆயர்கள் பலவிடங்களிலும் நின்று ஆம்பலென்னும் பண்ணினையுடைய குழலிடத்து இனிய இசையை யெழுப்ப, ஆம்பலின் அழகிய இதழ்கள் தளையவிழ, அந்தணர் மாலைப் பொழுதிற் செய்யும் கடன்களை நிகழ்த்த, வளமிக்க மனைகளில் அழகிய தொடியினையுடைய மகளிர், விளக்கினைக் கொளுத்தி வைத்துத் தாம் செய்யுங் கடன்களைச் செய்ய, வனத்தின் கண் வாழ்கின்றவர்கள், வானை யளாவிய பரணின்மேலே தீக்கடை கோலால் நெருப்பை யுண்டாக்கி யெரிப்ப, முகில் மலையிடத்தைச் சூழ்ந்து கறுப்பக், காட்டிலுள்ள விலங்குகளெல்லாம் கல்லென்னும் ஓசையுடைய வாய் ஒன்றற்கொன்று மாறிக் கூப்பிடப், பறவைகள் குடம்பையிலிருந்து ஆரவாரிக்க மாலை துன்னிற்று.' என்றும்; அவ்வவற்றின் றன்மையை ஆராய்ந்து இயற்கை நெறி வழுவாது கூறியிருப்பது மிக மகிழ்ச்சி விளைப்பதாகின்றது.

இனி, இப்பாட்டின்கண் முப்பத்தைந்து உவமைகள் ஆண்டாண்டுக் கூறப்படுகின்றன. அவற்றுள், கருத்தொற்றுமையுள்ள ஐந்தனை விடுத்து, ஏனைய முப்பது உவமைகளை ஈண்டுத் தருகின்றாம்.

செவிலியின் முனிவுக்கும், தலைவியின் வருத்தத்திற்கும் அஞ்சும் தோழியின் அச்சத்திற்கு, இகல் புரியும் இருபெரு வேந்தர்க் கிடை நின்று சந்து செய்விக்கும் சான்றோரது அச்சமும்; துய்யை யுடைய, தலை வளைந்து முற்றின, பெரிய தினைக் கதிருக்கு, யானையது கொம்பின்மே லேற்றித் தொங்க விட்டிருக்கும் துதிக்கையும்; கார்காலத்து இடியின் முழக்

கத்திற்கு, முரசின் அதிர்ச்சியும்; மின்னலுக்கு, முருகன் அசுரரைக் கொல்ல எடுத்த வேற்படையும்; மலை யுச்சியினின்றும் விழுகின்ற அருவிக்கு, விளங்குகின்ற வெண் டுகிலும்; மலைப் பாறையிற் சுனையின் நீருக்குப், பளிங்கைக் கரைத்துச் சொரிந்து வைத்த நீரும்; சிறிய முதுகிலே தாழ்ந்து கிடக்கும் பின்னிய கூந்தலுக்குப், பொன்னிலே யழுத்தின நீல மணியும்; எறுழம் பூவின் நிறத்திற்கு, நெருப்பின் நிறமும்; செந்நிறப் பூக்களைப் பரப்பி வைத்தற்கு, அரக்கினை விரித்து வைத்தலும்; அசோகினது தளிரின் நிறத்திற்கு, நெருப்பின் நிறமும்; வேட்டை நாயின் சினத்திற்கு, வேல் வீரரின் சினமும்; நாயின் பல்லுக்கு, மூங்கில் முளையும்; தலைவியைக் கண்டு விரும்பி யடையும் தலைவனுக்கு, வேறு புலத்துள்ள புதிய ஆவைக் கண்டு அணைய வரும் விடையும்; இம்மென இமிரும் வண்டி னோசைக்கு, நட்டபாகம் முற்றப் பெற்ற பாலை யாழை வாசிக்க வல்லவன் தன் கையாலே வாசித்த நரம்பி னோசையும்; தலைமகன் தழை பரந்த பூங் கொம்பை முறித்து வேட்டை நாய்களை யடித்தலுக்கு, மதயானை பூங் கொம்பை முறித்து ஓச்சி நிற்றலும்; குடிசையிலிருந்து புனங் காப்போனது மனைவியின் நோக்கிற்கு, மான் பிணையும்; கானவரது வில்லுக்குச், சினம் மிக்க பாம்பும்; மதயானையின் பிளிறுதலுக்கு, உருமேற்றின் முழக்கமும்; மதக் களிற்றின் வருகைக்குக், கூற்றுவனது வருகையும்; நடுக்க முற்ற மகளிர்க்குத், தெய்வ மேறின மயிலும்; மகளிர் கைகோத் திருத்தற்குக், கடம்பினது அடி மரத்தை நெருங்கச் சூழ்ந்த மாலையும்;

மகளிர் அருவியிலே கால் தளர்ந்து செல்லுதலுக்கு, இடி கரையி னின்ற வாழை சரிந்து செல்லுதலும்; மலைச் சாரலில் தேறலை அயின்ற மயில் தளர்வதற்கு, ஆடு மகள் கழாய்க் கயிற்றிலே ஏறி ஆடுகின்ற தாளத்தினால் ஆற்றாது தளருதலும்; செங்காந்தட் பூக்கள் பரந்து கிடக்கின்ற நிலத்திற்கு, அழகிய பல கச்சுப் பரந்த நிலமும்; மனையின்கண் வருவோர்க் கெல்லாம் சோறிடுதற்கு, விழாக் கொண்டாடுத லும்; வளைந்த வாயை யுடைய அன்றிலின் ஓசைக்கு, ஊது கொம்பின் ஓசையும்; பறவைகளி னொலியோடு மாலைப் பொழுது துன்னுதற்குச், சினம் மிக்க வேந் தன் அமரின்கட் செல்லுதலும்; தலைவியின் மேனிக் கு, இள மூங்கிலும்; இமை சோர்ந்து அழகு கெட் டுக் கலங்கும் தலைவியின் கண்களுக்குப், பெருந்துளி யெறிந்து மழை பெய்யப் பட்ட மலரும்; இரவிலே தலைவன் வரும் வழியின் ஏதம் நினைந்து கலக்க முறும் தலைவிக்கு, வலையிற் பட்ட மஞ்ஞையும்; உவ மையாகக் கூறப்பட்டுள்ளன. சிறப்பு முதலியன நிலைக்களமாக, வினை, பயன், மெய், உரு என்பன பற் றித் தோன்றும் இவ் வுவமங்களெல்லாம், 'உவமை யும் பொருளும் ஒத்தல் வேண்டும்.' எனத் தொல் காப்பியனார் கட்டளை யிட்ட வாறே அமைந்து, பாட் டினை அழகு செய்து, இன்பம் விளைப்பனவாதல் காண்க.

இனி, வெளிப்படையாகக் கூறும் இவ் வுவமம் போலன்றி, நுண்ணுணர்வான் ஆராய்ந்து காணத் தக்க உள்ளுறை யுவமம் என்ப தொன்றுண்டு. இவ் வுள்ளுறை யுவமந்தான் பண்டைச் சான்றோர் செய்

யுட்களில் மலிந்து காணப்படுகின்றது. அகப் பொருட் செய்திகளில் வெளிப்படக் கூறுதல் நாகரிக மன்றெனத் தோன்று மவைகளை மறைத்துக் கூறுதற் பொருட்டு, இஃது இன்றியமையாது வேண்டப் படுவதாயிற்று. தலைவன் முதலாயினர் நாடு முதலியவைகளைப் புனைந்துரைக்கு மிடத்துக், கேட்போர் நுண்ணுணர்வான் ஆராய்ந்து, அப் புனைந்துரையை உவமையாகக் கொண்டு, வேறு பொருள் கொள்ளு மாறு கூறுவதே உள்ளுறை யுவமம் ஆகும். இங்ஙனம் கூறுவதால் நாகரிக முறை வழுவாமையும், இரு பொருளை ஒரு சொல்லிற் கூறலாகிய சுருங்கக் கூறுதலும், கேட்போர் அறிவு நுணுகி நின்றுணர்ந்து இன்புறுதலும் ஆகிய பல பயன் விளைகின்றன. தமிழின் ஒப்புயர் வற்ற மாட்சிக்கு இவ் வுள்ளுறை யுவமம் ஒன்று தானே சான்றாத லமையும். இப் பாட்டின்கண், தலைவற்கும் தலைவிக்கும் நிகழ்ந்த கூட்டத்தைச் செவிலிக்கு அறிவிக்கும் தோழியானவள், தலைமகன் எவ்வாற்றானும் தம்மின் மிக்கான் என்பதும், அவனுறவு தமக்கு எய்துதற் கரியதென்பதும், அத்துணைப் பெருமை யுடையான் தமக்கு எளியனாய் வந்து தண்ணளி செய்தது தமது நல் வினைப் பயனே யென்பதும் உணர்த்தக் கருதினாள். இவற்றை வெளிப்படக் கூறின் இவள் தலைவியை அவமதித்தா ளென்றும், இவளானேயே இச்செயல் நிகழ்ந்துள்ளதென்றும் செவிலிக்குச் சினமுண்டாகும். கூறுவிடின் கூட்ட முண்மை யுணர்ந்த செவிலிக்குத் தன் மகள் யாரோ இழிதகவுடையா னொருவனுக்கு உரிய ளாயினளோ யென்று கவற்சி மிகும்.

இந் நிலைமையில் யாது செய்வாள் தோழி? தம்மை யாற்று நீர் இழுத்துச் செல்லும் பொழுது, கரை யேற்றினவன் இத்தன்மையான நாட்டை யுடையன் என்று நாட்டினைச் சிறப்பித்துக் கூறுவாளாய்த், தலைவன் பெருமை முதலாயின உய்த்துணருமாறு உள்ளுறையாகக் கூறிவிட்டாள். 'பழுத்த மிளகு சிந்திக் கிடக்கின்ற பாறையிடத்து, நீண்ட சுனையிலே, நெகிழ்ந்து உதிர்ந்த மாம்பழத்தாலும் பலாப் பழத் தாலும் விளைந்த தேறல் இறாலிலிருந்து ஈக்களைத் தள்ளி யுகுத்த தேனுலே வந்து திரள, அத் தேறலைத் தனக்கு எளிய நீராகக் கருதி யுண்ட மயிலானது, விழாச் செய் களத்தில் ஆடல் மகள் கழாய்க் கயிற் றில் ஏறி யாடுகின்ற தாளத்தினால் தான் ஆற்றாது தளருமாறு போலத் தளருஞ் சாரலை யுடையதும், வானை யளாவிய உச்சியிலே கிளைத்த செங்காந்த ளின் பூக்கள், வரை யரமகளிர் பரந்து விளையாடுத லிற் றந் நலம் சிறிது கெட்டுக், கீழே வந்து பரந்து, நல்ல பல கச்சு விரித்த களம்போலே, அழகு பெற்ற இடத்தினை யுடையதுமாகிய மலை பொருந்தின நாடன்' என்பது தோழி கூறியது. இதன் கட் கூறிய மிளகு, மா, பலா, தேனிறால், மயில், செங் காந்தட்பூ என்னும் குறிஞ்சிக் கருப் பொருள்களால் மலைவளம் வெளிப்படை. இதனை உள்ளுறை யுவம மாகக் கொள்ளுமிடத்து, 'மிளகு உக்க பாறை அந் நிலத்து மாக்களுறைகின்ற ஊராகவும், நெடுஞ்சுனை தலைவன் குடியாகவும், மாம்பழத்தாலும் பலாப் பழத்தாலும் விளைந்த தேறல் தந்தையாலும் தாயா லும் உளனாகிய தலைவனாகவும், இறாற் றேன் இவ

ரைக் கூட்டின பால்வரை தெய்வமாகவும், தேறலை யுண்ட மயில் உயர்ந்த தலைவனைத் தன் குலத்திற்கு ஒத்தாளைக் கருதி நுகர்ந்த தலைவியாகவும், அத் தேறலிற் பிறந்த களிப்புக் கள வொழுக்கத்தாற் பிறந்த பேரின்பமாகவும், மயில் ஆடவாற்றாத் தன்மை வருந்திக் குறைந்த தன்மையாகவும்' கொள்ளப் படும். இன்னும், 'உயர்ந்த நிலத்தே நின்ற மணக் கின்ற காந்தள், வரையர மகளிராற் கீழ் நிலத்தே பரந்து, அவ்விடத்தைக் கச்சு விரித்தாற் போல அழகு பெறுத்து மென்றதனால், நம்மி லுயர்ச்சியை யுடைய தலைவன், நமது நல் வினையாற் றனது பெரு மைகள் தானு மொழிந்து இவ்விடத்தே வந்து கூடி, நமக்கும் உயர்ச்சி யுள தாக்கி, நம்மை அழகு பெறுத்துகின்றான்.' என்றமை கொள்ளப்படும். உச் சிமேற் புலவர்கொள் நச்சினார்க்கினியர் விரித்தபடி இங்கு உள்ளுறை யுவமம் காட்டப்பட்ட தென்க.

இனி, இப்பாட்டிலிருந்து, வேறுபட்ட பல உரு வினையுடைய கடவுளரை மலர்தூவியும், நறும்புகை யெடுத்தும், சந்தனம் முதலியவை கொடுத்தும் வழி படுதலும், முத்து, மணி, பொன் முதலிய வற்றால் சிறந்த அணிகலன்கள் செய்தலும், அரசர் தேர் உடையராதலும், இரண்டு வேந்தர் அமர் புரியும் பொழுது அறிவுடையோர் இடைநின்று சந்து செய் தலும், பெண்கொடுக்கும் முன் குடியும், குணமும், சுற்றத்துதவியும் முதலாயவற்றை ஒப்பித்துப் பார்த் து எண்ணித்துணிய வேண்டுதலும், முருகக்கடவுள் முரசினையும், பூணினையும், எஃகினையும் உடையராத லும், அருவியின்றிரை போலும் வெண்மையும், மென்

மையும் உடைய துகில்கள் செய்யப் படுதலும், வீர ராயினார் வில், அம்பு, வேல் என்பனவற்றாற் போர் புரிதலும், நட்டராகம் முதலிய பண்களை யாழிலே வாசித்தலும், ஊர்களில் திருவிழா நடக்குமிடத்து விறலியர் கழாய்க் கூத்து ஆடுதலும், சோற்று விழாக் கொண்டாடப் படுதலும், கடவுளைச் சான்று வைத்து வஞ்சினங் கூறுதலும், சூளுறுதற்கு அடையாள மாகத் தண்ணீர் குடித்தலும், மாலைப் பொழுதிலே மகளிர் விளக்கேற்றி வைத்து இல்லுறை தெய்வத்தை வணங்குதலும், அந்தணர் சந்தி செய்தலும், கோவலர் குழல் வாசித்தலும், சுற்றத்தார் பெண்தர நாடிய நன்மணஞ் செய்தலும், பிறவும் அக்காலச் செய்திகளாக அறியப்படுகின்றன.

இன்னும், இப்பாட்டில், தெய்வப் பகுதியாகக், கடவுளர், தேவர், வரையர மகளிர் என்போரும்; மக்கட் பகுதியாக, முனிவர், அந்தணர், சான்றோர், அரசர், கானவர், கோவலர், ஊர்காவலர், விறலியர் என்போரும்; விலங்கின் பகுதியில், யானை, புலி, நாய், ஆன், விடை, பிணை, மான், யாளி, கரடி, ஆமானேறு, முதலை என்பனவும்; புள்ளின் பகுதியில், கிளி, மயில், அன்றில், வண்டு, சுரும்பு என்பனவும்; பறவைத் தொகுதியும்; ஓரறிவினவாகிய மரம் முதலிய வற்றின் பகுதியில், ஒருவழித் தொகுத்துக் கூறப்பட்ட தொண்ணூற்றொன்பதுடன், கடம்பு, பலா, பனை, மிளகு, தினை என்பனவும்; கூறப்பட்டுள்ளன. மடங்கல், சூர், பிசாசு, பூதங்கள் என்பனவும் கூறப்பட்டுள. நிலம், நீர், தீ, வளி, வான் என்பனவும்; மலை, கடல், முகில், மின், இடி என்பனவும்; ஞாயிறு, திங்கள்,

ஞாயிற்றின் மண்டிலம், ஞாயிற்றின் ஏழ் பரி, ஞாயிறு மறையும் மலை என்பனவும்; முத்து, மணி, பொன், பாம்பின் மணி, பளிங்கு, அரக்கு என்பனவும்; புவியின் வேறுய உலகமும் கூறப்பட்டுள்ளன. மக்களின் உடை, அணி, உணவு முதலிய வற்றுள், இப்பாட்டினுல் அறியப்படுவன முன் எழுதியவற்றுட் காண்க.

கிளி யோட்டுங் கருவிகள், தழல், தட்டை, குளிர் முதலியன வென்றும், முதலை, இடங்கர், கராம் என்பன இனவேறுபா டென்றும் அறியப்படுகின்றன.

'இருவேம் ஆய்ந்த மன்றல்' என்பதற்குத் 'தலைவனும் யானும், பெருமையும், உரனும், அச்சமும், நாணும் நூனுகிய நிலையாற் பிறந்த கந்தருவ மணம்' என்றும், 'அகலிருவானம்' என்பதற்கு 'ஏனைப் பூதங்கள் விரிதற்குக் காரணமான கரிய ஆகாயம்' என்றும் நச்சினர்க்கினியர் கூறியிருக்கும்பொருள் நினைக்கத்தக்கன. எளிதிற் பொருள்படும் தொடர்களுக்கு இங்ஙனம் ஒரோவழி அரியபொருள் கூறுவது இவர்க்கியல்பு. இவர் சொற்களை மாட்டேற்றுகக் கொண்டு பொருள் செய்திருக்கு மிடங்களில், கிடந்தவாறே வைத்துப் பொருள் செய்தற் கேற்றவைகளை ஆராய்ந்தறிக.

இப்பாட்டில் ஏறக்குறைய ஆயிரத்து நானூற்று நாற்பது சொற்களிருக்கின்றன. இவற்றுள் அமயம், பாயம, சேமம், பிரசம், சமம் என்பன வட சொற்கள். முரசு, அந்தி, முத்து, மணி என்பன இருமொழிக்கும் பொதுச் சொற்கள். ஞமலி, சொன்றி,

பாணி என்பன திசைச் சொற்கள். இவ்வாற்றால் நூற்றுக்கு ஒரு சொல் விழுக்காடும் இதில் வேற்றுச் சொல் விரவ வில்லை யென்பது உணரத்தக்கது.

இனி, இப்பாட்டில் முப்பத்திரண்டு அளபெடைச்சொற்களும், ஆறு 'செய்பு' என்னும் வாய்பாட்டுச் சொற்களும் வந்துள்ளன. இக்காலத்தே சிலர் அளபெடையை இகழ்ந்து கூறுவர். வேறு சிலர் எவ்விடத்தும் அளபெடையாக எழுதுவர். இப்பாட்டினும், இது போன்ற ஏனைச் சங்கச் செய்யுளினும், அளபெடை வந்துள்ள இடங்களை அறிவுடையோர் நுணுகியுணரின், அவ்வவ்விடத்து அளபெடையிருத்தலின் இன்றியமையாமை புலப்படும். இங்கே சான்றாக ஒன்று காட்டுதும். 'தும்பை துழாஅய் சுடர்ப்பூந் தோன்றி' என்பது இப்பாட்டிலுள்ள ஓர் அடி. இதிலுள்ள அளபெடையை எடுத்துவிடின், 'துழாய்' என்பது ஒரு சீராதலில்லை. இது சீராதற் பொருட்டு வேறு சொல்லைச் சேர்த்திடில் மற்றொன்று விரித்தலும், ஓசை யின்மையும் முதலிய குற்றங்கள் உண்டாதல் கூடும். இவ்வோர் அளபெடையால் சீர் செம்மையாதலும், ஓசையுடைத்தாதலும், மோனை பெறுதலும், முன் பின் அடிகட்கு ஏற்றவாறு அமைதலும் ஆகிய பல நலன் விளைந்தன. சான்றோர் செய்யுட்களிலுள்ள இன்னோரன்ன நுணுக்கங்களைத் தமிழ்த் துறையில் இறங்கி யறியாதார் எங்ஙனம் காணவல்லாரவர்?

இப் பாட்டில், விரிந்துள்ள வேற்றுமை யுருபு ஐம்பதுக்கு மேலில்லை. அவற்றுள்ளும் பல ஒப்புப் பொருளில் வரும் இன் னுருபாகும். பாட்டி

ளுள்ள சொற்க ளெல்லாம் பெரும் பாலும் இரண்டு மூன்று நான்கு எழுத்துக்களா லானவையே. இவ் வாற்றால் இஃது எவ்வளவு சொற் சுருக்கமும், திட்பமும் உடைய தென்பது நன்கு விளங்கும். இப் பாட்டின் பொருளை இப்பொழுது உணர்த்துதற்கு மூன்று மடங்கிற்கு மேலான எழுத்துக்களும், சொற்களும் வேண்டியுள்ளன வென்க.

இனி, இக் குறிஞ்சிப் பாட்டின்கண் பிறதிணைகட்குரிய பொழுதும், பூ முதலியனவும் ஓரோவழி வந்திருத்தற்கு விதி,

'உரிப் பொரு ளல்லன மயங்கவும் பெறுமே.'
'எந்நில மருங்கிற் பூவும் புள்ளும்
அந்நிலம் பொழுதொடு வாரா வாயினும்
வந்த நிலத்தின் பயத்த வாகும்.'

என்னும் அகத்திணை யியற் சூத்திரங்களாகும். 'எந்நில மருங்கில்' என்னும் சூத்திர வுரைக்கண், நச்சினார்க்கினியரும், 'கபிலர் பாடிய பெருங் குறிஞ்சியில் வரை யின்றிப் பூ மயங்கியவாறு காண்க.' என்றார். அதனால் பெருங் குறிஞ்சி யெனவும் இப் பாட்டுக்கு ஓர் பெயருண் டென்பது பெற்றாம். குறிஞ்சித் திணைப் பாட்டுக்களில் இதுவே அளவாற் பெரிதாயிருத்தலின், பெருங் குறிஞ்சி யெனப்பட்டது போலும்? மற்றும் இப் பாட்டின் அருமை, பெருமைகளை அறிவுடையோர் ஆராய்ந்து மகிழ்வாராக. கபிலர் பாடிய ஏனைச் செய்யுட்களையும் இங்ஙனம் ஆராயின், மிக விரியுமாகலின், இனி அவற்றின் அமைதிகளைச் சுருங்கவே கூறுவா மென்க.

## பூவின் பகுதி.

" வள்ளித

ழொண்செங் காந்த ளாம்ப லனிச்சம்
தண்கயக் குவளை குறிஞ்சி வெட்சி
செங்கொடு வேரி தேமா மணிச்சிகை
உரிதுநா றவிழ்தொத் துந்தூழ் கூவிளம்
எரிபுரை யெறுழஞ் சுள்ளி கூவிரம்
வடவனம் வாகை வான்பூங் குடசம்
எருவை செருவிளை மணிப்பூங் கருவிளை
பயினி வானி பல்லிணர்க் குரவம்
பசும்பிடி வகுளம் பல்லிணர்க் காயா
விரிமல ராவிரை வேரல் சூரல்
குரீஇப் பூளை குறுநறுங் கண்ணி
குருகிலை மருதம் விரிபூங் கோங்கம்
போங்கந் திலகந் தேங்கமழ் பாதிரி
செருந்தி யதிரல் பெருந்தண் சண்பகம்
கரந்தை குளவி கடிகமழ் கலிமாத்
தில்லை பாலை கல்லிவர் முல்லை
குல்லை பிடவஞ் சிறுமா ரோடம்
வாழை வள்ளி நீணறு நெய்தல்
தாழை தளவம் முட்டாட் டாமரை
ஞாழல் மௌவல் நறுந்தண் கோகுடி
சேடல் செம்மல் சிறுசெங் குரலி
கோடல் கைதை கொங்குமுதிர் நறுவழை
காஞ்சி மணிக்குலைக் கட்கமழ் நெய்தல்
பாங்கர் மராஅம் பல்பூந் தணக்கம்
ஈங்கை யிலவந் தூங்கிணர்க் கொன்றை
அடம்பம ராத்தி நெடுங்கொடி யவரை

பகன்றை பலாசம் பல்பூம் பிண்டி
வஞ்சி பித்திகம் சிந்து வாரம்
தும்பை துழாஅய் சுடர்ப்பூந் தோன்றி
நந்தி நறவம் நறும்புன் னாகம்
பாரம் பீரம் பைங்குருக் கத்தி
ஆரங் காழ்வை கடியிரும் புன்னை
நரந்தம் நாகம் நள்ளிருள் நாறி
மாயிருங் குருந்தும் வேங்கையும் பிறவும்
அரக்குவிரித் தன்ன பரேரம் புழகுடன்'

---

உரை யிறுதியில் எழுதப்பட்டுள்ள
இரு வெண்பாக்களில் ஒன்று.

'நின்குற்ற மில்லை நிரைதொடியும் பண்புடைய
ளென்குற்றம் யானு முணர்கலேன்—பொன்குற்
றருவி கொழிக்கு மணிமலை நாடன்
றெரியுங்காற் றீய திலன்.'



# ஐந்தாம் அதிகாரம்.

## குறிஞ்சிக்கலி ஆராய்ச்சி.

குறிஞ்சிக்கலி என்பது சங்கத்துச் சான்றோராலே செய்யப் பட்டு அக்காலத்தே தொகுக்கப்பட்டன வாகிய † எட்டுத் தொகையு ளொன்றாகிய கலித் தொகையில் இரண்டாவது பகுதியாகும். கலித் தொகை கடவுள் வாழ்த்துச் செய்யுள் ஒன்றும், பாலை முப்பத்தைந்தும், குறிஞ்சி இருபத்தொன் பதும், மருதம் முப்பத்தைந்தும், முல்லை பதினே ழும், நெய்தல்முப்பத்து மூன்றும் ஆக நூற்றைம் பது செய்யுட்களையுடையது. பாலை, குறிஞ்சி, மரு தம், முல்லை, நெய்தல் என இம்முறையே கோக்கப் பட்டுளது. ஐந்திணைகளைப் பல்வகையானும் முறைப் படுத்தல் தொல்காப்பியனார் கருத்தென உணர்க. பாலைக்கலி முதலிய ஐந்து பகுதியும் முறையே பெருங் கடுங்கோன், கபிலர், மருதனிளநாகனார், சோ

† எட்டுத் தொகையாவன :—நற்றிணை, குறுந்தொகை, ஐங் குறுநூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல், கலித்தொகை. அக நானூறு, புறநானூறு என்பன. இதனை,

'நற்றிணை நல்ல குறுந்தொகை யைங்குறுநூ
றொத்த பதிற்றுப்பத் தோங்கு பரிபாடல்
கற்றறிந்தார் சொல்லுங் கலியோ டகம் புறமென்
றித்திறத்த வெட்டுத் தொகை.'

என்னும் வெண்பாவா லுணர்க.

முன் நல்லுத்திரன், நல்லந்துவனர் என்பவர்களாற் பாடப்பட்டனவென்று,

> 'பெருங்கடுங்கோன் பாலை குறிஞ்சி கபிலன்
> மருதனிள நாகன் மருதம்—அருஞ்சோழன்
> நல்லுத்திரன்முல்லை நல்லந்துவ னெய்தல்
> கல்விவலார் கண்ட கலி.'

என்னும் வெண்பாவாற் றெரிகின்றது. 'புரிவுண்ட' என்னும் நெய்தற்கலிச் செய்யுளுரையில், 'சொல்லெச்சமும் குறிப்பெச்சமுமாகத் தம் பேரறிவு தோன்ற ஆசிரியர் நல்லந்துவனர் செய்யுட் செய்தார்.' என்றும், கடவுள் வாழ்த்தின் உரையில், 'ஆதலான் ஈண்டுப் பாலைத்திணையையும் திணையாக ஆசிரியர் நல்லந்துவனர் கோத்தா ரென்று கூறுக.' என்றும் நச்சினார்க்கினியர் கூறியிருத்தலால், நெய்தற் கலியை இயற்றினாரும், பாலைக்கலி முதலிய வற்றைக் கோத்தாரும் நல்லந்துவன ரென்பது அவர் கருத்தாதல் பெறப்படும். இத்தொகையிலுள்ள ஐந்து பகுதியும் தனித்தனி ஒவ்வொருவராற் பாடப் பட்டிருத்தலின், ஐம் பகுதியையும் சேர்த்து ஓர் தொகை யாக்கினாரையே தொகுத்தாரது செய்கையாதல் வேண்டும். ஐங்குறு நூறும், பதிற்றுப் பத்தும் தொகுத்தாருடைய செய்கையும் இத்தன்மையே யாகும். இதிலுள்ள செய்யுட்களெல்லாம் கலிப்பா ஆகலின், இத்தொகை பாட்டாற் றொகுக்கப்பட்டதென்க. இது கலித்தொகை யென்றும், கலி யென்றும் வழங்கும்.

> நாடக வழக்கினு முலகியல் வழக்கினும்
> பாடல் சான்ற புலனெறி வழக்கங்
> *கலியே பரிபாட் டாயிரு பாங்கினும்
> உரியதாகு மென் மனார் புலவர்.'

* அகத்திணையியல், 53.

என்று ஆசிரியர் தொல்காப்பியனார் கூறுதலின், அகத்திணைக்குச் சிறப்புரிமையுடையது கலிப் பாவாம் என்க. இத் தொகையிலுள்ள பாக்களின் ஓசையின்பமும், பிற அருமை, பெருமைகளும் கற்று வல்லோர் யாவரும் ஒருங்கே பாராட்டுந் தகையன.

இதிலுள்ள குறிஞ்சிக்கலி கபிலர் பாடியதென்று முன்னரே கூறப்பட்டது. வேறுயாவர் தாம் பாடியிருப்பர்? இவ்வாசிரியர் குறிஞ்சியைத் தமக்கே உரிமையாக்கிக் கொண்டனரென்னின், அது புனைந்துரையாகாது. இதிலுள்ள பாக்கள் கலியின் வகையாகிய கலிவெண்பாவும், ஒத்தாழிசைக் கலியும், கொச்சகக் கலியும் முதலியவாகவுள்ளன. இப்பாக்கள் கூறும் பொருளும் பல துறைப்பட்டனவாகும். இவை அறிதற்கு அரியவாதல் பற்றியே இத்தொகைக்கு உரைகண்ட ஆசிரியர் நச்சினார்க்கினியர் இன்ன இன்ன உறுப்புக்கள் கொண்டு இவ்வாறு முடிதலின், இஃது இன்ன பாவாகு மென்றும், இஃது இன்ன துறையை யுடையதென்றும் ஒவ்வொரு பாட்டினும் விளக்கிச் செல்லுகின்றார்.

இதிலுள்ள இருபத்தொன்பது பாட்டுக்களினும், தனிச் சீர்களொழிய எழுநூற்றைம்பது அடிகள் இருக்கின்றன. இவற்றில் நூற்றிருபத்துநான்கு உவமைகள் காணப்படுகின்றன. இவையன்றி, உள்ளுறையுவமங்களும், உருவகங்களும் பல உள்ளன. மனோதத்துவ இயற்கை வழாமல் இன்பத்தின் காரணமாய ஒழுக்கத்தினைக் கூறப்புகுந்த இப்பாட்டுக்களில், அவையேயன்றி, எத்தனையோ பல நீதிகளும், இயற்கையுண்மைகளும் பொதிந்து கிடக்கின்றன.

இவையிற்றை யுணர்வார்க்கு அக்காலத்தில் தமிழ் எவ்வளவு உயரிய நிலையில் இருந்த தென்பதும், தமிழராயினார் எவ்வளவு மேம்பாடுற் றிருந்தன ரென்பதும் அங்கை நெல்லியென விளங்கா நிற்கும்.

இனி, இதிலுள்ள உவமைகளில் இன்றியமையாதவற்றை உரைநடைப் படுத்து இங்கு எழுதுகின்றாம். பூத்த வேங்கை மரத்தைப் புலியென்று கருதிக், கறுவு கொண்டு, அதனடியிற் குத்திய மதயானை, தன் கொம்பினைப் பறிக்கலாற்றாது, உளிக்கொண்டு வருந்துவது, இறைவன் இறைவியுடன் வீற்றிருந்த கயிலை மலையை யெடுக்கலுற்ற அரக்கர் கோமானாகிய இராவணன், அம்மலையின் கீழ்க்கிடந்து வருந்துவது போலும் எனவும்; தலைவனது கூட்டம் பெறாது தலைவி பொலிவழிந்திருப்பது, நீரற்ற நிலத்திற் பயிரும், பொருளில்லான் இளமையும், அறனின்றி மூப் பெய்தினான் மறுமையும் பொலி விழந்திருத்தல் போலும் எனவும்; தலைவன் கூட்டத்தால் தலைவி அழகு பெற்றிருப்பது, மழையினைப் பெற்ற நிலத்திற் பயிரும், அருளுடையா னிடத்து உண்டாகிய ஆக்கமும், செய்யுங் கூறுபாடறிந்தவன் செல்வமும் அழகு பெற்றிருத்தல் போலும் எனவும்; தினைப்புனங் காப்பார் பரணிலே யெரித்த அகிற் புகையால் ஒளி மழுங்கிய மதியம் மலைத்தலையில் பொருந்தி யிருப்பது, அம்மலையில் தேனின் இறால் இருப்பது போலும் எனவும்; தினைக் கதிர் முற்றித் தாழ்ந்திருப்பது, நற்குணமுடைய மகளிர் நாணத்தால் இறைஞ்சி யிருப்பது போலும் எனவும்; மலை யிடத்தில் காந்தளின் கொத்து உயர்ந்து அசைவது, கொடிச்சியர் முருக வேளைக்

கை குவித்துத் தொழுவது போலும் எனவும்; தலைமகன் மாதரார் நலத்தை நுகர்ந்து அவரைத் துறப்பது, வண்டு தாதினை யுண்டு பூவைத் துறப்பது போலும் எனவும்; தலைமகன் வாய்மையில் பொய் தோன்றுமாயின், அது திங்களிடத்தே நெருப்புத் தோன்றியது போலும் எனவும்; அவனது அருளிலே கொடுமை தோன்றுமாயின், அது நிழற் குளத்து நீரில் நின்ற குவளை வெந்தது போலும் எனவும்; அவனது தொடர்பில் நட்பின்மை தோன்றுமாயின், அது ஞாயிற்றினுள்ளே இருள் தோன்றியது போலும் எனவும்; தலைவனது அறத்தையே விரும்பின கோடுதலில்லாத நெஞ்சம், ஒரு கூற்றிற் சாயாத துலாக் கோல் போலும் எனவும்; கோங்கு பூத்த பக்க மலைகள், பொன்னணி யணிந்த யானைகள் போலும் எனவும்; காந்தள் முகைமேற் பொருந்தி யிருக்கும் தும்பி, மாதரார் கையி லணிந்த நீலக் கடைச் செறி போலும் எனவும்; மூங்கில் முளையின் கண்ணைப் பொதிந்திருந்து கழன்று விழும் பாளை, நுண் பொறியை யுடைய மானின் செவியைப் போலும் எனவும்; வாழைக் குலையில் தூங்கும் விளைந்த காய், புலியின் அடியைப் போலும் எனவும் உவமிக்கப்பட்டுள்ளன.

எதிரெதிர் ஓங்கிய மலையின் சாரலில் இளஞாயிற்றின் கதிரழகைக் கொண்ட மாணிக்கப் பாறையில் நிற்கும் வேங்கை மரம், தன் அழகிய கொம்புகளின் மேலே இரு மலையி னின்றும் அருவி வீழப் பெற்றிருப்பது, செந்தாமரை மலரின் அகவிதழில் வீற்றிருக்கும் திருமகள் தனது திருமுடியின் மேலே

அழகிய இரண்டு யானைகள் பூவுடன் கூடிய நீரைச் சொரியும் படியிருப்பதனையும்; * சுனையிடத்து வளர்ந்த காந்தட் குலையானது, நீருண்ணுகின்ற மணியுடன் கூடிய பாம்பினையும்; யானையும், புலியும் போர் செய்யுமிடத்தே, வேங்கையின் பூங் கொம்பென்று கருதிப், புலியைச் சூழ்ந்தும், வேங்கைச் சினை யென்று கருதி, யானையின் புகர் முகத்தை யணுகியும் திரிந்து கொண்டிருக்கின்ற வண்டு, சினைமிக்குப் போர் புரியும் இரு வேந்தரை நட்பாக்கும் திற னறிந்து சந்து செய்வாரையும்; தலைமகள் தலைவனது அளியை நச்சியிருப்பது, வானம்பாடிப்புள் வானின் துளியை நச்சி யிருப்பதையும்; தலைவன் கூறுவதனையே தலைவி கூறுவது, சார்ந்தார் கூறுவதனையே மலை எதிரொலியாகக் கூறுவதையும்; தலைவியின் கைவளை யுகுவது, தலைவனது மலைச் சாரலிற் கோடற் பூ உகுவதையும்; நீர் சொரியும் கண்கள், மழை யேற்ற நீலத்தையும்; தலைவியின் மாமை நிறம் பொன்னுரைத்த மணியின் நிறத்தையும்; வில்லின் மேலுள்ள பொறிகள் பாம்பின் பொறியையும்; தலைவன் தலைவியைப் பாராட்டுவது, மலைச் சாரலில் மான் குழவி வளர்ப்பார் செயலையும் போலுமெனக் கூறப்பட்டுள.

புலியானது தன் செவியிலே மறைந்து வந்து பாய்ந்த விடத்து, அதன் மார்பினைத் தன் கோட்டின் நுதியாற் குத்தித் திறந்து, மாறுபாடு தீர்ந்து நின்ற யானைக்கு, நூற்றுவர் தலைவனாகிய துரியோதனனைக் குறங்கினின்றும் உயிர் போக்கி நின்ற வீமசேனனை

* கஜ லக்ஷ்மியின் தோற்றம் இங்கே குறிக்கப்பட்டது.

யும்; புலியைக் குத்தி மாறுபாடு தீர்ந்து, தன் சுற்றத்திற்கு நடுவே கூடித் திரியும் யானைக்கு, மல்லரது மறத்தினைக் கெடுத்தருளிய திருமாலையும்; காந்தளின் செவ்விய முகைக்கு, பகை வேழத்தின் நுதலினைக் குத்தி விளங்கும் யானையின் கொம்பையும்; தலைவி கண் பனி கலுழ்வதற்கு, கயல்மீன் நீருமிழ்வதையும்; தலைவியது நுதலின் வேறுபட்ட நிறத்திற்குப், பீர்க்கம் பூவின் நிறத்தையும்; தலைவியின் மெல்லிய விரலை யுடைய கைக்கு, மலர்ந்த நறவம் பூவையும்; தலைவன் தலைவியின் கைகளை யெடுத்துத், தன் கண்கள் மறையும்படி வைத்து, வெய்தாக உயிர்ப்பதற்குக், கொல்லன் உலைமுக்கு வெவ்விதாக உயிர்ப்பதையும்; தலைவன் தலைவியின் மெய்ம் முழுதும் தடவி, இன்புறுத்துவதற்கு, யானை தான் விரும்பிய பிடியை அருள் செய்வதையும்; பொன் வகிர்களை யணிந்திருக்கும் ஐம்பாலாகிய கூந்தலுக்கு மின்னல்கள் இடையே பிளந்தோடும் கொண்மூவையும்; முத்துக்கள் பதித்த தொடிகளுக்கு, வளர்ந்த தாமரை வளையத்தையும்; தோழி யிடத்தே தன் குறை கூறுதற்குச் சென்ற தலைவன், பின்பு அதனைக் கைவிட்டு, அவள் முகத்தைப், பல முறையாகப் பார்த்து நிற்பதற்கு, அறிவுடையோர், செல்வம் குன்றி வறுமை யுற்றபொழுது தம் இடுக்கண் களையத் தக்க கேளிரிடஞ் சென்று, தம் குறையை அவர்க்கு வாய்விட்டுச் சொல்லத் தொடங்கிப், பின்பு சொல்ல மாட்டா திருப்பதனையும்; தலைவியின் முகத்தைச் சார்ந்து விளங்கும் கூந்தலுக்கு, மதியைப் பொருந்திய கரிய முகிலையும்; பின்னிய மயிரின்கண்

நுண்ணிய நூலாற் கட்டிய மலர்களுக்குக், கரும் பாம்பிடத்தே கிடந்து அதன் கரிய நிறத்தோடு மாறு பட்டு விளங்குங் கார்த்திகை யென்னும் மீனையும் உவமை கூறியுள்ளனர்.

பின் வரும் செய்யுட் பகுதிகளில் உள்ள உவமை களும் காண்க :—

'நில்லென நிறுத்தா னிறுத்தே வந்து
நுதலு முகனுந் தோளுங் கண்ணும்
இயலுஞ் சொல்லு நோக்குபு நினைஇ
ஐதேய்ந் தன்று பிறையு மன்று
மைதீர்ந் தன்று மதியு மன்று
வேயமன் றன்று மலையு மன்று
பூவமன் றன்று சுனையு மன்று
மெல்ல வியலு மயிலு மன்று
சொல்லத் தளருங் கிளியு மன்று
எனவாங்கு, அனையன பலபாராட்டி' (குறிஞ்சி-16)

'அகன்மதி
தீங்கதிர் விட்டது போல முகனமர்ந்
தீங்கே வருவா ளிவள்யார்கொ லாங்கேயோர்
வல்லவன் றைஇய பாவைகொல் நல்லார்
உறுப்பெலாங் கொண்டியற்றி யாள்கொல்
வெறுப்பினால்
வேண்டுருவங் கொண்டதோர் கூற்றங்கொல் ஆண்டார்
கடிதிவளைக் காவா விடுதல்'

ஆய்தூவி யனமென வணிமயிற் பெடையெனத்
தூதுணம் புறவெனத் துதைந்தநின் னெழினலம்
மாதர்கொண் மானோக்கின் மடநல்லாய் நிற்கண்டார்ப்
பேதுறூஉ மென்பதை யறிதியோ வறியாயோ'

'நுணங்கமைத் திரளென நுண்ணிழை யணையென
முழங்குநீர்ப் புணையென வமைந்தநின் றடமென்றோள்
வணங்கிறை வாலெயிற் றந்நல்லாய் நிற்கண்டார்க்
கணங்காகு மென்பதை யறிதியோ வறியாயோ'

(குறிஞ்சி-20.)

'வேயெனத் திரண்டதோள் வெறிகமழ் வணரைம்பால்
மான்வென்ற மடநோக்கின் மயிலியற் றளர்பொக்கி
ஆய் சிலம் பரியார்ப்ப வவிரொளி யிழையிமைப்பக்
கொடியென மின்னென வணங்கென யாதொன்றுந்
தெரிகல்லா விடையின்கட் கண்டவர் பொருங்கோட
வளமைசா லுயர்சிறப்பி னுந்தைதொல் வியனகர்
இளமையா னெறிபந்தோ டிகத்தந்தாய் கேளினி'

(குறிஞ்சி- 21.)

'வாருறு வணரைம்பால் வணங்கிறை நெடுமென்றோட்
பேரெழின் மலருண்கட் பிணையெழின் மானோக்கிற்
காரெதிர் தளிர் மேனிக் கவின்பெறு சுடர்நுதற்
கூரெயிற்று முகைவெண்பற் கொடிபுரையு நுசுப்
பினாய்' (குறிஞ்சி-21)

இனி, இதில் வந்துள்ள உள்ளுறை யுவமங்கள் பல. பாட்டின் முதலுறுப்பாகிய தரவுகளிற் பெரும்பாலன உள்ளுறை அமைந்தனவே. அவை யனைத்தையும் காட்டலுறின், மிகவிரியுமாகலின், சான்றாக ஒன்று காட்டுதும்.

தோழியிற் கூட்டம் நிகழ்ந்த பின்னர், தோழியானவள் தலைவனை யெய்தி, 'நீ தலைவியை வரைந்து கொண்டு இல்லறம் நிகழ்த்துதல் வேண்டும்' என்பது தோன்றக் கூறுகின்றவள், "விளைகின்ற மூங்கிலின் கோலை நெல்லுடனே வளைத்துத் தின்கின்ற பெண் யானை, இலை பொதுளிய வாழைகள் செறிந்த இடத்

தே புகுந்து, பழத்தை நுகர்ந்து, வருடைமானின் மறி பாய்ந்து திரிதரும் இடத்தில், விடியற்காலத்தே, துயில் கொள்ளும் வெற்பினை யுடையானே' என்று விளிக்கின்றாள். மூங்கில் நெல் விளைந்திருப்பதும், வாழை செறிந்திருப்பதும், யானை அவற்றை யுண்பதும், வருடை மான் பாய்ந்து திரிவதும் ஆகிய இவையெல்லாம் மலையிலே காணப்படுவன. இங்ஙனம் மலையியற்கை கூறு முகத்தால், தோழி தான் கருதிய வேறு பொருளைத் தலைவனுக்கு உணர்த்துகின்றாள். 'முன் தம்மிடத்துத் தாழ்ந்து நின்ற அரிய தலைவனைத் தலைவி இப்பொழுது பெற்று நுகரும் தன்மையும், அவன் வரைந்து கொண்டபிறகு, அவள் அவனது மனைக்கண் நலிவற இருந்து இன்பந்துய்த்து, அவன் சுற்றத்திடை இல்லறம் நிகழ்த்தித் தங்குந் தன்மையும்' தோழி கருதிய உள்ளுறையாகும். 'மூங்கிலை மிசைந்த பிடி, தம்மிடத்துத் தாழ்ந்த தலைவனைப் பெற்று நுகர்ந்த தலைவியாகவும், பின்னர் அது வாழைச் செறிவிலே புகுந்து பழத்தை நுகர்ந்த தன்மை, அவன் வரைந்து கொண்டபிறகு, அவள் மனைக்கண் நலிவற இருந்து அவனை நுகர்ந்ததாகவும், புலி முதலியன வின்றி, மறி பாய்ந்து திரியுமிடத்தே துயிலுதல், அலர் கூறுவாரின்றி, அவனது சுற்றத்திடை இல்லறம் நிகழ்த்தித் தங்குந் தன்மையாகவும் உள்ளுறை யுவமங் கொள்க.' இங்ஙனம் அளவின்றிக் கிடக்கும் உள்ளுறையும், வெளிப்படையும் ஆன உவமைகளின் பெற்றியை ஆராய்ந்து காணுங்கால், அக்காலத்துப் புலவராயினோர் எவ்வளவு நுண்ணறிவு வளமும், செந்நா வன்மையும் படைத்த

மேதக்கோ ரென்பதும், தமிழ்மொழி எத்துணைச் செவ்வியும், சுவையும், சீர்மையும், கூர்மையும் பொருந்தியிருந்த தென்பதும் யாவர்க்கும் புலனும்.

இனி, இதில் நாடகத்திற்கு இன்றியமையாத இன்பச் சுவையும், நகைச் சுவையும் தோற்றுவிக்கும் தொடர்கள் ஆண்டாண்டுக் காணப்படுகின்றன. அவற்றுட் சிலவற்றை உரைப் படுத்துக் காட்டுதும்.

களவிற் கூட்டத்தின் பின்பு, தலைவன் மணம் பேசியதற்குத் தமர் ஒருவாற்றால் உடன்பட்டமையைத் தோழி தலைவிக்குக் கூறித், தானும் அவளும் வரைவு கடிதின் முடிதற் பொருட்டு, வரையுறை தெய்வத்திற்குக் குரவை யாடுங்கால் பாடிய, 'கொண்டுநிலை' களில், தோழியானவள் தலைவியை நோக்கி, 'மலை நாடாகிய தலைவனும், நீயும் கலியாண காலத்தே பண்டு ஒருவரை யொருவர் கண்டறியாதீர்போல நடப்பீர்களோ! யானும் உங்கள் பழங் கேண்மையைக் கண்டறியாதேன் போல் மறைப்பேன்மன்!' என்று கூறியவள், பின்பு, 'தலைவன் மணக் கோலத்தைக் காணுமல் கையால் மறைக்கப் படும் கண்களும் கண்க ளென்று கூறப்படுமோ?' என்றாள். அது கேட்ட தலைவி, 'ஏடி! யான் நின்னுடைய கண்ணாலே தலைவன் கோலத்தை மிகவும் காண்பே னன்றோ?' என்றாள். அதற்குத் தோழி, 'அப்படியாயின், நெய்தவிதழ் போலும் நின்கண் தானே என்கண் ஆவதாக!' என்று, கூறி மகிழ்ந்தனள், என்னும் கருத்துக்கள் உள்ளன. (குறிஞ்சி-3.)

தலைவியானவள் தலைவனுடைய காட்சி விருப்பும், ஆற்றுமையும், தனது வேட்கையும் புலனுமாறு,

தோழிக்குக் கூறிற்றாகவுள்ள ஓர் பாட்டின் பொழிப்பு: "ஒண்டொடீஇ, ஈதொன்றைக் கேட்பாயாக. தெருவின் கண் நாம் விளையாடும் மணலாற் செய்த சிற்றிலைக் காலால் அழித்தும், நம் கூந்தலின் மாலையைக் கையால் அறுத்தும், விளையாடும் பந்தினையெடுத்துக்கொண்டு ஓடியும், நாம் நோவத் தக்க தொழில்களைச் செய்யும் சிறு பட்டியானவன், முன்னொருநாள் அன்னையும் யானும் ஒருங்கிருந்த மனையிலே வந்து, 'இல்லில் உறையோர்களே! நீர் வேட்கையுடையேன்.' என்று கூறினான். கூற, அன்னையும், 'அவனுக்கு உண்ணுநீரைப் பொன் வள்ளத்தால் ஊட்டி வா' என்று சொன்னமையின், யானும் அவனுடைய பட்டிமையை அறியாது சென்றேன். சென்ற பின், அவன் என்னுடைய வளையணிந்த முன் கையைப் பற்றி, என்னை நலிந்தமையால், யான் அலமந்து, 'தாயே! இவனொருவன் செய்ததனைப் பாராய்.' என்று கூவினேன். உடனே, தாய் அலறிக் கொண்டு ஓடிவர, யான் அவன் செய்ததனை மறைத்து, 'உண்ணுநீர் விக்கி வருந்தினான் காண்' என்று ஓர் பொய் கூறினேன். தாயும் அவனது முதுகைப் பலகால் அழித்தழித்துத் தடவ, அவ் வஞ்சகன்றான், என்னைத் தன் கடைக்கண்ணாலே கொல்வான் போற் பார்த்து, நகைக் கூட்டம் செய்து சென்றான். இது காண் நிகழ்ந்தது, என்று தலைவி தோழிக்குக் கூறினாள்" என்பது. (குறிஞ்சி-15.)

தலைவன் தன் வேட்கை மிகுதியால் நிகழ்த்தியன இவை யென்று, தலைவி தோழிக்குக் கூறுவாளாய்த், "தோழி! அவன்றான், 'பொற்பூவாற் செய்த கோ

தையும், தொடி செறிந்த முன்கையும், அணை போலும் மென்றோளும் உடையாய்! நின் அடியிலே யான் உறைதற்கு நீ அருளாதிருத்தல் நினக்குப் பொருந்திய தொன்றோ?' என்றுகூறிக், கரிய கூந்தலின் முடியை இடைவிடாது மிகப்பிடித்து, அதில் கலமுறக் கட்டின ஒருமாலையை விரலால் முறையாகச் சுற்றி, அதனை மோந்து பார்த்தலுஞ் செய்தான். அதுவே யன்றி, நறவம்பூ அலர்ந்தாற் போலும் என் மெல்லிய கையைத் தாங்கிக்கொண்டு, அருள் பொருந்திய தன் சிவந்த கண் மறையும்படி வைத்துக், கொல்லன் உலைமுக்குப் போல வெவ்விதாக உயிர்த்தலுஞ் செய்தான். அதுவே யன்றித், தொய்யில் எழுதின மார்பை இனியவாகத் தடவி அத்தொய்யிலைக் கொண்டு வந்த தடக்கையாலே, தான் விரும்பின பிடியை அருள் செய்யும் மதயானை போல, மெய்ம் முழுதினையும் தடவுதலுஞ் செய்தான். அச் செயலால் யான் கைப்பட்டுக் கலங்கிய வருத்தத்தைப் போக்கினேன் என்றாள்." (குறிஞ்சி-18.)

தலைவனும், தலைவியும் உறழ்ந்து கூறும் பகுதி: "இவனொருத்தன், தன்னோடு கூடுங் குறிப்பின்றி நிற்பாளையும், தான் கூடுங் குறிப்புடையனாய்க், கையாலே வலிதிற் பிடித்துக் கொள்ளும், ஆதலால், ஏஎ! நாணிலனா யிருந்தான்.' எனத் தலைவி கூறினாள். அது கேட்ட தலைவன், 'அக் குறிப்பால் நிகழ்வனவெல்லாம் நீ அறிவாய்; யான் அறியேன். மெல்லிய பூங் கொத்துக்களை யுடைய கொடியை யொப்பாய்! நின் மேனி புல்லுதற்கு இனிதா யிருத்தலால், நின்னை யான் புல்லினேன்.' என்றான். என்றலும் தலைவி,

'ஏடா! தமக்கு இனிதாயிருக்கு மென்று கருதிப், பிறர்க்கு இன்னாதவற்றை வலிதிற் செய்வது இன்பத்தைத் தருமோ?' என்றாள். அதனைக் கேட்ட தலைவன், 'சுடர்த் தொடீ! நின் முதுக்குறைவினை ஈண்டுப் போற்றாது கைவிடு; யான் கூறுகின்றதனைப் பேணிக் கேள். நீருண்பார் சிலர், வேட்கை யுற்ற தமக்கு அஃது இனிதாயின் உண்பதல்லது, அந்நீர்க்கு இனிதாயிருக்குமென்று உண்பரோ? உண்ணார் காண்.' என்றான்." என்பது. (குறிஞ்சி-26.)

'திருந்திழாய் கேளாய்' என்னும் இறுதிப்பாட்டில் தோழி புனைந்துரை வகையாற் படைத்து மொழியுந் திறனும், ஆண்டுத் தோன்றும் சுவையு மெல்லாம் படித்தறிந் தின்புறற் பாலன.

இனித், தலைவியும் தோழியும், வள்ளைப் பாட்டிலே, நெல் முதலிய குற்றும் இயல்பு, 'முற்றி வளைந்த தினைக்கதிரை யுருவிச், சந்தன மரத்தாற் செய்த உரலிலே பெய்து, யானைக் கொம்பாற் செய்த உலக்கையாற் குற்றித், தலைவனை விளித்துப் பாடுவேம்.' (4) என்றும், 'மூங்கிலின் நெல்லைப், பாறையாகிய உரலிலே பெய்து, யானைக் கொம்பு உலக்கையாகக் குற்றி, நல்ல சேம்பினிலை சுளகாகப் புடைத்துப், பாடுவேமாக.' (5) என்றும், 'ஐவனமாகிய வெண்ணெல்லைப், பாறையாகிய உரலிலே சொரிந்து, புலியைக் கொன்ற யானையின் கொம்பாலும், சந்தன மரத்தாலும் செய்த உலக்கைகளாலே குற்றி, மலை பொருந்திய நாட்டையுடையானைப் பாடுவேம்.' (7) என்றும் பலபடியாக அணிந்துரைக்கப் பட்டுளது.

இனி, இதில், தலைவன் பண்பும், தலைவி பண்புமாகக் கூறியுள்ள சிற்சில தொடர்கள் அறிந்து மகிழற்பாலன. தலைவன், தலைவி என்போர் ஆசிரியனாற் படைத்துக் கொள்ளப் பெற்றோரே யெனினும், அக்காலத்து நன் மக்களின் இயல்புகளே அங்ஙனம் அவர்கள் மேல் வைத்து விளக்கப்படுகின்றன என்பது ஒருதலை.

தலைவன் பண்பு,

'தன்னுற்றார் இடுக்கண் டவிர்ப்பான்' என்றும்,
'ஓர்வுற் றொருதிற மொல்காத நேர்கோ
லறம்புரி நெஞ்சத் தவன்' என்றும்,
'தன்மலை
நீரினுஞ்சாய லுடையன்-நயந்தோர்க்குத்
தேரீயும் வண்மை யவன்' என்றும்,
'அஞ்சுவ தஞ்சா அறனிலி யல்லன்' என்றும்,
'பகை யெனில்
கூற்றம் வரினுந் தொலையான்றன் நட்டார்க்குத்
தோற்றலை நாணா தோன்' என்றும்,
'மாறுகொண் டாற்றா ரெனினும் பிறர்குற்றம்
கூறுதல் தேற்றாதோன்' என்றும்,
'இடும்பையால்
இன்மை யுரைத்தார்க் கதுநிறைக்க லாற்றாக்கால்
தன் மெய் துறப்பான்' என்றும்,
'உலகம்
புரப்பான் போல்வதோர் மதுகையு முடையன்
வல்லாரை வழிபட் டொன்றறிந் தான்போல்
நல்லார்கட் டோன்று மடக்கமு முடையன்
இல்லோர் புன்கண் ஈகையிற் றணிக்க

வல்லான் போல்வதோர் வண்மையு முடையன்' என்றும் கூறப்பட்டிருக்கின்றன.

தலைவி பண்பு.

'அருமழை தரல் வேண்டில் தருகிற்கும் பெருயள்' என்று கூறப்பட்டுளது.

முன் எடுத்துக் காட்டிய, 'தன்மலை நீரினுஞ் சாயலுடையன் நயந்தோர்க்குத் தேரீயும் வண்கையவன்' என்னும் தொடரும், 'நீயே, வளியின் இகன்மிகுந் தேரும் களிறும், தமியிற் சிறந்தனை வந்த புலவர்க்கு, அளியொடு கை தூவலை' என்னும் தொடரும், வேறு சில தொடர்களும், கபிலர், தம் அரும்பெறல் நண்பனாகிய வேள் பாரியை உளத்திற் கொண்டு பாடியனவாகல் வேண்டும். என்னை? பாரி பறம்பிற் பனிச்சுனைத் தெண்ணீரும், அவனது மாரியன்ன வண்மையும், தேர்க்கொடையும், வேறு பல் விடத்தும் எடுத்துரைக்கப் படுதலின் என்க.

மற்று இவர், 'பூந்தண்டார்ப் புலர்சாந்திற் றென்னவனுயர் கூடல்' என்றும், 'பொழிபெயல் வண்மையான் அசோகந் தண்காவினுள்' என்றும் கூறுவன, ஆரியப்படைதந்த நெடுஞ்செழியன் போல்வானோர் பாண்டியன் அப்பொழுது வள்ளியோனாய் விளங்கினன் என்பது குறிப்பனவாம்.

மன்னு வுலகத்து மன்னியது புரைமே' எனவும்,

'ஈதலிரந்தாற் கொன்றாற்றாது வாழ்தலிற்
சாதலுங்கூடுமா மற்று' எனவும் போந்த தொடர்களும் இங்கே அறிதரற் பாலன.

இங்கெடுத்துக்காட்டிய தொடர்களில் பலவற்றின் கருத்துக்கள் பின்வரும் குறட்பாக்களிலும் ஒருவாறு அமைந்திருத்தல் காண்க.

‘உடுக்கை யிழந்தவன் கைபோல வாங்கே
யிடுக்கண் களைவதா நட்பு.’

‘சமன்செய்து சீர்தூக்குங் கோல்போ லமைந்
தொருபாற்
கோடாமை சான்றோர்க் கணி.’

‘அஞ்சுவ தஞ்சாமை பேதைமை யஞ்சுவ
தஞ்ச லறிவார் தொழில்.’

‘கூற்றுடன்று மேல்வரினுங் கூடி யெதிர்நிற்கும்
ஆற்ற லதுவே படை.’

‘துன்னியார் குற்றமுந் தூற்று மரபினோர்
என்னைகொ லேதிலார் மாட்டு.’

‘சாதலி னின்னாத தில்லை யினிததூஉம்
ஈத லியையாக் கடை.’

‘தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழு
வாள்
பெய்யெனப் பெய்யு மழை.’

இனித், தமர் வரைவு மறுத்துழித், தோழி முதலியோர் அறத்தொடு நிற்குங்கால், ‘இம்மலையில் வாழ்வார், முன் உயிருதவி புரிந்த தலைவற்குத் தலைவியைக் கொடுக்க நினையாது, நொதுமலர்க்குக் கொடுக்க நினைந்து, அறமல்லன விரும்பி யொழுகுதலின், இனி, இவ்விடத்து வள்ளியும் கிழங்கு விழா; மலை மிசையில் தேனும் தொடா; கொல்லையில் தினைகளும் கதிர் வாங்கி யீனா.’ என்றும், ‘மலையிடத்துக் குறவர் மடமகளிர், தாம் தம் கணவரைப் பிழையாராய், அவரே

தெய்வமென்று வணங்கி யெழுதலால், அவருடைய ஐயன்மார் தாமும், தாம் தொடுத்த அம்புகள் பிழை யாராயினர்.' என்றும் கூறியிருப்பன வியக்கற்பா லன. வேட்டமாடுந் தொழிலுடைய மலை வாழ்நர் மகளிர், இத்துணை உறுதியான கற்புடையாராயும், அறத்தின் நுட்பங்களை அறிந்தோராயும் இருந்தா ரென்னில், இந்நாட்டு மகளிரது பெருமையை யா தென் றுரைக்கலாகும்?

இனி, இதில் சிறுமகளிர் தைத் திங்களில் நீராடு தலும், பிறர் மனையின் கண்ணே சென்று, பாடி, ஐய மேற்று, ஆண்டுப் பெற்றவற்றைப் பிறர்க்கு அளித் தலும், குழமகனை (பொம்மையை) வளர்த்து, அவ னுக்குப் பெண் கோடற்குச் சிறுசோறு சமைத்து, ஆயத்திற் கிட்டு மகிழ்தலும், என்னும் மூவகை நோன் புகள் கூறப்பட்டுள.

'நல்கூர்ந்தார் செல்வமகள்' என்று தலைவி அரு மை பாராட்டிக் கூறப்படுகிறாள். 'பிள்ளையால் மிடிப்பட்டாருடைய செல்வத்தையுடைய மகள்' என்பது இதன் பொருளாம்.

'நெறியறி செறிகுறி புரிதிரி பறியா வறிவன்' என்று கணி கூறப்படுகிறான். 'நூனெறியாலே அறிந்த இருவரும் கூடுதற் கேதுவாகிய முழுத்தம் வேறுபட்டுத் தப்புதலை, ஒரு காலத்தும் அறியாத கணி' (சோதிடன்) என்பது இதன் பொருளாம்.

'பரியது கூர்ங்கோட்ட தாயினும் யானை வெரூஉம் புலிசேர்க் குறின்' என்று தமிழ் மறை கூறுதற்கு வேறாக, வேழம் புலியினைப் போர் தொலைத்த செய் தி பல்காற் கூறப்படுகின்றது.

‘என் செய்வாம்’ என்றார்க்குப் ‘பொன் செய்வாம்’ என்பது ஓர் நகைக் குறிப்பு மொழியாகக் கூறப்பட்டுளது.

மெய் தொட்டுச் சூளுறுதல் கூறியுள்ளது.

கயிலை மலையிலே, இறைவன் இறைவியோ டிருக்க, இராவணன் அதனை யெடுக்கலுற்றதும், யானைகள் பூவொடு கூடிய நீரை மேலே சொரியா நிற்கச், செந்தாமரை மலரின் அகவிதழில் திருமகள் வீற்றிருப்பதும், நூற்றுவர் தலைவனாகிய துரியோதனனை, வீமன், குறங்கிலடித்து உயிர் செகுத்ததும், திருமால், மல்லரது மறத்தைக் கெடுத்ததும் ஆகிய புராண விதிகாச கதைகளும், வாரணவாசி யென்னும் ஊரிலுள்ளாரது அருளும் கூறப்பட்டுள்ளன.

இதிலுள்ள திரிசொற்களைக் காணுங்கால், இவ்வாசிரியர், சொற்களைத் தம் வழிப்படுத்து ஆண்டுளார் என்பது புலனும். ‘உரைத்ததைக்காண், பாடித்தை, சிதைத்ததை, கேட்டீ, வருவதை, இறந்தீவாய், இகத்தந்தாய், அறிந்தீயாது, போத்தந்த, இகத்தர, இஃதொத்தன், மருதீவாள், வந்தை, கண்டை, தின்றி, கொண்டீ என்பன காண்க. இவை முறையே உரைத்துக்காண், பாடு, சிதைத்தது, கேள், வருவது, இறப்பாய், இகந்தாய், அறியாது, போதல்தந்த, இகக்க, இவனொருத்தன், மருள், வா, காண், தின், கொள் : என்பவற்றின் திரிபாகும்.

பின்வரும் பாட்டுக்களிலுள்ள இயற்கை நவிற்சியும், பிற அழகும் ஓர்ந்து கொள்க.

## கொச்சக வுருப்பு.

இடியுமிழ் பிரங்கிய விரவுப்பெய னடுநாட்
கொடிவிடு பிருளிய மின்னுச்செய் விளக்கத்துப்
பிடியொடு மேயுஞ் செய்புன் யானை
அடியொதுங் கியக்கங் கேட்ட கானவன்
நெடுவரை யாசினிப் பணவை யேறிக்
கடுவிசைக் கவணையிற் கல்கை விடுதலின்
இறுவரை வேங்கையி னொள்வீ சிதறி
ஆசினி மென்பழ மழிந்துலை யுதிராத்
தேன்செ யிறாஅல் துளைபடப் போகி
நறுவடி மாவின் பைந்துண ருழக்கிக்
குலையுடை வாழைக் கொழுமடல் கிழியாப்
பலவின் பழத்திற் றங்கு மலைகெழு வெற்பனைப்
பாடுகம் வாவாழி தோழிநற் றோழிபாடுற்று (5)

இமயவில் வாங்கிய வீர்ஞ்சடை யந்தணன்
உமையமர்ந் துயர்மலை யிருந்தன னாக
ஐயிரு தலையி னரக்கர் கோமான்
தொடிப்பொலி தடக்கையிற் கீழ்புகுத் தம்மலை
எடுக்கல் செல்லா துழப்பவன் போல
உறுபுலி யுருவேய்ப்பப் பூத்த வேங்கையைக்
கறுவுகொண் டதன்முதற் குத்திய மதயானை
நீடிரு விடரகஞ் சிலம்பக் கூய்த்தன்
கோடுபுய்க் கல்லா துழக்கு நாட கேள்!

ஆரிடை யென்னாய்நீ யரவஞ்சாய் வந்தக்கால்
நீரற்ற புலமேபோற் புல்லென்றாள் வைகறை
கார்பெற்ற புலமேபோற் கவின்பெறு மக்கவின்
தீராமற் காப்பதோர் திறனுண்டே லுரைத்தைக்காண்!

இருளிடை யென்னாய்நீ யிரவஞ்சாய் வந்தக்காற்
பொருளில்லா னிளமைபோற் புல்லென்றாள் வைகறை

அருள்வல்லா னாக்கம்போ லணிபெறு மவ்வணி
தெருளாமற் காப்பதோர் திறனுண்டே லுரைத்தைக்
[காண்!
மறந்திருந்தா ரென்னாய்நீ மலையிடை வந்தக்கால்
அறஞ்சாரான் மூப்பேபோ லழிதக்காள் வைகறை
திறஞ்சேர்ந்தா னாக்கம்போற் றிருத்தகு மத்திருப்
புறங்கூற்றுத் தீர்ப்பதோர் பொருளுண்டே
[லுரைத்தைக்காண்!

எனவாங்கு,
நின்னுறு விழுமங் கூறக் கேட்டு
வருமே தோழி நன்மலை நாடன்
வேங்கை விரிவிட நோக்கி
வீங்கிறைப் பணைத்தோள் வரைந்தனன் கொளற்கே'
(2)



# ஆரும் அதிகாரம்.

## மற்றைய அகப்பகுதிகள்.

### நற்றிணை.

எட்டுத் தொகையுள் ஒன்ருகிய இந்நூல் கடவுள் வாழ்த்து உட்பட நானூற்றொரு அகவற்பாக்களை யுடையது. அகத்தின் பகுதிகளையே பொருளாக வுடையது. இதிலுள்ள பாக்களெல்லாம் ஒன்பதடிச் சிறுமையும், பன்னிரண்டடிப் பெருமையும் உள்ளன. இதில் இருபது பாட்டுக் கபிலர் பாடியன.

இப்பாக்களில், தலைமக்களின் கேண்மைக்குத், தாமரையின் தண்ணிய தாதினை யூதிச் சந்தனமரத்தில் வைக்கப்பட்ட தேனும்; தலைவி, தலைவனையின்றி யமையாமைக்கு,உலகம் நீரையின்றி யமையாமையும்; தலைவியின் செவ்வரி பரந்த கண்களுக்கு, ஏனல் காவலர் விலங்கினை யெய்து பறித்த பகழியும்; வேங்கையின் மலருதிர்தற்குக், கொல்லன் உலைக்களத்து அடிக்கும் இரும்பின் பொறி சிதறுதலும்; மலைக்கு, மாயோனும்; மலைப்பக்கத்து ஒழுகும் அருவிக்கு, வாலியோனுனை பல தேவனும்; களிற்றியானை காணுந் தோறும் பொலிந்து விளங்குதற்குப், புகழுண்டாக வாழ்வாருடைய செல்வம் பொலிதலும்; கடுஞ்சினத்துடன் போர்செய்த வலிமிக்க யானைக்கு, முருகவேளும்; வாழை அப்பொழுது ஈன்ற கூரிய முகைக்கு,

யானையின் குருதி படிந்த கொம்பும்; வாழைப்பூவுக்கு, மகளிரது கூந்தலும்; தலைவனது வெய்துயிர்ப்புக்குப், படுக்கையிலே கிடந்த யானையின் உயிர்ப்பும்; ஞெண்டின் கண்ணுக்கு, நொச்சியின் கரிய அரும்பும்; ஞெண்டின் கூட்டம் ஞாழலின் உதிர்ந்த மலரைக் காலால் வரித்துக் கோலஞ் செய்தற்கு, மகளிர் வெயிலிலே காயுந் தினையைக் கைவிரலாலே துழவுதலும்; மீனைத் தின்னுமாறு வந்து கூடும் புட்களின் குரலுக்குச், சிறிய நாவையுடைய மணியின் தெளிந்த ஓசையும்; நீர்வற்றிய சேற்றிலுள்ள கொழுவிய மீனை நுகர்தற் பொருட்டு மணன் மேட்டிலே கூடியிருக்கும் நாரைகளுக்கு, அரசரது படைத்தொகுதியும்; காற்றால் அலைகின்ற முகிலுக்கு, நூற்கின்ற நுண்ணிய பஞ்சும் உவமிக்கப் பட்டுள்ளன.

தலைவியானவள் பாரியின் பறம்புமலை போலப் பெருங்கவினெய்தினமையால், அரிய காவலையுடையளாயினள் என்றும்; தலைவியின் அழகு, முள்ளூர் மன்னனாகிய மலையமான் திருமுடிக்காரி பரியேறிச் சென்று, இரவிலே அடித்துக் கொண்டு வந்த ஆநிரைக் குரியோர் அவனோடெதிர்த்துப் போர் முனையில் அழிந்தாற் போல், அழிந்தது என்றும்; கொல்லி மலைத் தலைவனாகிய வல்வில்லோரியைக் கொன்ற திருமுடிக்காரியானவன் உடனே அவ் வோரியின் பெருந் தெருவிலே புகுந்ததைக் கண்ட ஓரியைச் சார்ந்தார் யாவரும் ஒருசே ரின்று, பேரிரைச் சலிட்டாற் போல, இவ்வூரிலே கல்லென்னும் நகையொலி யுண்டாயிற்று என்றும் கூறப் பெற்றுள்ளன. கிடங்கில் என்ற ஊரும் சிறப்பிக்கப் பெற்றுளது.

'ஆளில் பெண்டிர் தாளிற் செய்த, நுணங்கு நுண்பனுவல்' என்னும் தொடர் நினைவு கூரத்தக்கது. கணவனை யிழந்த கைம்மை மகளிர் தம் உயிர் வாழ்க்கைக்கு வேண்டும் பொருளின் பொருட்டு முயன்று நூற்கின்ற மிக நுண்ணிய பஞ்சு-என்பது இதன் பொருள். புறப்பாட்டிலும், 'பருத்திப் பெண்டின் பனுவல்' என்று கூறப்பெற்றுளது. அக்காலத்து இல்லிலிருந்து மகளிரும் புரிந்து சிறப்பெய்திய இத்தொழில் இப்பொழுது நம் நாட்டில் அருகினது பெரிதும் இரங்கத்தக்கது. மலையினிடத்தே துயில்கின்ற பிடியின் பக்கத்தில் மேகம் மறைத்தலால், ஆண் யானை அதனைக்காணப் பெறாது பிளிறு நிற்கும் என்றும்; மலைச்சாரலில் உழுதொழில் புரியும் குறவாது இளமகளிர், கரிய விரலையுடைய மந்தியை விருந்தாக ஏற்றுக் கொண்டு, குடம் போலும் பலாப் பழத்தின் சுளையை அதற்கு அளிப்பர் என்றும் கூறியிருப்பன வியக்கற் பாலன. காட்டகத்து வேட்டுவன் பெறும் உணவுப் பொருள்களும் (59), தலைவி கிளியைத் தூது விடுதலும் (376) நன்றாகக் கூறப்பட்டுள்ளன. இவற்றிலுள்ள உள்ளுறை யுவமங்களெல்லாம் வியக்கற் பாலனவே.

'நீரின்றமையா வுலகம் போல', 'பெரியோர் நாடி நட்பி னல்லது-நட்டு நாடார்தம் மொட்டியோர் திறத்தே' என்னும் தொடர்கள்,

'நீரின் றமையா துலகெனின் யார்யார்க்கும்
வானின் றமையா தொழுக்கு.'
'நாடாது நட்டலிற் கேடில்லை நட்டபின்
வீடில்லை நட்பாள் பவர்க்கு.'

என்னும் குறட்பாக்களின் கருத்தைத் தழுவியுள்ளன

'நின்ற சொல்லர் நீடுதோன் றினியர்
என்று மென்றோள் பிரிபறி யலரே
தாமரைத் தண்டா தூதி மீமிசைச்
சாந்திற் றொடுத்த தீந்தேன் போலப்
புரைய மன்ற புரையோர் கேண்மை
நீரின் றமையா வுலகம் போலத்
தம்மின் றமையா நந்நயந் தருளி
நறுநுதல் பசத்த லஞ்சிச்
சிறுமை யுறுபவோ செய்பறி யலரே.'

## குறுந்தொகை.

எட்டுத் தொகையுள் ஒன்றாகிய இந்நூல் கடவுள் வாழ்த்து உட்பட நானூற்றிரண்டு அகவற்பாக்களை யுடையது. இதிலுள்ள பாக்களெல்லாம் நான்கடிச் சிறுமையும், எட்டடிப் பெருமையும் உள்ளன. இதில் கபிலர் பாடியன இருபத்தொன்பது பாட்டு.

இவற்றில், சிறுமலைக்கு, யானையும்; நாரையின் சிறிய, பசிய, காலுக்குத், தினையின் தாளும்; மலையி னின்று இழியும் அருவிக்கு, இற்றி மாத்தினது கல் லிடத்தே பரவிய வெள்ளிய வேரும்; † தலைவன் பெருமூச்சுக்குப், பாதியிரவில் துயிலும் யானையின் உயிர்ப்பும்; தாமரை யிலைக்குக், களிற்றின் செவியும் உவமையாக வந்துள்ளன. சிறிய கோட்டில் பெரிய பழம் தூங்கிறைற் போன்று, தலைவியின் உயிர் மிகச் சிறிது, அவளுற்ற காமம் மிகப் பெரிது என்னும்;

---

† இவ்வுவமை நற்றிணையிலும் இவர் கூறியிருப்பது காண்க.

தலைவியின் நீரையொத்த சாயல், தலைவனது தீயை யொத்த மனவலியைக்கெடுத்திட்டது என்றும் கூறப் பட்டுள. தலைவிக்குக் கொல்லி மலையிலுள்ள பாவை உவமிக்கப் பட்டுளது. மிளகின் றழையைக், குரங்கு அருந்தும் என்று கூறியிருக்கிறது. மற்றும், இவ் வாசிரியர், 'கேடுற்றவிடத்துச் செய்த உதவியை அர சுரிமைச் சிறப்பெய்தி மறந்த மன்னன் போல நன்றி மறந்தனையாயின்' என்று தோழி தலைவற்குக் கூறுவ தாகவும்; 'தலைவனது கேண்மையால் வந்த இன்னு மையினும் துறக்கவின்பம் இனிதாமோ' என்றும், 'அன்னை செய்த உதவிக்கு உயர் நிலையுலகமும் ஆற் றுதற் கரிது' என்றும், தலைவி தோழிக்குக் கூறுவ தாகவும் கூறியுள்ளார். சிறு குடி பசிப்பின் யானை யின் கொம்புகளை விற்று உண்பிக்கும் ஓரி யென் பானது கொல்லிமலை என்கின்றார். மலையனது முள் ளூர்க் கானத்தைப் பல விடத்துச் சிறப்பித் தோது கிறார். இவர் கூறிய, 'கானமஞ்ஞை யறையின் முட் டை, வெயிலாடு முசுவின் குருளை யுருட்டும், குன்ற நாடன்' என்பதன் கருத்து, 'வந்தாய் பவரையில் லாமயின் முட்டை யிளையமந்தி, பந்தா டிரும்பொ ழிற் பல்வரை நாடன்' என மாணிக்க வாசகப் பெரு மானால், திருச்சிற்றம்பலக் கோவையாரில், எடுத் தாளப் பெற்றது.

---

## ஐங்குறு நூறு.

எட்டுத் தொகையுள் ஒன்றாகிய இந்நூல், அகத் தின் பகுதி யாகிய மருதம், நெய்தல், குறிஞ்சி, பாலை, முல்லை என்னும் திணைகள் ஒவ்வொன்றனை

யும் பற்றித் தனித்தனி கூறும் நூறு நூறு அகவற் பாக்களை யுடையது. இவ் வைந்து நூற்றையும் இயற்றினார் முறையே ஓரம்போகியார், அம்மூவனார், கபிலர், ஓதலாந்தையார், பேயனார் என்போர் †. மற்றைத் தொகைகளிற் போலவே, பாரதம் பாடிய பெருந்தேவனா ரியற்றிய கடவுள் வாழ்த்து இதில் முதற்கண் உள்ளது. இதிலுள்ள பாக்க ளெல்லாம் மூன்றடிச் சிற்றளவும், ஆறடிப் பேரளவும் உள்ளன. இதன் ஒவ்வொரு நூறும் பப்பத்துப் பாக்கள் ஒவ்வொரு தன்மையினவாக இயன்றுள்ளன. கபிலர் பாடிய குறிஞ்சிப் பகுதியில் உள்ள பத்துக்கள், முறையே அன்னாய்வாழிப் பத்து, அன்னாய்ப் பத்து, அம்மவாழிப் பத்து, தெய்யோப் பத்து, வெறிப் பத்து, குன்றக்குறவன் பத்து, கேழற் பத்து, குரக்குப் பத்து, கிள்ளைப் பத்து, மஞ்ஞைப் பத்து என்பனவாகும். இவற்றின் ஒவ்வொரு பாட்டினும், 'அன்னாய் வாழி' என்பது முதலிய சொற்களேனும், அவற்றின் பரியாயச் சொற்களேனும் வருதலின், இவை இப் பெயரின வாயின. இதிலுள்ள பாக்க ளெல்லாம் சொற் சுவை, பொருட் சுவை துவன்றிக் கற்பார்க்குக் கழிபேரினிமை பயப்பன. இயற்கை வளங்களை யெழில் பெற விளக்குவன.

† இதனை,

'மருதமோ ரம்போகி நெய்தலம் மூவன்
கருதுங் குறிஞ்சி கபிலன்—கருதிய
பாலையோ தலாந்தை பனிமுல்லை பேயனே
நூலையோ தைங்குறு நூறு.'

என்னும் வெண்பாவானறிக.

'அன்னாய் வாழிவேண் டன்னைநம் படப்பைத்
தேன்மயக்கு பாலினு மினிய வவர்நாட்
டலைலக் கூவற் கீழ
மானுண் டெஞ்சிய கலிழி நீரே.'

இவ்வொரு பாட்டிலிருந்தே, இந் நூலின் அருமை, பெருமைகளைத் தெரிந்து கொள்ளலாகும். தலைவனுடன் அவனூர்க்குச் சென்று மீண்ட தலைமகள், 'நீ சென்ற நாடு எவ்வியல்பிற்று?' என வினவிய தோழிக்குக் கூறியது இது. இதன் பொருள்: 'அன்னையே! வாழ்வாயாக! யான் சொல்லுமிதனை விரும்பிக் கேள். அன்னை! நம் மலைப் பக்கத்து இறாலினின்றும் பிழிந் தெடுத்த தேன் கலந்த பாலினுங்காட்டில், நம் தலைவர் நாட்டிலே தழைகள் விழுந்து அழுகிக் கிடக்கும் சிறு குழிகளின் கீழிடத்தவாய், விலங்குகளால் உண்ணப் பட்டு எஞ்சியுள்ள கலங்கற் சின்னீர்கள் எனக்கு மிக்க இனிமை யுடையன காண்.' என்று தலைவி கூறினாள் என்பது. தலைவரது நாடு இதுவே போற் சிறந்தது என்றேனும், இதனினும் சிறந்தது என்றேனும் தலைவி கூறியிருப்பின், அவட்குத் தலைவன் பாலுள்ள அன்பு ஒரு சிறிதும் விளங்குவ தின்று. 'தலைவரது நாடு எவ் வியல்பிற்று எனினும், அதுவே எனக்குச் சிறந்த தாவது' என்று கூறுவதே தலைவியின் அன்பின் திறனைப் புலப்படுப்ப தாகும். அதனையே, 'அவர் நாட்டு உவலைக் கூவற் கீழ மானுண்டு எஞ்சிய கலிழிநீர் நம் படப்பைத் தேன் மயக்கு பாலினும் இனிய' என்று இங்ஙனம் கூறினாள். தழைகள் அழுகிக் கிடக்கும் சேற்றிடத்தில், விலங்குகள் உண்ணக் கலங்கிய சிறிய

நீரை, இறப்ப இழிந்தாரும், எத்துணை நீர் வேட்கை யுற்ற பொழுதும், உண்ணுதற்கு அருவரா நிற்பர். உண்ணின், அஃது அப்பொழுது இனிமை சிறிதும் இலதாதலே யன்றிப், பின்பு பல பிணியும் உண்டாக்கிப், பெருந்துன்பத்தை விளைப்பது மாகும். தேனும், பாலும் தனித்தனி மிக்க இனிமை யுடையவாய், எத்துணைப் பெரியாராலும் விரும்பி யுண்ணப் படுவன. அவற்றுள் ஒன்று மற்றையதுடன் கலக்கப் பெறின், அக்கலவை பருகுதற்கு அதன் மேலும் இனிமை யுடைத்தாகும். அவ்வளவன்றி, அஃது உடம்பிற்கு உறுதி பயந்து, பிற் பொழுதுகளில் இன்பம் விளைப்பது மாகும் 'கலங்கற் சின்னீர் தெருளாமையால் உண்பான்' என்னும் இறையனாரகப்பொருளுரையும், 'பாலொடு தேன் கலந்தற்றே' என்னும் திருக்குறளும் இங்கு நினைக்கற் பாலன. இவ்வாற்றால், யாவரானும் வெறுக்கத் தகும் கலங்கல் நீர், யாவரானும் விரும்பத்தகும் தேன் பாற் கலவையினும், தலைமகட்கு இனிமை யுடைத்தாயிற்று. இதற்கு என்னை காரணம்? அன்பு என்ப தொன்று எத்துணை யிழிந்த பொருளையும் உயர்ந்த பொருளாக்க வல்ல மருந்தாக வுள்ளது.

'செருப்படியவ் விளம்பருவச் சேயடியிற் சிறப் புடைத்தால்,' 'எனக்கவன்றன் வாயுமிழும் புனல் புனிதம்' † என்று சிவன் கூறிற்றாக வுள்ள திருப் பாட்டுக்களும் இவ் வுண்மை தெரிப்பன வன்றே? 'அன்பு என்ப தொன்றின் தன்மை அமரரும் அறிந்ததன்று'‡ என்னில், இதன் பெருமையை யாம்

† பெரிய புராணம். ‡ கம்ப ராமாயணம்.

எங்ஙனம் உரைக்கேம்? தலைவனது நாட்டிலுள்ள தென்ப தொன்றே பற்றி, அவ்விடத்துள்ள மிக இழிந்த பொருளையும் தலைவியானவள் பிறவிடத்துள்ள மிக வுயர்ந்த பொருளினும் உயர்ந்ததாகக் கொண்டாள் என்றால், அவள் தலைவனிடத்து எத்தகைய அன்புடையளாதல் வேண்டும்? தேன் எனவாளா கூறாது, 'நம் படப்பைத்தேன்' என்றது, அது பிற விடத்துள்ளதினும் இனிது என்பது தோற்றுதற்கு. இதனால், கற்புடை மகளிராவார், தம் பிறந்தகத்து எத்துணைப் பெருஞ் செல்வம் நிறைந்திருப்பினும், அதனினும் தாம் புக்ககத்து வறுமையை மிகு மேன்மை யுடைத்தென்று கொள்வர் என்பது பெறப்படும். தோழியை அன்னாய் என்றது அருமை பாராட்டி. இருமுறை விளித்தது ஆர்வம் பற்றி. வாழி யென்றது அவள் உடன் போக்கிற்குத் துணை புரிந்த உதவி பற்றி. வேண்டு என்றது தான் சொல்லும் பொருளின் இன்றியமையாமை பற்றி. இவ்வாறு இவ்வாசிரியர் அன்பினது திறத்தை இரண்டு மூன்றடிகளால் விளங்க வைத்த மாட்சியை எங்ஙனம் வியந்துரைக்க வல்லேம்?

இனிக், குரக்குப்பத்தில், குரங்கின் றலைவனை கடுவன், சிறிய பிரப்பங் கோல் கொண்டு, மாரி மொக்குளைப் புடைத்து அழிக்கும் என்றும், மலையிடத்துள்ள கடுவன், நறைக் கொடி கொண்டு, கருக் கொண்ட இள முகிலைப் புடைக்கும் என்றும், குரங்கு தன் • மீதிருந்து பாய்தலால், வளைந்து நிமிரும் மூங்கிற் கோல், மீனெறி* தூண்டில் போல், தோன்றும் என்றும் கூறியுள்ளனவும்; மஞ்ஞைப் பத்தில்,

மலர்ந்த வேங்கை மரத்திலிருந்த மயில், அணிகலன் அணிந்த மகளிர் போலத் தோன்றும் என்றும், பூக்கொய்யும் மகளிர் போலத் தோன்றும் என்றும், தினையரி தாளிலிருந்த குருவி எழுவது விழுவதாய் வருந்துறச், சிறகை விரித்து ஆடிச் செல்லும் மயில், பந்தாடும் மகளிர் போலத் தோன்றும் என்றும் கூறியுள்ளனவும் படித்து இன்புறற் பாலன. இங்குக் கூறிய 'மீனெறி தூண்டில்' என்ற உவமம், 'கான யானை கைவிடு பசுங்கழை, மீனெறி தூண்டிலி னிவக்கும்' எனக் குறுந்தொகை யுள்ளும் (54) போந்துளது. மத வேழமானது, கரிய மலைப் பாறையைப், பிடி யென்று கருதித் தழுவும் நாடன் என்பதும், வெறிப்பத்தில், 'பொய்யா மரபி னூர்முது வேலன்' எனவும், 'பொய்படு பறியாக் கழங்கே' எனவும் குறிப்பிற் கூறி, வெறியாட் டாளனது (பூசாரி) பொய்ம்மையை விளக்குவனவும் போல்வன நகைச் சுவை பயப்பனவாகும். இவள் தினைப்புனம் காத்தொழிந்தால் வரைவல் என்ற தலைவற்குத் தோழி கூறுவதாகக், 'கொடிச்சி கிளி யோட்டுங் குரலைக் கிளியின் குரலெனக் கருதிப், பிறவிடத்துள்ள கிளிகளும் தினைப் புனத்திற் போந்து அழிக்கும் என்று காவலை விலக்குவர் போலும், ஆகலாற், பெரிய மலை நாடனே! இவளை விரைய வரைந்து கொள்வாயாக.' என்று வியப்புத் தோன்றக் கூறப்பட்டுளது. பின்னுளோரும், 'ஆயோ வெனுங்குர லையோ புனத்தை யழிக்கின்றதே' என இக் கருத்தை எடுத்தமைத்துளார். தலைவி பின்னுகை வந்து கண் பொத்திய விடத்து, 'அழகிய காந்தட் பூப் போலும் கையால்

என் கண்களைப் புதைத்தோயே! என் நெஞ்சம் விரும்பினவர் நீயலதும் உளர் கொல்லோ?' என்று தலைவன் கூறிற்றாக உள்ளது இன்பம் விளைக்கின்றது. கம்ப நாடரும், 'காரன்ன கூந்தற் குயிலன்னவள் கண்புதைப்ப, ஆரென்ன னோடு மனலென்ன அயிர்த்துயிர்த்தாள்.' என இக் கருத்தை யெடுத்து † இராமாயணத்திற் பதித்து வைத்தார்.

தலைவன் ஊர்ந்த குதிரை, பார்ப்பனக்குறு மகவு போல் குடுமித் தலையது எனவும்; அசோகின் தழை நெய்யொடு பிசைந்த உழுந்து மாப் போலும் எனவும்; பொன்போலும் தினையைக், கட்டளை (பொன் உரையாணி) போலும் கேழல் மாந்தும் எனவும்; அவரையை, நிறையத்தின்ற மந்தி, பண்டவாணிகர் பைபோலத் தோன்றும் எனவும் கூறியுள்ள உவமைகள் பெரிதும் மகிழ்ச்சி விளைப்பனவாகின்றன. மற்றும் பல உவமைகளும், உள்ளுறைகளும் இதிற் கூறப்பட்டுள்ளன. 'வெள்ளவரம்பின் ஊழி' என இதில் வந்துளது. தொல்காப்பியனார், 'ஐ அம்பல் எனவரூஉம் இறுதி' என்பதனால், தாமரை, வெள்ளம், ஆம்பல் என எண்ணுப் பெயர்கள் கூறியிருப்பது இங்கே கருதற்பாலது. ஆண் குரங்கினை, 'மந்திக் கணவன் கல்லாக் கடுவன்,' 'குரங்கின்றலைவன்' என்றிங்ஙனம் இதிற் கூறியிருக்கிறது. 'குரங்கி னேற்றினைக் கடுவனென்றலும்' எனத் தொல்காப்பியனார் வழுவமைத் திருத்தலும் காண்க. புலியின் ஏற்றை, பிடியீன்ற குழவி, தகர், புருவை, பன்றிக் குருளை,

† பாலகாண்டம்-பூக்கொய்படலம்.

பன்றி யொருத்தல், மந்திப்பறழ், மந்திப் பார்ப்பு என்றிவை முதலிய மரபுகளும், பல வழக்கங்களும் இதிற் காணப்படுகின்றன.

---

### அகநானூறு.

எட்டுத் தொகையுள் ஒன்றாகிய இந்நூல், கடவுள் வாழ்த்து உட்பட நானூற்றொரு அகவற்பாக்களை யுடையது. இஃது, அகம் எனவும், அகப்பாட்டு எனவும், நெடுந் தொகை எனவும் வழங்கும். இதி லுள்ள பாக்களின் அடியளவு சிறுமை பதின்மூன்று, பெருமை முப்பத்தொன்று. இத்தொகையின் முதல் நூற்றிருபது பாக்களைக், களிற்றியானை நிரை எனவும், அடுத்த நூற்றெண்பது பாக்களை, மணிமிடை பவளம் எனவும், இறுதி நூறு பாக்களை, நித்திலக் கோவை எனவும் ஆன்றோர் வழங்குவர். இதிற் கபிலர் பாடியன பதினெட்டுப் பாக்கள்.

இவற்றில், வாழைக்கனி, பலாக்கனிகளால் சுனை யிடத்து நிறைந்த தேனை, வேட்கை மிகுதியால் நீ ரென்று கருதியுண்ட கடுவன், அயலிலுள்ள மிளகு கொடி வளரப் பெற்ற சந்தன மரத்தின்மேல் ஏற மாட்டாது, மலர்ப் படுக்கையில் கண்படை கொள் ளும் என்றும்; பலவின் பழங் கொள்ளுமாறு குறவர் நாட்டிய குரம்பை, உதிர்ந்த வேங்கைப் பூவால் மூடப் பட்டிருப்பதனைப் புலியென்று கருதி, அஞ்சுதலுற்ற வேழம், மழைதவழும் மலையிலே கழைமடியப் பாய்ந்து ஓடா நிற்கும் என்றும்; மூங்கிலின் றுளையில் காற் றுப் புகும் ஓசை குழலிசையாகவும், அருவி நீர்

வீழ்ச்சியி னோசை முழவின் குரலாகவும், கலையின் குரலோசை பெருவங்கியமாகவும், வண்டின் பாட்டு யாழிசையாகவும் கொண்டு, மந்தியின் அவை நோக்கி வியப்புறும்படி, மூங்கில் வளர்ந்த பாறையில் அசைந்தாடும் மயில், விறலி போலத் தோன்றும் என்றும்; அருவியிற் பாய்ந்த கருவிரலை யுடைய மந்தி, பலாப் பழத்தைத் தெப்பமாகக் கொண்டு, சாரலிலுள்ள ஊர்முன்றுறையிற் சென்று சேரும் என்றும்; உள்ளுறை பொருந்த அழகாகக் கூறப்பட்டுள்ளன.

தலைவன் வரைந்து கொள்ள வருகின்றமையைத் தலைவிக்கு அறிவிக்கலுறும் தோழியானவள், 'குளிர்ந்த கண்ணும், தளிர்போலும் மேனியும் உடையாளே! வானளாவிய மலையினை யுடைய நம்தலைவர் வரைதற் பொருட்டு வந்தமையால், எனக்கு உண்டாகிய மகிழ்ச்சியின் அளவு சொல்லின், காடு வறங்கூரவும், கலப்பை தொழிலின்றித் துஞ்சவும், கோடைமிக்க பசுமை யற்ற காலையில், மலை போலும் கரைகளையுடைய பெரிய குளம் நிறையும் படியாகப் பெருமழை பொழிந்த வைகறையில் பல்லோரும் உவந்த உவகையெல்லாம் என்னுள்ளத்தே பெய்து வைத்தாற் போலும்' என்று தன் மகிழ்ச்சியைப் புலப்படுத் துரைப்பதாகக் கூறியிருக்கிறது. 'ஏரி நிறைந்தனைய செல்வன் கண்டாய்' என்ற தேவாரம் இங்கே கருதத் தக்கது.

தலைமகன் சிறைப் புறத்தானாகத், தலைமகள் தோழிக் குரைக்குமிடத்து, 'தோழீ! நாம், அவர் இருளிடை வருதலின் ஏதத்தை யஞ்சி அகன்று வலித்திருப்பவும், எனது நெஞ்சு என்னையும் நின்னையும்

கேளாது கைவிகந்து, படுகுழிகளையுடைய வழியில் இருளில் மிதிக்குமிடத்து அவாது தளர்ந்த அடியைத் தாங்குமாறு செல்லா நின்றது.' என்ற தாகக் கூறியிருக்கிறது. 'கருநாயிறு போல்பவர் காலொடு போய், வருநா ளயலே வருவாய் மனனே' என்று கம்பர் கூறியது இங்கே நினைக்கத் தக்கது.

'வேங்கையினது பொன்போலும் பூங் கொத்துக்களைச் சூடி, வளைந்த வில்லைத் தோளின் மீதிருத்திப், பலாப் பழத்தில் விளைந்த தேறலை இளையரொடும் மாந்திக், குறிபிழையாத வென்றியையுடைய நாய் பின்னே வர, வேட்டைக்குச் சென்ற குறவன், குளவியின் புதல் குருதியொடு பொருந்துமாறு, முள்ளம் பன்றியை எய்து வீழ்த்தும் குன்று' என்று கானவரது வேட்டை கூறியிருக்கிறது.

'ஈன்று இளைத்த பெண் புலியின் பசிக்கு உணவு தருமாறு, மலைக் குகையி னின்றும் புறப்பட்ட புலிப் போத்து, ஆமானின் பெண் அலறும்படி, ஆமானேற்றைப் பாய்ந்து, வலமுற வீழ்த்திக், கரிய கல்லிடமெல்லாம் சிவக்கும்படி இழுத்து வரும்' எனப் புலி வேட்டம் கூறப்பட்டுளது.

பிறருற்ற துன்பத்திற்குப் பிறரும் வருந்துவர் தம்மையுற்ற துன்பம் தமக்கோ எளிது என்னும் பொருளுடைத்தாக,

'பிறருறு விழுமம் பிறரும் நோப
தம்முறு விழுமம் தமக்கோ தஞ்சம்'

என்று கூறப்பட்டுளது.

வண்டினை, 'அறுகால் யாழிசைப் பறவை' என்று கூறியிருக்கிறது.

இருதலைப் புள் போல, இருவர்க்கும் உயிர் ஒன்றாகிய கேண்மையர் என்றும்; மழையிற் கலித்த பிச்சி முகையின் வெரிந் போலும் கண் என்றும்; யானைக் கயிற்றுப் புறம் போலும், கல்லின் மேல் ஓங்கிய சிறு நெறி என்றும்; ஏற்றின் இமிலிற் பூட்டிய கயிறு போலத், தலைவனது திரண்ட தோளில் அணிந்த மாலை புரள என்றும் உவமைகள் கூறப்பட்டுள்ளன. நள்ளியானவன், இரப்போர்க்கு மழை சுரந்தாற்போல், தேரும், களிறும் நல்குவன் என்று கூறப்பட்டிருக்கிறது.



# ஏழாம் அதிகாரம்.

## புறப்பொருட் பகுதியும், பிறவும்.

### புறநானூறு.

எட்டுத் தொகையுள் ஒன்றாகிய இந்நூல் கடவுள் வாழ்த்து உட்பட நானூற்றொரு அகவற்பாக்களை யுடையது. புறத்தின் பகுதியாகிய வெட்சி முதலிய திணைகளுக் குரிய துறைப் பொருளமைந்த நானூறு பாக்களை யுடைமையின் புறநானூறு எனப் பெயர் பெற்றது. இது புறம் எனவும், புறப்பாட்டு எனவும் வழங்கும். இந்நூலின் இறுதியிலுள்ள பாடல்கள் பல சிதைந்து விட்டமையின், பாக்களினுடைய அடிகளின் சிறுமை பெருமை தெரிந்து கொள்ளக் கூடவில்லை. 'இந்நூலால், பண்டைக் காலத்து இத் தமிழ்நாட்டிலிருந்த சேர, சோழ, பாண்டியர்களாகிய முடியுடை வேந்தர், சிற்றரசர், அமைச்சர், சேனைத் தலைவர், வீரர் என்கிற பலருடைய சரித்திரங்களும், கடையெழு வள்ளல்களின் சரித்திரங்களும், கடைச் சங்கப் புலவர் பலருடைய சரித்திரங்களும், அக் காலத்துள்ளாருடைய நடை முதலியனவும், இன்னும் பற்பலவும் நன்கு புலப்படும்.'

இதிலுள்ள பாக்களில், கபிலர் பாடியன இருபத் தெட்டு. அவற்றுள், இரண்டு பாட்டுச் செல்வக் கடுங்கோவாழியாதனைப் பாடியவை. திருமுடிக் காரியைப் பாடியவை நான்கு. பேகனைப் பாடியது ஒன்று. பாரியைப் பாடியவை ஏழு. பாரிதுஞ்சிய வழி இரங்கிப் பாடியவை எட்டு. பாரிமகளிரைக்

கொண்டு சென்று, விச்சிக்கோனைப் பாடியது ஒன்று. இருங்கோவேளைப் பாடியவை இரண்டு. தாம் வடக்கிருக்கும் பொழுது பாரியை விளித்துப் பாடியது ஒன்று. மகட்பாற் காஞ்சியாகப் பொதுவே பாடியவை இரண்டு. பாரி துஞ்சியதற்கு இரங்கிப் பாடிய பாட்டுக்கள் மிகவும் உருக்கமானவை.

செல்வக்கடுங்கோவாழியாதன் தம் கையைப் பற்றி, ' நும் கை மெல்லிய ' எனக் கூறிய பொழுது, 'யானை, குதிரை, தேர்களை முறையானே செலுத்தியும், வில்லை நாணேற்றி அம்பினை வழங்கியும் போர் புரியவும், பரிசிலர்க்கு அரிய அணிகலங்களை யளிக்கவும் நின்கைகள் வலிய வாகும்; ஊனையும், துவையையும், கறியையும், சோற்றையும் உண்டு வருந்தும் செயலல்லது, வேறு செயல் அறியாவாகலின், நின்னைப் பாடுவார் கைகள் மெலியவாயின.' என்றும்; பாரி துஞ்சியபின், பறம்பினை நோக்கி நின்று, 'பெரும் புகழை யுடைய பறம்பே! மதுவுடனே, துவையையும், ஊனையு முடைய சோற்றை விரும்பியவாறே தரும் மிக்க செல்வம் முதிர்ந்து, முன்பு எம்மொடு நட்புச் செய்தாய்; இப்பொழுது, பாரி இறந்தானாகக், கலங்கிச் செயலற்று, நீர்வார் கண்ணை யுடையேமாய்த், தொழுது, நின்னை வாழ்த்திச் செல்லுதும்.' என்றும் கூறியிருத்தலால், இவ்வாசிரியர் மதுவும், ஊனும் உண்ணு மியல்பினர் எனச் சிலர் கருதா நிற்பர். மிகப் பழைய நாளில், எவரும் இவ்வழக்கங்களைக் குற்ற மென்று கருதிற்றிலர் என்பதற்கு, வடமொழியிலுள்ள மனு முதலிய மிருதி நூல்களே தக்க சான்றாகும். எனினும், நல்லிசைப் புலவராகிய கபிலர்

இவ்வழக்க முடையார் என்பதற்கு யாம் எளிதில் இணங்கக் கூடவில்லை. இவ்வாசிரியர் தாமே இன்னு நாற்பதில் இவற்றைக் கடிந்திருக்கின்றனர். பெரும்பாணாற்றுப்படையில், அந்தணர்க்கு வேறு தூயவுணவு கூறப்பட்டிருத்தலும் கருதற்பாலது. புலவர்கள் தம்மைப் பாணர் முதலியோர் போல் வைத்துப் பாடும் வழக்க முடையராகலின், கபிலரும் தம்மைப் பாணர்போல் வைத்துப் பாடியுள்ளாரெனக் கொள்ளுதல் நேரிது எனத் தோன்றுகிறது. இங்ஙனம் பாடுவ துண்டென்பது, சிறுகுடிகிழான் பண்ணனைக் கிள்ளிவளவன் பாடிய, 'யான் வாழு நாளும் பண்ணன் வாழிய,...........பசிப்பிணி மருத்துவ னில்லம், அணித்தோ சேய்த்தோ கூறுமி னெமக்கே' என்னும் புறப் பாட்டால் நன்கு துணியப்படும். அந்நாளில், அரசர் முதலியோரும், பாணர் போல்வாரை இறப்ப விழிந்தாராக வொதுக்காது, அவர்கள் பால் மிக்க அன்பு பாராட்டி வந்திருக்க வேண்டும் என, இது போன்றவைகளால் கருதப்படுகிறது.

செல்வக்கடுங்கோவைப் பாடிய பாட்டு ஒன்று மிக்க பொருட் சிறப் புடைத்தா யிருத்தலின், அதனையும், அதற்கு, 'வேறுபட வந்த வுவமத் தோற்றம்' என்னும் உவம வியற் சூத்திர வுரையில், பேராசிரியர் தம் நுண்ணறிவு மாட்சியாற் கண்டு எழுதிய உரையையும் ஈண்டுத் தருகின்றாம்.

'வையங் காவலர் வழிமொழிந் தொழுகப்
போகம் வேண்டிப் பொதுச்சொற் பொறாஅ
திடஞ்சிறி தென்னு மூக்கந் துரப்ப
வொடுங்கா வுள்ளத் தோம்பா வீகைக்

கடந்தடு தானைச் சேர லாதனை
யாங்கன மொத்தியோ வீங்குசெலன் மண்டிலம் †
பொழுதென வரைதி புறக்கொடுத் திறத்தி
மாறி வருதி மலைமறைந் தொளித்தி
யகலிரு விசும்பி னானும்
பகல்விளங் கலையாற் பல்கதிர் விரித்தே' (புறம்—8)

இப் பாட்டு, உவமிக்கப்படும் பொருளாகிய சேர லாதனை உவமையாக்கியும், உவமையாகிய திங்கள் மண்டிலத்தைப் பொருளாக்கியும் வைத்து, உள்ளுறை யுவமம் போல, உவமையடை பொருளுக்கும், பொருளடை உவமைக்கும் மறுத்துக் கொள்ளுமாறு இயற்றப்பட்டுள தெனக் கொண்டு, பின் வருமாறு விளக்குகின்றார் பேராசிரியர்.

"'வையங் காவலர் வழிமொழிந் தொழுக' என்றமையால், இவன் தன் றன்மையனா யொழுகுவ தன்றிப், பிற வரசர் வழிபபட மாட்டான்; மதியமாயின், ஒழிந்த கோளும் செல்லத், தானும் செல்லும் என்றும்; 'போகம் வேண்டிப் பொதுச்சொற் பொறாது' என்றமையாமல், இவன் இன்ப நுகர்ச்சியின் பொருட்டுச் சிறப் பில்லாக் கட்டுரை யெய்தான்; மதியமாயின், இருபத் தெழுவர் மகளிரொடு போகந் துய்த்து, எல்லார்க்கும் ஒப்ப அறஞ் செய்யாது, உரோகிணி மேற் கழி பெருங் காதல் கொண்டு சிறப்பில்லாக் கட்டுரை யெய்தும் என்றும்; 'இடஞ் சிறி தென்னு மூக்கந் துரப்ப' என்றமையால், மதி மண்டிலம் எஞ்ஞான்றும் தன் னெல்லைக் கண்ணே

† புறப்பாட்டுரைகாரர், 'பகல் விளங்குதி' எனப் பாடங் கொண்டு, ஞாயிற்று மண்டில மாக்கி யுரைத்தனர்.

வரும் என்றும்; 'ஒடுங்கா வுள்ளம்' என்றமையால், மதியம் தேய்ந்து ஒடுங்கும் என்றும்; 'ஓம்பாவீகை' என்றமையால், மதியமானது நாடோறும் ஓரோவோர் கலையாகப் பல்லுயிர்க்கும் இன்பம் பயக்குமாறு தருவ தல்லது, உடைய வெல்லாம் ஒரு காலே கொடாது என்றும்; 'கடந்தடு தானை' என்றமையால், மதிக்குத் தானையாகிய தாரகை யெல்லாம் பகைக் கதிராகிய பரிதி மண்டிலத்துக்குத் தோற்கும் என்றும்; இவ் வாற்றால் உவமை யடையெல்லாம் எதிர் மறுத்துக் கொள்ளப்பட்டன. 'வீங்கு செலன் மண்டிலம்' எனவே, மதியம் கடையாயினர் கதியிற் செல்லும்; பாட்டுடைத் தலைவன் தலையாயினர் கதியிற் செல்லும் என்றும்; 'பொழுதென வரைதி' எனவே, நாடோறும் நாழிகை வேறுபட்டு எறித்தி யென்றதனால், அவன் பொழுது செய்யான் என்றும்; 'புறக்கொடுத் திறத்தி' எனவே, தோற்றோர் போன்று, ஒளி மழுங்கிச் செல்கின்றாய் யென்றதனால், அவன் பிறர் தோற்றோடக் காய்ந்து சுடர் போல விளங்குவன் என்றும்; 'மாறி வருதி' எனவே, திங்கடோறும் மாறிப் பிறத்தி யென்றதனால், அவன் ஒரு பெற்றியே நிலை பெற்றான் என்றும்; 'மலை மறைந் தொளித்தி' எனவே, மலை சார்ந்த வழித் தோன்றா யென்றதனால், அவன் தன் னாட்டு மலையினும் மீக் கூறப்படும் என்றும்; 'அகலிரு விசும்பினானும்' எனவே, அவன் இவ்வுலகத்து நிலை பேறுடையன் என்றும்; 'பகல் விளங்கலை' எனவே, அவன் இருபொழுதும் விளங்கும் என்றும்; பொருட் குரிய அடை யெல்லாம் அவ்வாறே எதிர் மறுத்துக்

கொள்ளப்பட்டன." கபிலரது பாட்டு என்னும் மாணிக்கத்தை மதிக்க வல்லார் பேராசிரியரே போலும்!

'நல்லவுந் தீயவு மல்ல குவியிணர்ப்
புல்லிலை யெருக்க மாயினு முடையவை
கடவுள் பேணே மென்னா வாங்கு
மடவர் மெல்லியர் செல்லினுங்
கடவன் பாரி கைவண் மையே' (புறம்—106.)

'பாரி பாரி யென்றுபல வேத்தி
யொருவற் புகழ்வர் செந்நாப் புலவர்
பாரி யொருவனு மல்லன்
மாரியு முண்டீண் டுலகுபுரப் பதுவே' (புறம்—107.)

'நாளன் று போகிப் புள்ளிடை தட்பப்
பதனன் று புக்குத் திறனன் று மொழியினும்
வறிது பெயர்குவ ரல்லர் நெறிகொளப்
பாடான் றிரங்கு மருவிப்
பீடுகெழு மலையற் பாடி யோரே' (புறம்—124.)

---

## பதிற்றுப்பத்து.

எட்டுத்தொகையுள் ஒன்றாகிய இந்நூல், முடியுடை வேந்தராகிய சேரர் பதின்மரைச் சங்கப் புலவர் பதின்மர் பாடிய நூறு அகவற்பாக்களை யுடையது. பப்பத்துப் பாக்களுள்ள பத்துப் பகுதிகளைத் தொகுத்த தாகலின், இது பதிற்றுப்பத்து எனப்பட்டது. இதிலுள்ள பாக்களெல்லாம் புறத்திணைக்குரிய துறைப்பொருளமைந்தன. ஒவ்வொரு பாட்டிற்கும் அவற்றிலுள்ள சிறப்புடைய தொடரால் பெயரிட்டிருப்பதும், வண்ணமும், தூக்கும் எழுதி

யிருப்பதும், ஒவ்வொரு பத்தின் ஈற்றிலும் பாடப்பட்டோர் வரலாற்றை யுணர்த்தும் பதிகம் கூறியிருப்பதும் இந்நூலின்கட் சிறப்பாகக் காணப்படுகின்றன. ஒவ்வொரு சிறப்புடைய தொடரால் பாட்டுக்களுக்குப் பெயர் வைத்திருப்பது கொண்டு, பண்டையோர், பாட்டுக்களின் ஒவ்வொரு சொல்லையும் நன்கு ஆராய்ந்து, அவற்றுட் சிறப்புடையன கண்டு வந்தனர் என்னும் உண்மை புலனாகின்றது. இங்ஙனம் பெயர் முதலியவும், பதிகமும் எழுதினோர் இன்னாரின்னாரெனத் துணியக் கூடவில்லை எனினும், அவை மிக்க பழமையுள்ளன வென்றே தெரிகிறது. ஒவ்வொரு பதிகத்தின் பின்பும், அவ்வரசர்கள் பாடினோர்க்கு அளித்த பரிசில் இன்ன வென்றும், அவர்கள் அரசு வீற்றிருந்த காலம் இத்துணைய வென்றும் தெரிவிக்கின்ற கட்டுரைத் தொடர்கள் வரையப்பட்டுள்ளன. அவற்றிலிருந்து, அவ்வரசர்கள் தமிழினிடத்தும், தமிழ்ப் புலவரிடத்தும் எத்துணைப் பெருமதிப்புடைய ரென்பதும், எத்துணைப் பெருவண்மையுடைய ரென்பதும் நன்கு புலனாகின்றன. பதிற்றுப் பத்தில், ஏழாம்பத்துக் கபிலர் பாடியதாகும். அதனாற் பாடப்பட்டோன் செல்வக்கடுங்கோவாழியாதன் என்னும் சேரர் பெருமானாவன். ஏழாம்பத்தின் முதற் பாட்டிலிருந்து, வேள் பாரி துஞ்சியபின்பு கபிலர் செல்வக்கடுங்கோவை யடுத்து இது பாடினாரென்று தெரிகின்றது. இதிலுள்ள,

"புலர்ந்த சாந்திற் புலரா வீகை
மலர்ந்த மார்பின் மாவண் பாரி
முழவுமண் புலர விரவல ரினைய

வாராச சேட்புலம் படர்ந்தோன் அளிக்கென
இரக்கு வாரேனெஞ்சிக் கூறேன்
ஈத்த திரங்கா னீத்தொறு மகிழான்
ஈத்தொறு மாவள் ளியனென நுவலுநின்
நல்லிசை தரவந் திசினே'

என்னுந் தொடர்கள் பாரியின் அருமையையும், கபிலரது பெருந்தன்மையையும், செல்வக்கடுங்கோவின் வண்மையையும் தெரிவித்து, உள்ளத்தைக் கரையச் செய்கின்றன.

செல்வக்கடுங்கோவானவன், அந்தணர்க் கல்லது பணிதலறியான் என்றும், நட்டோர்க் கல்லது கண்ணஞ்சான் என்றும், நிலந்திறம் பெயருங் காலையாயினும் கிளந்த சொல் பொய்த்த லறியான் என்றும், நகையினும் பொய்யா வாய்மையும், பகைவர் புறஞ்சொற்கேளாப் புரைதீ ரொண்மையும் உடையன் என்றும், வேள்வியாற் றேவர் கடனும், கேள்வியால் முனிவர் கடனும், புதல்வராற் பிதிரர் கடனும் செலுத்தியவ னென்றும், அவனது மாதேவி காமர் கடவுளுமாளுங் கற்பினள் என்றும் இப் பத்திலே கபிலர் பாராட்டிக் கூறியுள்ளார். கொடுமணம், பந்தர் என்ற ஊர்களும், நேரி, அயிரை என்ற மலைகளும் செல்வக்கோவுக்கு உரியவாகக் கூறப்பட்டுள்ளன. இன்பமே துய்க்கும் வடபுலம் (உத்தரகுரு) இதிற் கூறப்பட்டுள்ளது.

இவ்வரசர் பெருமகன், மாய வண்ணனை மனனுறப் பெற்றவ னென்றும், அக்கடவுளுக்கு ஓகந்தூர் என்னும் பதியினையளித்தவ னென்றும் பதிகம் கூறுகின்றது. இவன் இருபத்தைந்தியாண்டு அரசு

வீற்றிருந்தா னென்றும், கபிலருக்குச், 'சிறுபுற மென நூறாயிரங் காணங் கொடுத்து, நன்றா வென்னும் குன்றேறி நின்று, தன் கண்ணிற் கண்ட நாடெல்லாம் காட்டிக் கொடுத்தான்' என்றும் பதிகத்தின் பின்னுள்ள கட்டுரைகள் தெரிவிக்கின்றன. சேரமான்பாற் கபிலர் இங்ஙனம் பெரும் பரிசில் பெற்ற செய்தி, இளஞ்சேரலிரும்பொறையைப் பெருங்குன்றூர்கிழார் பாடிய ஒன்பதாம் பத்தில், 'கபிலன் பெற்ற வூரினும் பலவே' என்று உவமையில் வைத்தோதி யிருத்தலாலும் நன்கு வலியுறுத்தப் படுகின்றது.

---

## இன்னா நாற்பது.

பதினெண் கீழ்க்கணக்கினுள் † ஒன்றாய இந்நூல், கடவுள் வாழ்த்து உட்பட நாற்பத்தொரு வெண் பாக்களை யுடையது. இதிலுள்ள ஒவ்வொரு பாட்டும், இன்னது இன்னது 'இன்னா' எனக் கூறுதலின், இஃது இன்னாநாற்பது எனப்

† பழைய நூல்களை மேற் கணக்கெனவும், கீழ்க் கணக்கெனவும் வகுத்து இலக்கணங் கூறி வருகின்றனர்.

'ஐம்பது முதலா ஐந்நூ றீறா
ஐவகைப் பாவும் பொருணெறி மரபின்
தொகுக்கப் படுவது மேற்கணக் காகும்.'

'அடிநிமிர் பில்லாச் செய்யுட் டொகுதி
அறம்பொரு ளின்பம் அடுக்கி யவ்வத்
திறம்பட வுரைப்பது கீழ்க்கணக் காகும்.'

என்னும் சூத்திரங்களால் முறையே இருவகைக் கணக்கி னிலக்கணமும் காண்க.

பெயரெய்திற்று. இதற்கு எதிராக, இன்னது இன்னது 'இனிது' எனக் கூறும் பாக்களையுடைய நூல் இனியதுநாற்பது என வழங்குகிறது. இவற்றுள் ஒன்று மற்றொன்றைப் பார்த்துப் பாடியதாகும் எனக் கருதற்கு இடனுண்டு. பதினெண் கீழ்க் கணக்கு நூல்கள், கடைச் சங்கப் புலவர்களாலும், சிறிது பிற்காலத்து விளங்கிய புலவர்களாலும், இயற்றப் பட்டன வெனத் தெரிகிறது. இவற்றுட் சில நூல்கள் அகப் பொருளாகிய இன்பத்தைக் கூறா நிற்கப், பல நூல்கள் அறம் முதலியன பற்றிய நீதிகளைக் கூறுகின்றன. அவை கூறும் நீதிகள் தாம், பெரும்பாலும் எல்லா மக்களும் மேற் கொள்ளத் தக்கவாயும், உறுதி பயப்பனவாயும் உள்ளன. தமிழிலுள்ள ஒப்புயர் வில்லா நீதி நூல்களிலிருந்தே

பதினெண்கீழ்க் கணக்காவன :—

'நாலடி நான்மணி நானாற்ப தைந்திணைமுப்
பால்கடுகம் கோவை பழமொழி மாமூலம்
இன்னிலை சொற்காஞ்சியோ டேலாதி யென்பவே
கைந்நிலைய வாங் கீழ்க் கணக்கு.' என்றபடி,

நாலடியார், நான்மணிக்கடிகை, இன்னாநாற்பது, இனியதுநாற்பது, கார்நாற்பது, களவழிநாற்பது, ஐந்திணையம்பது, ஐந்திணையெழுபது, திணைமொழியைம்பது, திணைமாலை நூற்றைம்பது, திருக்குறள், திரிகடுகம், ஆசாரக்கோவை, பழமொழி, சிறுபஞ்சமூலம், இன்னிலை, முதுமொழிக்காஞ்சி, ஏலாதி என்பனவாம். வெண்பாவிலுள்ள, 'ஐந்திணை' என்பதன்முன், 'நால்' கூட்டி, நாலைந்திணை யெனக் கொள்ள வேண்டும். இன்னிலை யென்ற விடத்து வேறு பாடமோதிக், கைந்நிலையை ஒன்றாகச் சேர்த் தெண்ணுவாரும், பிறவாறு கூறுவாரும் உளர்.

தமிழ்ப் பெருமக்களின் மேன்மை, மலை மிசை விளக்குப் போல், யாவர்க்கும் விளங்கா நிற்கும். நடுவு நிலை யுடைய மேனாட்டுப் புலவர்களும் இவ் வுண்மையினை அறிந்து கூறி வைத்திருக்கின்றனர். இவ்வாறிருக்கவும், திரு. M. சீனிவாச ஐயங்கார், M.A., அவர்கள், தாம் எழுதிய தமிழாராய்ச்சி (Tamil Studies) என்ற புத்தகத்தில், தமிழ் மக்களை வரம்பின்றிப் புறம் பழித்துக் கூறி வருமிடையே, 'பழங்காலத்தில் தமிழ் மக்கள் ஒழுக்கத்தில் மிகத் தாழ்ந்த நிலையி லிருந்தனர்; ஆதலாற்றான் திருக்குறள் முதலிய நீதி நூல்கள் பல தோன்றுவ வாயின.' என்கின்றனர். நீதி நூல் ஒன்று மில்லையாயின், அக்காலத்து மக்க ளெல்லாம் ஒழுக்கத்தி னுயர்ந்தவ ரென்பது அவரது கருத்துப் போலும்! அவாது தருக்க வறிவு தான் இருந்த வாறென்னே! அவர் பிழையினை அவாது நெஞ்சமே யெடுத்துக் காட்டி யிடை விடா தொறுக்கும் என்பது துணிபு.

இனி, இவ்வாசிரியர், துன்பின் மூலங்கள் இன்னின்ன வெனக்கண்டு, அவற்றையே தொகுத்தெடுத்துக் கூறியிருப்பது பாராட்டற் பாலதொன்றாம். மக்கள் யாவரும், தாம் விரும்புவது இன்பமே யாயினும் இன்ப துன்பங்களின் காரணங்களை யறிந்து, ஏற்ற பெற்றி நடவாமையால், துன்பமே பெரிதும் எய்துகின்றனர். இஃது எக்காலத்திற்கும் பொதுவாக ஒக்கும். இன்பத்தின் காரணத்தை யறிந்து மேற்கொள்ளுதலினும், முதற்கட் செய்யற்பாலது, 'துன்பத்தின் காரணத்தை யறிந்து, அதனின் நீங்குதலாகும். ஆதலாற்றான், அந்தண்மை பூண்ட கபிலர்,

துன்பின் காரணங்களைத் தொகுத்துரைப்பா ராயி னர் என்க.

இந்நூல், திருக்குறள் முதலியன போன்று, கூற வேண்டும் பொருள்களை யெல்லாம், அடைவுபட வகுத்துக் கூறவந்த தன்று ஆகலின், இதனை, அவற் றோடு ஒப்பித்துப் பார்த்தல் பொருந்தாது. ஒரு பேரறிஞர் ஒருவாறாக உலகியலை விரைந்து நோக்குங் கால், அவருள்ளத்தில் இன்னா வெனத் தோன்றிய வைகள், இதில், அவ்வப்படியே வைக்கப் பட்டுள்ளன வென்றே கொள்ளவேண்டும். இதில், நீதிகளே யல் லாமல், சிற்சில மக்களியற்கை முதலியவும் கூறப்பட் டுள. ஓரே கருத்துப் பல விடத்தில் வெவ்வேறு தொடர்களாற் கூறப்பட்டு மிருக்கிறது. கள்ளுண் டல், கவறுடல், ஊனுண்டல் என்பன இதிற் கடியப் பட்டுள்ளன. இந்நூலில் வந்துள்ள, 'ஊனைத்தின் றூனைப் பெருக்குதல் முன்னின்னா', 'குழவிக ளுற்ற பிணி யின்னா', 'கல்லா ருரைக்குங் கருமப் பொரு ளின்னா' என்னும் தொடர்களோடு, இனியது நாற் பதில் வந்துள்ள 'ஊனைத்தின் றூனைப் பெருக்காமை முன்னினிதே', 'குழவி பிணியின்றி வாழ்த லினிதே', 'கற்றறிந்தார் கூறுங் கருமப் பொருளினிதே' என் னும் தொடர்கள் ஒற்றுமை யுறுதல் காண்க.

'பொருளுணர்வா ரில்வழிப் பாட்டுரைத்த லின்னா
இருள்கூர் சிறுநெறித் தாந்தனிப்போக் கின்னா
அருளில்லார் தங்கட் செலவின்னா வின்னா
பொருளில்லார் வண்மை புரிவு.' (10)

## மூத்தநாயனார் திருவிரட்டைமணிமாலை.

இதுவும், பின் வரும் இரண்டு பிரபந்தங்களும், பதினோராந் திருமுறைத் தொகுப்பிற் சேர்ந்துள்ளன. இவற்றுக்கும், சங்கப் புலவர் பாடிய எட்டுத் தொகை, பத்துப் பாட்டுக்களுக்கும் உள்ள வேற்றுமைகள், 'நக்கீரர்' என்னும் நூலிற் காட்டப்பட்டுள்ளன. † 'கக-ம் திருமுறையில் வந்துள்ள மூத்த நாயனார் திருவிரட்டைமணிமாலை, சிவபெருமான் திருவிரட்டைமணிமாலை, சிவபெருமான் திருவந்தாதி யென்னும் பிரபந்தங்கள் மூன்றையும் அருளிச் செய்த கபிலதேவநாயனா ரென்பவர் இவரே யென்று பெரியோர் கூறுவர்.' என்று, மகா மகோபாத்தியாயர், திரு. உ. வே. சாமிநாதைய ரவர்களும், * 'கபிலர் செய்த வேறு பிரபந்தங்கள் சில பதினோராந் திருமுறையிற் சேர்க்கப்பட்டுள்ளன' என்று, திரு. அ. நாராயணசாமி ஐயரவர்களும் ஒருவாறு நெகிழ்ந்து கூறியுள்ளமையும் காண்க. 'ஏனை யந்தாதி சொன்னவன் கபிலன்' என்று சிவபிரான் கூறியதாகத் திருவிளையாடல் கூறுகின்றது.

இது, வெண்பாவும், கட்டளைக் கலித்துறையுமாகச், சொற்றொடர் நிலையாய், மண்டலித்து வரும் இருபது பாட்டுக்களை யுடையது. தமிழில் மூத்த பிள்ளையாராகிய விநாயகக் கடவுளைப் பற்றிக் கூறுவதில் இந்நூலே முதன்மை யுடையது எனத் தோன்றுகிறது. இதிலிருந்து இரண்டு செய்யுட்கள் இளம்

---

† பதிற்றுப்பத்து, நூலாசிரியர்கள் வரலாறு.

* நற்றிணை, பாடினோர் வரலாறு.

பூரண வடிகளால் மேற் கோளாக எடுக்கப் பட்டுள் ளன.

'திருவாக்குஞ் செய்கருமங் கைகூட்டுஞ் செஞ்சொற்
பெருவாக்கும் பீடும் பெருக்கும்—உருவாக்கும்
ஆதலால் வானோரு மானை முகத்தானைக்
காதலால் கூப்புவர்தங் கை.' (1)

---

## சிவபெருமான் திருவிரட்டைமணிமாலை.

இது, வெண்பாவாலும், கட்டளைக் கலித்துறை யாலும் சிவபெருமானைப் பாடியதோர் பிரபந்தம், சொற்றொடர் நிலையாக வுள்ளது. இதில் முப்பத் தேழு பாட்டுக்கள் இப்பொழுது காணப்படுவன.

'அடியோமைத் தாங்கியோ வாடை யுடுத்தோ
குடியோம்ப மாநிதியங் கொண்டோ—பொடியாடு
நெற்றியூர் வாளரவ நீள்சடையாய் நின்னூரை
யொற்றியூ ராக்கிற் றரை.' (15)

---

## சிவபெருமான் திருவந்தாதி.

இது, நேரிசை வெண்பா நூறுடையதாய்ச், சொற்றொடர் நிலையாய், இறுதிப் பாட்டின் இறுதிச் சீர் முதற் பாட்டின் முதற் சீராக மண்டலித்து முடியப் பெற்றுளது. இதன்கண் அகப் பொருட் டுறை யமைந்த பாக்களும் உள்ளன. இதிலுள்ள பாக்களெல்லாம், மடக்கும், திரிபும் பொருந்தியன. சிவபெருமானைப் பற்றிய இவ்விரண்டு பிரபந்தங் களினும், திருவொற்றியூர், திருமுதுகுன்று, திரு வண்ணாமலை, திருக்கோவலூர், திருவலஞ்சுழி, திருச்

சத்திமுற்றம், திருவாரூர், திருப்பழனம், திருவையாறு, திருக்கொடுமுடி முதலிய பல திருப்பதிகள் பாடப்பட்டுள்ளன.

ஊரும தொற்றியூ ருண் கலனும் வெண்டலையே
யூரும் விடையொன் றுடைதோலே—யூரும்
படநாக மட்டார் பணமாலை யீதோ
படநாக மட்டார் பரிசு.' (6)

---

## கபிலம்.

தமிழிலுள்ள பிரபந்தங்களுக்கு இலக்கணங் கூறு நூல் பாட்டியல் எனப்படும். பன்னிருபாட்டியல் என வழங்கும் நூலிலுள்ள சூத்திரங்களின் பின் எழுதியுள்ள பெயர்களால், அவற்றை இயற்றினோர் சங்கப் புலவர் பன்னிருவ ரெனக் கொள்ளப்படுகிறது. இப்பொழுது பன்னிருபாட்டியல் என வழங்குவது, பன்னிருவர் தனித் தனி யியற்றிய பாட்டியல்களி லிருந்து சிற்சில சூத்திரங்களை யெடுத்துத் தொகுத்து வைத்த தாகல் வேண்டும். அதிலுள்ள சூத்திரங்கள் சங்கப் புலவ ரியற்றியன வென்பது துணிபாயின், அதனுள் கபிலர் பெயரும் காணப்படுவதால், அவரும் பாட்டியல் இயற்றியுள்ளா ரென்றும், அது கபிலம் என வழங்கற் குரியதாகும் என்றும் கொள்ளலாகும்.

---

## முடிபு.

இது 'காறும் செய்த ஆராய்ச்சியால், தமிழ் மொழியை வளர்த்தற் பொருட்டாகப், பண்டை நாளிலே, மதுரையம் பதியிற் றமிழ்ச் சங்கம் கடை

பெற்று வந்த தென்பதும், சங்கத்து வீற்றிருந்த நல்லிசைப் புலவர் பெருமக்களுள்ளே கபிலரானவர், கல்வியிலும், செய்யுளியற்றுவதிலும், வாய்மை, அன்பு முதலிய குணங்களிலும் ஒப்புயர் வில்லாராய் விளங்கின ரென்பதும் அவரது பெருமையை அக் காலத்து வேந்தர்களும், புலவர்களும் ஒருங்கு பாராட்டி யுள்ளார்க ளென்பதும், வள்ளலாகிய வேள் பாரிக்கு அவர் ஆருயிர்த் தோழராய் விளங்கின ரென்பதும், வேள்பாரி துஞ்சிய பின், அவனது பிரிவிற்கு ஆற்றாது பலவாறு புலம்பின ரென்பதும், பாரிமகளிரைத் தகுதியுள்ள ஆடவர்க்கு வாழ்க்கைப் படுத்த வேண்டி மிக முயன்றன ரென்பதும், சேரமான் செல்வக்கடுங்கோ வாழியாதன், மலையமான் திருமுடிக்காரி, வேள்பேகன் முதலாயினோரையும் அவர் பாடியுள்ளா ரென்பதும், குறிஞ்சித்திணை பாடுவதில் சிறந்த ஆற்றலுடையவ ரென்பதும், ஆரிய வரசன் பிரகத்தனைத் தமிழறிவுறுத்த அவர் பாடிய குறிஞ்சிப்பாட்டும், குறிஞ்சிக்கலியும் முதலிய செய்யுட்கள், சொற்செறிவும், பொருட் பொலிவும் உடையவாய், அனைத்தழகும் பொருந்தி விளங்குகின்றன வென்பதும், அவற்றிலிருந்தே பண்டை நாளில் தமிழ் அடைந்திருந்த மேன்மையும், தமிழ்மக்களின் உள்ளப் பெருமையும் நன்கு வெளியாகின்றன வென்பதும், பிறவும் தெளிவுறுத்தப் பெற்றமை காண்க.

வாழ்க மன்னவன் வாழ்க மன்னுயிர்
வாழ்க செந்தமிழ் வாழ்க செம்மையே.

---